# பெண்ணிய நோக்கில் தமிழச்சி தங்கபாண்டியன் படைப்புகள்

(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் (PH.D) பட்டத்திற்காகப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு)


ஆய்வாளர்

**ஆ. பழனியாயி**

பதிவு எண்: 0914 – 2013/ 2014

நெறியாளர்

**முனைவர் மு.பழனியப்பன்**

தமிழ் உயராய்வு மையம்

மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் $A^+$ தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம்-பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி – 630 003

மே 2019

முனைவர் **மு.பழனியப்பன்**
இணைப் பேராசிரியர், மற்றும் துறைத்தலைவர்,

## நெறியாளர் சான்றிதழ்

**“பெண்ணிய நோக்கில் தமிழச்சி தங்கபாண்டியன் படைப்புகள்”** என்னும் தலைப்பில் திருமிகு **ஆ. பழனியாயி** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரியில் அவர் முனைவர் பட்ட பகுதிநேர ஆய்வாளராகத் திகழ்ந்தபோது அவரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கப் பெறுகிறது.

இடம் :

நாள்: மேற்பார்வையாளர் ஒப்பம்

துறைத்தலைவர் ஒப்பம்

**ஆ.பழனியாயி**
முனைவர் பட்ட ஆய்வாளர், (பகுதி நேரம்)
தமிழ்த்துறை
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி
சிவகங்கை

## ஆய்வாளர் உறுதிமொழி

**"பெண்ணிய நோக்கில் தமிழச்சி தங்கபாண்டியன் படைப்புகள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்டப் பேற்றிற்காகச் செய்துள்ள இவ்வாய்வு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்:

மேற்பார்வையாளர்

# <u>நன்றியுரை</u>

எனக்கு முனைவர் பட்டப் படிப்பிற்கு அனுமதியளித்து, தொடர்ந்து நான் ஆய்வுப் பணி செய்ய வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், அதன் மதிப்பிற்குரிய துணைவேந்தர் அவர்களுக்கும், மற்றும் பதிவாளர், தேர்வு நெறியாளர் அவர்களுக்கும்,

என் ஆய்வுப்பணி சிறக்க பகுதிநேர ஆய்வாளராக என்னை அனுமதித்து என் ஆய்வுப் பணி தடையின்றி நடைபெற்றுவர உதவிய சிவகங்கை மன்னர் துரைசிங்கம் அரசு கலைக் கல்லூரியின் **முதல்வர்** உள்ளிட்ட, பேராசிரியர்கள், அலுவர்களுக்கும்,

என் முனைவர் பட்ட வழிகாட்டியாக அமைந்து, என் ஆய்வுப் பணி சிறக்க உதவிய நெறியாளர் முனைவர் **மு.பழனியப்பன்** அவர்களுக்கும்,

என் ஆய்வுப்பணி செம்மையுடன் நடைபெற உதவிய தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் **வி.கிளாட்சன்**, மற்றும் தமிழ்த்துறை இரு சுழற்சி பேராசிரியர்களுக்கும்,

எனக்கு நூல்கள் வழங்கி உதவிய நூலகத்தாருக்கும் என் ஆய்வுப்பணி நேரம் தந்து ஆக்கமும் ஊக்கமும் தந்து உதவிய என் குடும்பத்தார் அனைவருக்கும்,

என் முனைவர் பட்டப் படிப்பினைப் படிக்க தக்கவழி கூறி உதவிய என் உடன் பணியாற்றும் ஆசிரியர், ஆசிரியைகளுக்கும், என்னை வழி நடத்தும் தலைமை ஆசிரியை அவர்களுக்கும்

என் மனமார்ந்த நன்றிகள்.

நன்றியுடன்

## பொருளடக்கம்

பக்கம்

# முன்னுரை

தற்காலத்தில் தமிழ் இலக்கியப் பரப்பில் படைப்புப்பணிகளில் பெண்கள் குறிப்பிடத்தகுந்த இடம் பெற்றுவருகின்றனர். கவிதை, கட்டுரை, புதினம், சிறுகதை போன்ற இலக்கிய வகைகளில் பெண்களின் பங்கு கணிசமான அளவில் உள்ளது. புதுக்கவிதைத்துறையில் ஏராளமாக பெண்கவிஞர்கள் தற்போது எழுதத் தொடங்கியுள்ளனர். அவர்களின் ஒருவர் தமிழச்சி தங்கபாண்டியன் ஆவார். கல்வி, அரசியல், கலை போன்ற பல துறைகளில் சிறந்த விளங்கும் இவர் தன் பிறந்த மண் சார்ந்த படைப்பாளராக விளங்குகின்றார்.

விருதுநகர் மாவட்டத்தில் உள்ள மல்லாங்கிணறு என்ற கிராமத்தில் பிறந்த இப்படைப்பாளரின் படைப்புகளில் இவர் கிராமத்தின் மண்வாசனை, குறிப்பாகக் கிராமத்துப் பெண்களின் வாழ்க்கைமுறை அதிக அளவில் விரவிக் கிடக்கின்றது. புதுக்கவிதை, மருத்துவக் கட்டுரைகள், விமர்சனக் கட்டுரைகள், சந்திப்புக் கட்டுரைகள் என்று பல துறைகளில் எழுதிவரும் இவரின் படைப்புகளில் தன் கிராம வெளிப்பாடு என்ற அடிப்படை ஊடு இழையாக அமைந்து நிற்கிறது.

இவரின் ஒட்டு மொத்த படைப்புகளையும் பெண்ணிய நோக்கில் ஆராய்வது என்ற அடிப்படையில் இவ்வாய்வு வடிவமைக்கப்பெற்றுள்ளது. பெண்களின் முன்னேற்றத்திற்கு உதவுவது பெண்ணியம் ஆகும். இது பல வகைப்பட்டதாகப் பாகுபடுத்தப்படுகிறது. மரபுசார் பெண்ணியம், மிதவாதப் பெண்ணியம், தீவிரவாத பெண்ணியம், சமதர்ம பெண்ணியம், ஆன்மீக பெண்ணியம், கிறித்துவ பெண்ணியம், மனை பெண்ணியம், தலைமைத்துவம் வேண்டாப் பெண்ணியம், கருப்புப் பெண்ணியம், சூழல் பெண்ணியம் என்ற பலவகைகளாக பெண்ணியம் வகைப்படுத்தப்பெற்றுள்ளது. இப்படைப்பாளர் மரபுசார் பெண்ணியம் சார்ந்தவராக இவரின் படைப்புகள் வழி

அறியப்பெறுகிறார். இருப்பினும் தீவிரவாதப் பெண்ணியம் சார்ந்த பெண்ணிய நிலைப்பாட்டாளர்களையும் இவர் ஆதரிக்கிறார். இவ்வகையில் பெண்ணியச் சிந்தனை வாய்ந்தவர் இவர் என்பது உறுதியாகின்றது. இவரின் படைப்புகளில் காணப்படும் மரபு சார்ந்த பெண்ணிய நிலைப்பாட்டினை எடுத்துரைப்பதாக இவ்வாய்வேடு செய்யப்பெற்றுள்ளது.

**ஆய்வுத் தலைப்பு அறிமுகம்**

"பெண்ணிய நோக்கில் தமிழச்சி தங்கபாண்டியனின் படைப்புகள்" என்ற தலைப்பில் இவ்வாய்வேடு செய்யப்பட்டுள்ளது. இத்தலைப்பில் அமைக்கப்பெற்றுள்ள பெண்ணிய நோக்கு என்பது பெண் படைப்பில் காணப்படும் பெண் முன்னேற்ற சிந்தனைகள் என்ற நிலைப்பாட்டினை உடையது. தமிழச்சி தங்கபாண்டியன் கவிதை, உரைநடை ஆகிய இருதுறைகளில் தன் எழுத்தாற்றலை வெளிப்படுத்தியுள்ளார். இவ்விரு துறைகளையும் உட்படுத்தி படைப்புகள் என்ற நிலையில் இவ்வாய்வு செய்யப் பெற்றுள்ளது.

**ஆய்வின் எல்லை**

இவ்வாய்வின் எல்லைகளான தமிழச்சி தங்கபாண்டியன எழுதிய கவிதைப் படைப்புகளான எஞ்சோட்டுப்பெண், வனப்பேச்சி, மஞ்சணத்தி, அருகன், ஆகிய நான்கும் உரைநடைப் படைப்புகளான பாம்படம், சொல்தொடும் தூரம், மயிலிறகு மனசு, மண்வாசம் ஆகிய நான்கும் அமைகின்றன. இப்படைப்புகளில் காணப்படும் பெண்ணியச் சிந்தனைகள் இங்கு ஆய்வுக்குக் கொள்ளப்படுகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வு செய்திகளை வகுத்தல், பகுத்தல் நிலையில் வகை தொகை ஆய்வாக அமைகின்றது. மேலும் பெண்ணிய நோக்கு சார்ந்து ஆய்வு அணுகுமுறை இங்குக் கொள்ளப்பெற்றுள்ளது. குறிப்பாக பெண்ணிய

இலக்கியத்திறனாய்வில் பெண் மையத்திறனாய்வினை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பெற்றுள்ளது. பெண்ணிய இலக்கியத்திறனாய்வின் இரு வகைகளாக பெண்ணிய வாசிப்புத் திறனாய்வு, பெண் மையத் திறனாய்வு என்பன அமைகின்றன. ஆண் படைப்புகளை பெண் நோக்கில் ஆராய்வது பெண்ணிய வாசிப்புத் திறனாய்வு என்று வகைப்படுத்துவர். பெண் எழுதிய படைப்புகளை பெண் நோக்கில் ஆராய்வது பெண் மையத் திறனாய்வு ஆகும். இவற்றில் பெண் மையத் திறனாய்வு அடிப்படையில் இவ்வாய்வு செய்யப்படுகிறது.

**<u>ஆய்வுச் சிக்கல்கள்</u>**

இவ்வாய்வில் சில சிக்கல்கள் எழுந்தன. அவற்றிற்கு உரிய முறையில் தீர்வு கண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பெற்றுள்ளது.

1. தமிழச்சி தங்கபாண்டியன் வட்டார வழக்கு சார்ந்த படைப்பாளராக விளங்குகிறார். இதன் காரணமாக அவரின் படைப்புகளில் வட்டார வழக்குச் சொற்கள் அதிகம் காணப்பெறுகின்றன. இவற்றை உரிய சூழல் கொண்டு பொருளறிந்து ஆய்வாளர் ஆய்வுக்கு உட்படுத்திக் கொண்ட நிலையில் இச்சிக்கல் தீர்த்துக்கொள்ளப்பெற்றது.
2. தமிழச்சி தங்கபாண்டியனின் வாழ்க்கை வரலாறு அறியப்படுகையில் சில சிக்கல்கள், தொடர்பின்மை ஏற்பட்ட நிலையில் அவற்றையும் முழு படைப்புகளையும் படித்து அறிந்து கொண்ட நிலையிலும், அவர் தந்த பேட்டிகளைப் படித்து அறிந்த நிலையிலும் அவை தீர்த்துக்கொள்ளப்பெற்றன.
3. உறவு முறைகள், சமுதாயத்தொடர்புகள் இவற்றைப் புரிந்து கொள்வதில் சற்று கடினம் ஏற்பட்டநிலையில் அவையும் முழுமையான படைப்புகளை ஆராய்ந்த நிலையில்விலகின.

**கருதுகோள்.**

தமிழச்சி தங்கபாண்டியன் நகர வாழ்வினை விட கிராம வாழ்க்கையைப் பெரிதும் நேசித்து, அக்கிராமங்களில் வாழும் பெண்களின் கவலைகளை, பாசத்தை, அன்பினை வெளிப்படுத்தும் வட்டாரம் சார்ந்த படைப்புக் கலைஞராகத் தன் படைப்புகளின் வழி வெளிப்பட்டுள்ளார் என்ற கருதுகோளை முன்வைத்து இவ்வாய்வு மேற்கொள்ளப்பெறுகிறது.

**ஆய்வுப் பகுப்புகள்**

இவ்வாய்வு பின்வரும் ஆய்வுப் பகுப்புகளை உடையதாகும்.

முன்னுரை

இயல்.1. வாழ்வும் பங்களிப்புகளும்

இயல்.2. பெண்ணிய நோக்கில் கவிதைப் படைப்புகள்

இயல்.3. பெண்ணிய நோக்கில் உரைநடைப் படைப்புகள்

இயல்.4. பெண்களின் நிலை

முடிவுகள்

இவ்வியல்கள் பற்றிய விளக்கங்கள் பின்வருமாறு.

**ஆய்வுப் பகுப்புகள் பற்றிய விளக்கங்கள்**

**முன்னுரை**

ஆய்வு அறிமுகம், ஆய்வு எல்லை, ஆய்வின் கருதுகோள், ஆய்வு நெறிமுறைகள், ஆய்வுப் பகுப்புகள், ஆகியன பற்றிய விளக்கங்கள் இம்முன்னுரைப்பகுதியில் விளக்கப்பெறுகின்றன.

**இயல். 1. வாழ்வும் பங்களிப்புகளும்**

தமிழச்சி தங்கபாண்டியனின் வாழ்க்கை பற்றியும், அவரின் பங்களிப்புகள் பற்றியும் இவ்வியல் எடுத்துரைக்கிறது. அவரின் வாழ்க்கைச் சூழல், மற்றும் படைப்புச் சூழல்கள் இங்கு விவரிக்கப்பெறுகின்றன. மேலும் அவரின் கவிதை படைப்புகள் மற்றும் உரைநடைப் படைப்புகள் பற்றிய அறிமுகமும் மதிப்பீடும் இவ்வியலில் செய்யப்படுகிறது.

**இயல்.2. பெண்ணிய நோக்கில் கவிதைப் படைப்புகள்**

தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைப் படைப்புகள் நான்கு தொகுதிகள் என்ற அளவில் உள்ளன. அவற்றில் காணப்படும் பெண்ணியக் கூறுகளை இவ்வியல் எடுத்துரைக்கின்றது. பெண்மொழிக் கூறுகளான சொற்கள், நடை, உவமைகள் பற்றிய செய்திகள் இங்கு ஆராயப்பெறுகின்றன. மேலும் பெண்களின் உணர்வுகள், மற்றும் கவிதைகளின் தனித்தன்மைகள் இவ்வியலில் ஆராயப் பெறுகின்றன.

**இயல். 3 பெண்ணிய நோக்கில் உரைநடைப் படைப்புகள்**

தமிழச்சி தங்கபாண்டியன் நான்கு உரைநடைப் படைப்புகளைப் படைத்துள்ளார். அதில் இடம்பெறும் பெண்ணியக் கூறுகளை இவ்வியல் ஆராய்கிறது. பெண் சார்ந்த பழமொழிகள், பெண் சார்ந்த கைவைத்திய முறைகள் போன்றனவும் இவ்வியலில் ஆராயப்பெறுகின்றன.

**இயல். 4. பெண்களின் நிலை**

தமிழச்சி தங்கபாண்டினின் கவிதை மற்றும் உரைநடைப் படைப்புகளில் எடுத்துக்காட்டப்பெற்றுள்ள பெண்களின் நிலை பற்றி இவ்வியல் ஆராய்கிறது. இவர் தம் படைப்புகளின் வழியாக பெறப்படும் பெண் சமுதாய செயல்பாடுகள், தடைகள், முன்னேற்றங்கள் ஆகியன இவ்வியலில் ஆராயப் பெறுகின்றன.

## முடிவுகள்

இவ்வாய்வின் வழியாகப் பெறப்பெற்ற முடிவுகள் அனைத்தும் இப்பகுதியில் தொகுத்துரைக்கப்பெறுகின்றன.

தக்க துணைநூற்பட்டியலும், பின்னிணைப்புகளும் இணைக்கப்பெற்று இவ்வாய்வு நிறைவு பெறுகின்றது.

## இயல். 1

## தமிழச்சி தங்கபாண்டியனின் வாழ்வும், பங்களிப்புகளும்

இருபத்தொன்றாம் நூற்றாண்டில் பல நவீன எழுத்துமுறைகள் தமிழ் இலக்கியப் பரப்பில் எழுந்தன. புதிய நூற்றாண்டு பிறந்த நிலையில் நவீனச் சிந்தனையுடன் பல படைப்பாளர்கள் தங்களின் படைப்புகளை முன்வைத்து வருகின்றனர். குறிப்பாக பெண் படைப்பாளர்கள் படைப்பாளுமையுடன் விளங்கும் காலமாக, களமாக இருபத்தொன்றாம் நூற்றாண்டு தமிழ்க்களம் விளங்குகின்றது. படிப்பினில் உயர்வு பெற்றுக் கல்வித்துறையில் பணியாற்றும் பெண்கள், தொழில் நுட்பத் திறன் மிக்க பணிகளை ஆற்றும் பெண்கள், உயிர் காக்கும் மருத்துவப் பணியில் இருக்கும் பெண்கள், ஆளுமைப் பணிகளில் இருக்கும் பெண்கள் போன்றோர் இலக்கியங்கள் படைக்க இக்காலத்தில் முன்வருகின்றனர். இவர்கள் எழுதும் இலக்கியங்கள் இவர்களின் அனுபவங்களுடன் கலந்து, புதுநிலைப்பட்ட போக்குடைய புதுவகை எழுத்தாக்கங்களாக வெளிப்பட்டு வருகின்றன.

இவ்வரிசையில் பல பெண் படைப்பாளர்களைக் குறிப்பிடலாம். லீனா மணிமேகலை, தாமரை, கனிமொழி, குட்டிரேவதி, சக்தி ஜோதி, திரிசடை, சுகிர்தராணி, மாலதி மைத்ரி, தி, பரமேஸ்வரி, சல்மா, கு. உமாதேவி, இளம்பிறை, கவிதா, செ. பிருந்தா, எழிலரசி, அ. வெண்ணிலா, புதிய மாதவி, எஸ். தேன்மொழி, தமிழ்ச்செல்வி போன்ற பெண் படைப்பாளர்களின் படைப்புகள் அறிவு நிலையிலும், உணர்வு நிலையிலும் நவீனச் சிந்தனைகள் பெற்றுவிளங்கின. இவ்வரிசையில் தமிழச்சி தங்க பாண்டியன் அவர்களின் படைப்புகளும் காணத்தக்கவையாகும். ஆங்கில இலக்கியம் படித்த இக்கவிஞரின் படைப்பில் தமிழ்நாட்டு மக்களின் கிராம அனுபவம் கிளைத்து நிற்கிறது. புதுநிலை உலகிற்கு, பழமையையும் கிராமத்தையும் இனம் காட்டுவதுடன், நவீனத்தின் சாயல் தமிழகத்தில் படிவதையும் இவரின் கவிதைகள் காட்டி நிற்கின்றன.

இவரின் படைப்புகளில் மெல்லிய பெண்ணியவாதம் முன் நிற்கிறது. அது மரபு சார் பெண்ணிய நிலைப்பட்டது. இவரின் மரபு சார் பெண்ணியக் கருத்துகளுக்கு அடிப்படைக் காரணம் இவர் மரபு சார்ந்த விடுதலையுடன் வளர்க்கப்பட்ட நிலையே ஆகும். ஆகவே இவரின் படைப்புகளில் காணலாகும் பெண் தன்மையை அறிந்து கொள்ள இவரின் வாழ்க்கை நிலையைப் பற்றி அறிந்து கொள்ளவேண்டியது அவசியமாகின்றது. இவ்வியல் இவரின் வாழ்வனுபவத்தை விளக்குவதாக உள்ளது.

**பிறப்பு**

தமிழச்சி தங்கபாண்டியன் விருதுநகர் மாவட்டம் மல்லாங்கிணறு கிராமத்தில் பிறந்தார். அவரின் பிறப்பு குறித்து "நான் பிறந்து வளர்ந்தது கிராமம். விருதுநகர் மாவட்டத்தில் உள்ள மல்லாங்கிணறுதான் நான் பிறந்த ஊர். அதுதான் எனது பூர்வீகம். அங்குதான் என் பெற்றோர்கள் இருக்கிறார்கள்"[1] என்ற குறிப்பின் வழியாக, இவரின் பூர்வீகம் பற்றி அறிந்து கொள்ளமுடிகின்றது. தற்போது சென்னையில் வாழ்ந்து வருகிறார். இவரின் குடும்பம் அரசியல் பின்புலம் வாய்ந்தது.

இவருடைய தந்தையாரின் பெயர் தங்கபாண்டியன். இவரின் தாயாரின் பெயர் ராஜாமணி. இவருடைய பெற்றோர் தந்தையும் தாயும் ஆசிரியப் பணியை மேற்கொண்டிருந்தவர்கள். இவருடன் உடன் பிறந்தவர் தம்பி தங்கம் தென்னரசு ஆவார்.

இவரின் தந்தையார் தங்க பாண்டியன் தமிழ்நாடு சட்டமன்ற மேலவை உறுப்பினராக விளங்கியவர். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்து ஒன்பதாம் ஆண்டு, ஆயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஆறாம் ஆண்டு ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற தேர்தலில் சட்ட மன்ற உறுப்பினராக விளங்கியவர் ஆவார். இவர் வணிக வரித்துறை அமைச்சராகவும் பொறுப்பில் இருந்துள்ளார். இவரின் அரசியல் பின்னணி தமிழச்சி தங்கபாண்டியனுக்கு அமைந்தது.

இவரின் தம்பி தங்கம் தென்னரசு பொறியியல் பட்டதாரியாவார். இவர் சட்ட மன்ற உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இதன்வழியாகப் பள்ளிக்கல்வித் துறை அமைச்சராகப் பொறுப்பேற்றார். இவரின் அரசியல் பின்னணியும் தமிழச்சி தங்கபாண்டியனுக்கு அமைந்தது.

இவரின் வாழ்வில் அரசியல் பின்னணி அமைந்தது குறித்துப் பின்வருமாறு இவர் குறிப்பிடுகிறார்.

"என்னுடைய இலக்கியப் பயணம் சிறு வயதிலிருந்தே தொடங்கியது என்றே சொல்லலாம். நான் வளர்ந்த சூழல் எப்போதும் புத்தங்களும் இலக்கியம் குறித்த தேடல்களும் உரையாடல்களும் அது சம்மந்தமான நபர்களும் இருக்கக்கூடிய சூழலில் எனது குடும்பம் இருந்தது. எனது தந்தை ஆரம்பகால திராவிடக் கழக உறுப்பினர். அதன் பிறகு தி.மு.கவிலும் தொடர்ந்து பங்கேற்பவராக இருந்திருக்கிறார். பெரியார் குறித்த சிந்தனைகளோடு வளர்ந்த நான் பாரதி, பாரதிதாசன் பாடல்கள், பின்பு திராவிட இயக்க ஏடுகள் போன்றவைகளைப் படிக்கக்கூடிய வாய்ப்பு இயற்கையிலேயே எனது குடும்பச் சூழலில் இருந்ததால் என்னுடைய பத்து பதினொன்றாவது வயதிலேயே எனது இலக்கியப் பயணத்தைத் தொடங்கி விட்டேன் என்றே சொல்லலாம்"[2] என்ற இவரின் கருத்து வழியாக இவர் பெற்ற அரசியல் பின்புலத்தை அறிந்து கொள்ள முடிகின்றது.

**<u>படிப்பு</u>**

தமிழச்சி தங்கபாண்டியன் தன் சொந்த ஊரிலேயே ஆரம்பக்கல்வியைப் பெற்றார். அதன்பின் மேல்நிலைக்கல்வியை விருதுநகரில் உள்ள பள்ளியில் ஆங்கில வழிக் கல்வியை, விடுதியில் தங்கிப் பயின்றார்.

இவர் இளங்கலை ஆங்கில இலக்கியம் என்ற (பி.ஏ) பட்டப்படிப்பை மதுரை மீனாட்சி அரசு பெண்கள் கல்லூரியில் பெற்றார். இதன்பின்

முதுகலை (எம்.ஏ) ஆங்கில இலக்கிய பட்டப்படிப்பை மதுரை தியாகராசர் கல்லூரியில் கற்றார்.

இதன்பின் இளமுனைவர் பட்டப்படிப்பினை (எம்.பில்) மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இணைந்துப் பயின்றார். அங்கு இவர் 'இலண்டன் ஸ்கூல் ஆப் எக்கனமிக்ஸ்' என்கிற மிகப்பெரிய நிறுவனத்தை உருவாக்கிய பியடிஸ் ஸ்வப் ' என்கிற அம்மையாரின் பணிகள் குறித்த ஆய்வினை மேற்கொண்டார். அவ்வம்மையார் எழுதிய 'மை அப்ரன்டிஸ்சிப்' என்ற புத்தகத்தைத் முதன்மைச் சான்றாக வைத்து இவர் ஆராய்ச்சியை மேற்கொண்டார். இவரின் நெறியாளராகப் பேராசிரியர் சுப்பாராவ் என்பவர் அமைந்தார்.

இவர் தனது முனைவர் பட்டத்தை (பி.எச்.டி) 'இலங்கை புலம்பெயர் தமிழர்களின் படைப்பிலக்கிய வெளிப்பாடுகள்' என்ற தலைப்பில் செய்தார். இவ்வாய்வு ஆஸ்திரேலியாவில் வாழுகின்ற ஈழத்தமிழர்களின் ஆங்கிலப் படைப்புகளை மையமிட்டு அமைந்தது. இவர் தன் முனைவர் பட்ட ஆய்வினைச் சென்னைப் பல்கலைக்கழத்தின் வழி மேற்கொண்டார். இவரது முனைவர் பட்ட ஆய்விற்கு எத்திராஜ் மகளிர் கல்லூரியில் ஆங்கிலத்துறையில் பேராசிரியையாகப் பணிபுரிந்து கொண்டிருந்த முனைவர். அ. நிர்மலா என்பவர் வழிகாட்டுநராகத் திகழ்ந்தார்.

இவ்வாறு இவர் தன் படிப்பினை முனைவர் பட்டம் என்ற உயர்நிலைவரை கொண்டு செலுத்துச் சிறந்த கல்வியாளராக, ஆய்வாளராக வளர்ச்சி பெற்றார்.

**பணி**

இவர் தன் முனைவர் பட்டத்தினைப் பெற்றபின் சென்னை, அண்ணா நகரில் உள்ள வள்ளியம்மாள் மகளிர் கல்லூரி என்ற தனியார் கல்லூரியில் ஆங்கிலத்துறை பேராசிரியையாகத் தன் பணியைத் தொடங்கினார். அதன் பின்

நாமக்கல்லில் உள்ள பி.ஜி.பி கலை அறிவியல் கல்லூரியில் இரண்டு ஆண்டுகள் பேராசிரியையாக பணிபுரிந்தார்.

அங்கு பணிபுரிந்து கொண்டிருந்தபோது தான் ஆசிரியர் தேர்வு வாரியம் மூலம் நடத்தப்பெற்ற தமிழகக் கல்லூரி ஆசிரியர் பணிக்குரிய தேர்வு எழுதி தேர்ச்சி பெற்று :ஆயிரத்துத் தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஆறாம் ஆண்டில் இராணிமேரிக் கல்லூரியில் அரசு கல்லூரி பேராசிரியையாகப் பணி நியமனம் பெற்றார்.

பாரம்பரியம் மிக்க நூறு ஆண்டுகள் பழமையான அக்கல்லூரியில் பன்னிரெண்டு ஆண்டுகள் பணிபுரிந்த பிறகு தாமாகவே பணியிலிருந்து இவர் தம் சொந்த காரணங்களுக்காக விலகினார். தொடர்ந்து இலக்கியச் செயல்பாடுகள் பலவற்றல் இவர் இயங்கி வருகிறார். மொழிபெயர்ப்பு, நாடகம், படைப்பு போன்ற பல துறைகளில் இவர் செயலாற்றி வருகிறார்.

**குடும்பம்**

தமிழச்சி தங்கபாண்டியனின் கணவர் திரு. சந்திரசேகர் ஆவார். இவர் காவல்துறையில் உயர் அதிகாரியாகப் பணியாற்றி வருகின்றார். இவர்களுக்கு சரயு , நித்திலா என்னும் இரண்டு பெண் குழந்தைகள் உள்ளனர்.

**படைப்பாக்க முயற்சிகள்**

தமிழச்சி தங்கபாண்டியனின் இயற்பெயர் சுமதி என்பதாகும். இவர் தன் பெயராக தமிழச்சி என்பதை அமைத்துக்கொ்ணடார். இவர் அரசியலில் நுழையும் நிலையில் இவரின் இப்பெயருடன் தங்கபாண்டியன் என்ற இவரின் தந்தையார் பெயரும் இணைந்து கொண்டது.

தொடக்கத்தில் சுமதி தங்க பாண்டியனாக இருந்த இவர், கவிதை எழுத, தமிழ் இலக்கியப் பரப்பிற்கு வரும்போது, ஏற்கனவே சுமதி மணிமுடி

என்ற பெயரில் ஒரு பெண்கவிஞர் இருப்பதை உணர்ந்து தன் பெயரை அவ்வடையாளத்தில் இருந்து மாற்றி அமைத்துக்கொள்ள முடிவு செய்தார்.

இவருடைய முதல் கவிதை முரசொலி இதழில், தமிழச்சி என்ற பெயரில் வெளிவந்தது. "எழுதுகோலை எடு தலைவா" என்ற தலைப்பில் அக்கவிதை வெளிவந்தது. அந்தக் கவிதைக்கு இடப்பட்ட பெயரையே, தன்னுடைய இலக்கியப் பரப்பிற்கான பெயராக இவர் வைத்துக்கொண்டார்.

தமிழச்சி தங்கபாண்டியன் என்ற பெயரில் தன் இலக்கிய படைப்பாக்கத்தைத் தொடங்கிய தமிழச்சி தங்கபாண்டியனின் படைப்புகள் பின்வருமாறு.

**<u>தமிழச்சியின் இலக்கியப் படைப்புகள்</u>**

**<u>கவிதைத் தொகுப்புகள்</u>**

1. எஞ்சோட்டுப்பெண்
2. வனப்பேச்சி
3. மஞ்சணத்தி
4. அருகன்

ஆகிய நான்கும் இவரின் கவிதைத் தொகுதிகளாகும்.

**<u>உரைநடைப் படைப்புகள்</u>**

1. பாம்படம்
2. சொல்தொடும் தூரம்
3. மயிலிறகு மனசு
4. மண்வாசம்

ஆகிய நான்கும் இவரின் உரைநடைப்பகுப்புகள் ஆகும்.

**பேட்டிகளின் தொகுப்பு**

அவ்வப்போது இதழ்கள் வாயிலாக இவரிடம் காணப்பெற்ற பேட்டிகளின் தொகுப்பாக அமைவது "பேச்சரவம் கேட்டிலையோ" என்ற தொகுப்பாகும்.

**விமர்சன நூல்**

இவர் பிற படைப்பாளர்களைப் பற்றி எழுதிய விமர்சனங்களின் தொகுப்பு, "காற்று கொணர்ந்த கடிதங்கள்" என்பதாகும்.

இப்படைப்புகள் பற்றிய அறிமுகங்கள் பின்வருமாறு.

**தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைப் படைப்புகள்**

**எஞ்சோட்டுப்பெண்**-

தமிழச்சி தங்கபாண்டியனின் முதல் கவிதைத் தொகுப்பு 'எஞ்சோட்டுப்பெண்' என்ற தொகுப்பாகும். இத்தொகுப்பு இரண்டாயிரத்து மூன்றாம் ஆண்டில் மித்ரா பதிப்பக வெளியீடாக வெளிவந்தது. இவர் சார்ந்த கிராமத்தின் மனிதர்களையும், மண் வாசனையையும் முன் வைத்து எழுந்த கவிதைத் தொகுப்பு இதுவாகும்.

இத்தொகுப்பிற்குப் பலர் முன்னுரை வரைந்துள்ளனர். எஸ். பொ, கவிஞர் த. பழமலாய், அறிவுமதி, அளவெட்டி கிறீசுக் கந்தராசா போன்றோர் முன்னுரை எழுதியுள்ளனர். இவற்றைத் தொடர்ந்து 'மண் கவுச்சை முத்தம்' என்ற தலைப்பில் ஆசிரியர் உரையைத் தமிழச்சி எழுதியுள்ளார். அதில்

'என் கவிதைகளின் முழு வீச்சானதொரு பரவலுக்கு ஆரம்பமாக அமைந்தது தாயுமாயிருந்த என் தந்தையின் மரணம்தான். அந்தப் பேரிழப்பின் பெருவலியும் துக்கமும் என்னைப் பிச்சியாக்கி முடக்கிப் போட்ட காலங்களில் கவிதையே என்னைத் தாதியாய்த் தாங்கித் தேற்றியிருக்கிறது. ஆறாத ரணமான அப்பெருந்துயரில் கண்ணீர் உப்பு கரிந்து விழுந்து காந்துகையில் கவிதைதான்

மயிலிறகு மருந்தாயிருக்கின்றது”[3] என்று அவர் தான் கவிதையால் தாங்கப்பெற்ற விதத்தை இத்தொகுப்பின் முன்னுரையில் பதிவு செய்துள்ளார்.

எஞ்சோட்டுப்பெண் கவிதைத்தொகுப்பில் முரசொலி, குங்குமம், அவள் விகடன், கணையாழி போன்ற இதழ்களில் வெளிவந்த கவிதைகளும் தொகுக்கப்பட்டுள்ளன. இத்தொகுப்பு வெளிவரக் காரணமாக இருந்த முனைவர் சி.டி. இந்திரா, முனைவர் ப. இரவிக்குமார், முனைவர் குமரவேல் ஆகியோரையும் இவர் இத்தொகுப்பில் நன்றியுடன் நினைந்துள்ளார். இதில் அப்பத்தா என்பதில் தொடங்கி உயிர்ச்சுவை வரை நூற்றுக்கும் மேற்பட்ட கவிதைகள் தொகுக்கப்பெற்றுள்ளன.

இதனை மித்ரா ஆர்டஸ் மற்றும் கிரியேஷன்ஸ் நிறுவனம் இரண்டாயிரத்து மூன்றாம் ஆண்டில் முதல் பதிப்பாக வெளியிட்டுள்ளது. இத்தொகுப்பு பல பதிப்புகளாக வெளிவந்துள்ளது.

<u>வனப்பேச்சி</u>

உயிர்மை பதிப்பகத்தின் வெளியீடாக இரண்டாயிரத்து ஏழாம் ஆண்டில் வனப் பேச்சி என்ற தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைத்தொகுப்பு வெளியிடப்பெற்றுள்ளது. இதற்கு மனுஷ்ய புத்திரன் பதிப்புரை எழுதியுள்ளார். “கிராமம், நகரம், அரசியல் என்ற முப்பரிமாணத்தின்வழியே தனது புற உலகையும் அக உலகையும் இக்கவிதைகள் கட்டமைத்துக்கொள்கின்றன”[4] என்று இத்தொகுப்பினை அறிமுகம் செய்துள்ளார் மனுஷ்ய புத்திரன்.

பிரம்மராசன் இத்தொகுப்பிற்கு “வனப்பேச்சியின் நகர் பிரவேசம், தமிழச்சியின் சமீப கவிதைகள் பற்றிய மனப்பதிவுகள்” என்ற தலைப்பில் ஒரு மதிப்புரை வரைந்துள்ளார். கட்டற்ற வனதேவதையின் கனவுகள் என்ற தலைப்பில் தன்னுடைய உரை ஒன்றைத் தமிழச்சி தங்க பாண்டியன் எழுதியுள்ளார்.

‘பேச்சி எனப்படுகிற திறந்தவெளியில் இருக்கின்ற ஒரு கிராமதுச் சிறுதெய்வப் பெண் உருவம் என இளம் பிராயத்தின் முதல் கூட்டுக்காரி. வளர் பருவத்தில் உடன் சுற்றித் திரிந்த சோட்டுக்காரி யௌவனத்திலோ மிக அந்தரங்கமாக என்னுடன் கலந்து விட்ட அர்த்தநாரி. ஒருகட்டற்ற வனதேவதையாகத் திரிகின்ற என் கனவுகளின் சொந்தக்காரி. என்வேர்கள் நிரவியிருக்கின்ற கிராமம் விட்டு லௌகீக இருத்தலுக்கான இடமான இந்த நகர்த்தல் என் அலைந்துணர்வையும் ஒன்றாமையையும் நிர்கதியையும் பகிர்ந்து கொள்ளும் சகபயணி. அவளுடனான என் உறவு பகுத்தறிவின் ஆய்தலுக்கு உட்படாத ஒரு நறுமணமாய் என் கவிதைகளில் ஊடோடி இருப்பதாய் நான் உணர்கிறேன்.” [5] என்று வனப்பேச்சி என்ற பெண் சிறுதெய்வத்துடனான தன் உறவினைக் காட்டித் தன் கவிதைத்தொகுப்பிற்கு அந்தத் தலைப்பினை வைத்தமைக்கான காரணத்தையும் சுட்டியுள்ளார் தமிழச்சி தங்க பாண்டியன். இத்தொகுப்பில் மொத்தம் நூற்றுப் பத்தொன்பது கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இதனுள் இருபத்தொன்பதாம் தலைப்பாக வனப்பேச்சி என்ற கவிதை அமைந்துள்ளது. அதுவே இத்தொகுப்பிற்கான தலைப்பாகவும் அமைந்துள்ளது.

இத்தொகுப்பினை தன் அம்மா ராஜா மணிக்கு சமர்ப்பித்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**<u>மஞ்சணத்தி</u>**

தமிழச்சி தங்கபாண்டியன் எழுதிய மூன்றாவது கவிதைத் தொகுப்பு ‘மஞ்சணத்தி’ ஆகும். இது உயிர்மை பதிப்பக வெளியீடாக டிசம்பர் இரண்டாயிரத்து ஒன்பதாம் ஆண்டில் வெளிவந்தது. சங்கத் திணை மரபினை முன்னெடுத்துச் செல்பவையாக ‘மஞ்சணத்தி’ தொகுப்பின் கவிதைகள் அமைகின்றன. இத்தொகுப்பு எழுபது கவிதைகளைக் கொண்டுள்ளது.

இக்கவிதைத் தொகுப்பில் 'மஞ்சணத்தி' என்ற கரிசல்காட்டு மரத்தின் முழு வளர்ச்சியும் படிப்படியாகப் படமாக பக்கந்தோறும் வெளியிடப்பெற்றுள்ளன.

இத்தொகுப்பினைத் தன் தம்பி தங்கம் தென்னரசுவிற்குச் சமர்ப்பித்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இதற்கு 'நல்லியல்பின் வெளிச்சம்' என்ற தலைப்பில் பதிப்புரை ஒன்றை மனுஷ்ய புத்திரன் வரைந்துள்ளார். இத்தொகுப்பினை "தமிழச்சி கண்டுபிடித்துள்ள பெரும் படிமங்கள்" என்ற தலைப்பில் மதிப்புரை செய்துள்ளார் தமிழவன். "தமிழச்சிக்குத் தமிழ் மண்ணின் அனுக்கிரகம் இருப்பதால், தமிழ் மொழியைப் பல தளங்களுக்கு நிமிடத்துக்குள் சஞ்சரிக்கும் ஆற்றலை, புதுக்கவிதை என்ற பெயரில் கடந்த சுமார் 50 ஆண்டுகளாய் தமிழுக்குள் வந்த வடிவம் கொண்டுள்ளது"[6] என்ற தமிழச்சியின் தமிழ் படைப்பாற்றலின் வீச்சினை அளந்து அறிவிக்கிறார் தமிழவன்.

'ஒப்பனையின் பூச்சற்ற அழகு" என்ற தலைப்பில் கலாப்ரியா ஒரு மதிப்புரையை இத்தொகுப்பிற்குத் தந்துள்ளார். 'தொல் மரத்துச் சருகும் உயிர்ப்பூ ஒன்றும்" என்ற தலைப்பில் இத்தொகுப்பிற்கான தன்னுரையைத் தந்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இத்தொகுப்பு இருத்தலும்,இருத்தல் நிமித்தமும். பாலைக்கலி, மழையும் மழைசார் வாழ்வும், வெயில் ருசி போன்ற தலைப்புகளில் அறுபது கவிதைகள் அமைந்துள்ளன. வண்ண வழுவழுப்பான தாளில் இத்தொகுப்பு அச்சிடப்படபட்டுள்ளது.

**<u>அருகன்</u>**

தமிழச்சி தங்கபாண்டியனின் நான்காவது கவிதைத் தொகுப்பு 'அருகன்' என்பதாகும். இதனையும் உயிர்மை பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இத்தொகுப்பு இரண்டாயிரத்துப் பதினொன்றாம் ஆண்டில் வெளிவந்துள்ளது. தீராநதி இதழில் தொடராக வெளிவந்த இருபத்துமூன்று கவிதைகள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. மேலும் ஆனந்தவிகடன், சூரியக் கதிர், கல்கி, அமுதசுரபி,

காலம் முதலிய இதழ்களில் எழுதப்பெற்ற கவிதைகளும் இங்குத் தொகுப்பாகி உள்ளன. எளிமையும், சமூக விமர்சனமும், மானுடநேயமும் தழுவிய கவிதைகள் இதனுள் தொகுக்கப்பெற்றுள்ளன.

ஞானக் கூத்தன் 'அருகன் முதலான கவிதைகள்' என்ற தலைப்பில் மதிப்புரை ஒன்றை இத்தொகுப்பிற்கு வரைந்துள்ளார். 'பெண்கள் விஷயமாக தமிழச்சி அப்படி அக்கறையோடு எழுதுவது இயல்புதான். அப்படி எழுதும்போது மரபான குறிப்புகளைப் பகைமை பாராட்டாத எள்ளலோடு அவர் எழுதுவது நயமாக இருக்கிறது"[7] என்று தமிழச்சியின் கவிதைகளை அவர் மதிப்பீடு செய்துள்ளார். கலாப்பிரியாவும் இத்தொகுப்பிற்கு ஒரு மதிப்புரை வழங்கியுள்ளார். வார்த்தைகளால் கவரப்பட்ட மௌனம் என்ற தலைப்பினில் அவர் 'ஒரு கவிஞரின் காத்திரமான கவிதைகளுடன் மேலும் ஒரு தொகுப்பு' என்று இத்தொகுப்பினை அவர் மதிப்பிட்டுள்ளார். இதனுள் முப்பத்தொன்பது கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் திரு வேல்முருகன் அவர்களின் ஓவியங்கள் இணைந்து அழகூட்டுகின்றன.

இவ்வாறு நான்கு கவிதைத் தொகுதிகள் தமிழச்சி தங்கபாண்டியனால் மிகுந்த கவனமுடன் வெளியிடப்பெற்றுள்ளன. இத்தொகுப்புகளின் வழி அவரின் கிராமத்து நினைவுகளையும் நகரமயமாதலில் ஏற்படும் நெருக்கடிகளையும் உணர்ந்து கொள்ளமுடிகின்றது.

**<u>தமிழச்சியின் உரைநடைப் படைப்புகள்</u>**

இவர் கவிதைகளுடன் உரைநடைப் படைப்புகளையும் தந்துள்ளார். இவரின் உரைநடைப் படைப்புகள் என்பவை இரு பிரிவுகளாக அமைகின்றன. அவை

1. அனுபவம் சார்ந்த உரைநடைப் படைப்புகள்
2. விமர்சன நோக்குடைய உரைநடைப் படைப்புகள்

என்ற நிலையில் இவரின் உரைநடைப் படைப்புகளைப் பகுத்து அறிய முடிகின்றது. இப்பகுப்பு அடிப்படையில் இவரின் உரைநடைப் படைப்புகளை அறிமுகம் செய்வதாக பின்வரும் பகுதி அமைகின்றது.

**1.அனுபவம் சார்ந்த உரைநடைப் படைப்பு**

தமிழச்சி தங்க பாண்டியன் தன் கிராம அனுபவங்களை பல வடிவங்களில் பதிவுசெய்து வருகிறார். கட்டுரை வடிவில் தன்னுடன் பழகிய பெண்கள், தன் கிராம மருத்துவம், தன் கிராம உறவுகள் பற்றிய செய்திகளை அவ்வப்போது பதிவுசெய்து வருகிறார். அவ்வாறு அவர் தன் அனுபவம் சார்ந்து, பின்வரும் உரைநடைப் படைப்புகளைத் தந்துள்ளார்.

1. பாம்படம்
2. மயிலிறகு மனசு
3. மண்வாசம்

ஆகியனவாகும்.

**பாம்படம்**

தமிழச்சி தங்க பாண்டியனின் உரைநடைப் படைப்புகளில் குறிக்கத்தக்க ஒன்று பாம்படம் என்ற தொகுப்பாகும். இது உயிர்மை பதிப்பகம் வழியாக இரண்டாயிரத்துப் பத்தாம் ஆண்டில் வெளிவந்துள்ளது. இதனைப்பற்றி “பாம்படம் எனும் இக்கட்டுரைத் தொகுதியில் தமிழச்சி தங்க பாண்டியன் அவர் பிறந்து வளர்ந்து, பழுத்த நகரவாசியாகிப்போன பின்னும் தன் நெஞ்சில் புதைத்து வைத்துக் கொண்டு தலைப்பிள்ளையைப் போலச் சீராட்டிக்கொண்டிருக்கும் தன் கிராமமான மல்லாங்கிணற்று மனிதர்களைப் பற்றிய சித்திரங்களை வரைந்திருக்கிறார்”[8] என்று பிரபஞ்சன் குறிப்பிடுகிறார். இத்தொகுப்பு இவரின் அப்பத்தா வேலுநாச்சியாருக்கு சமர்ப்பணம் செய்யப்பெற்றுள்ளது. இதனுள் மொத்தம் பதினெட்டு கட்டுரைகள் உள்ளன. இத்தொகுப்பு வெளிவரக்

காரணமாக இருந்தவர்களான சூரியக் கதிர் இதழ், ராவ். மரக்காணம் பாலா ஆகியோரையும் நன்றியுடன் இந்நூலின் முன்பகுதியில் தமிழச்சி தங்கபாண்டியன் குறிப்பிட்டுள்ளார்.

**மயிலிறகு மனசு**

தமிழச்சி தங்கபாண்டியன் 'அவள் விகடன்' இதழில் தனக்குப் பிடித்தமானவர்களைப் பற்றி எழுதிய கட்டுரைகள் தொகுக்கப்பெற்று மயிலிறகு மனசு தொகுதி உருவாக்கப்பெற்றுள்ளது. இதனுள் கைவினைக் கலைஞர் ராதிகா, சமூக செயற்பாட்டாளர் நடிகை ரோகினி, கவிஞர் இளம்பிறை, பாண்டியம்மா, பால்யதோழி ஜெயராணி, லலிதா, வழக்கறிஞர் அருள்மொழி, சரசுவதி, தாயார் ராஜாமணி, நிர்மலா, கோவிந்தம்மா, சரயு, மலர்மாலா போன்ற பல பெண்களைப் பற்றிய அறிமுகக் கட்டுரைகளை உள்ளடக்கியதாக இத்தொகுப்பு விளங்குகின்றது. இத்தொகுப்பினில் சுட்டப்பெறும் பெண்கள் அவர்களின் புகைப்படங்களுடன் அறிமுகம் செய்யப்பெற்றுள்ளனர். இத்தொகுப்பு விகடன் பிரசுராமாக இரண்டாயிரத்துப் பன்னிரண்டாம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

இந்நூல் கவிஞரின் அத்தான் சந்திரசேகருக்குச் சமர்ப்பணம் செய்யப்பெற்றுள்ளது. இதற்கு ஆனந்தவிகடன் ஆசிரியர் பதிப்புரை வழங்கியுள்ளார். அதில் அவர் "தாயாய் வருடிக் கொடுக்கவும், குழந்தையைப் போல் அடம்பிடிக்கவும் கற்று வைத்திருக்கிறது தமிழச்சியின் தமிழ். அதனால்தான் அன்பின் அவசியத்தைப் பெருமையாகவும், ஏக்கமாகவும் ஒரே நேரத்தில் அவரால் சொல்லமுடிகிறது"[9] என்று தமிழச்சியின் தமிழ் பற்றி மதிப்பிடப்பெற்றுள்ளது.

**மண்வாசம்**

டாக்டர் விகடன் இதழ் தொடங்கப்பட்டபோது, நாட்டுப்புற மருத்துவம் பற்றி தமிழச்சி தங்க பாண்டியன் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாக

வெளியிடப்பெற்ற தொகுப்பு மண்வாசம் ஆகும். இது விகடன் பிரசுரத்தால் இரண்டாயிரத்துப் பதின்மூன்றாம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. இந்நூலை வண்ணதாசனுக்குச் சமர்ப்பித்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இதனுள் முப்பது கட்டுரைகள் அடங்கியுள்ளன.

இந்நூல் இருபகுதிகளை உடையதாகும். ஒன்று மண்ணும் மருத்துவமும் என்ற பகுதியாகும். இதில் கிராமத்து மருத்துவக் குறிப்புகள் பற்றிய செய்திகள் அடங்கியுள்ளன. அடுத்து அமைவது மண்ணும் மனசும் என்ற பகுதியாகும். இதில் தான் பழகிய மனிதர்களின் இயல்புகளை எடுத்துரைக்கிறார் தமிழச்சி தங்பாண்டியன்.

'சொலவடையாக, மருத்துவமாக, பேச்சுவழக்காக, உயிரார்ந்த நேசமாக கிராமத்தின் அத்தனை விதமான ஆசாபாசங்களையும் தமிழச்சி விவரித்து இருப்பதாக இத்தொகுப்பினை ஆனந்தவிகடன் ஆசிரியர் அறிமுகம் செய்கிறார்.

இவ்வாறு இம்மூன்று தொகுப்புகள் அவரின் கட்டுரை வன்மையைக் காட்டுவனவாகும்.

<u>2.விமர்சன நோக்குடைய உரைநடைப் படைப்பு</u>

தமிழச்சி தங்கபாண்டியன் தான் படித்த புத்தகங்கள், கலந்து கொண்ட சமுதாய நிகழ்ச்சிகள், கண்டு நாடகங்கள் போன்றவற்றைப் பற்றி விமர்சனம் செய்துள்ளார். அக்கட்டுரைகள் சொல் தொடும் தூரம் என்ற விமர்சன நூலாக வெளிவந்துள்ளது. இதனை உயிர்மை பதிப்பகம் இரண்டாயித்துப் பத்தாம் ஆண்டில் வெளியிட்டுள்ளது. இந்நூலை தன் கணவருக்கும் குழந்தைகளுக்கும் காணிக்கை ஆக்கியுள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இந்நூல் வெளிவரக் காரணமாக இருந்த எழுத்தாளர் இமையம், பேராசிரியர் இராமன் ஆகியோரையும் இந்நூல் அவர் நன்றியுடன் நினைந்துள்ளார்.

இந்நூலுள் மொத்தம் இருபத்து மூன்று தலைப்பகளில் கட்டுரைகள் உள்ளன. கம்பர், ஷேகஸ்பியர், அழகிய பெரியவன், பஞ்சாங்கம், இறையன்பு, யவனிகா ஸ்ரீராம், ஞானக் கூத்தன், லீனா மணிமேகலை, திலகபாமா, கீதாஞ்சலி பிரியதர்ஷினி, தமிழ் மணவாளன், விஜயலட்சுமி, ஈஸ்வர சந்தான மூர்த்தி, சிறீசு, வமித்திரா ஆதிரன், இலக்கியா நடராஜன் போன்றோர் தம் படைப்புகள் இதனுள் விமர்சிக்கப்பெற்றுள்ளன.

இவ்வாறு தன் கட்டுரை நூல்களாலும் தமிழ் வளம் கூட்டியுள்ளார் தமிழச்சி தங்க பாண்டியன்.

**<u>பிற படைப்புகள்</u>**

தமிழச்சி தங்கபாண்டியனின் நேர்காணல்கள் புத்தக வடிவம் பெற்றுள்ளளது. பல்வேறு பத்திரிக்கைகளில் வெளிவந்த இவரது நேர்காணல்கள் தொகுக்கப்பட்டு 'பேச்சரவம் கேட்டிலையோ' எனும் தலைப்பில் இரண்டாயிரத்து எட்டாம் ஆண்டில் உயிர்மை பதிப்பகம் வெளியிட்டுள்ளது. இதற்கு முன்னுரையை இந்திரா பார்த்தசாரதி எழுதியுள்ளார். இதற்கு முதல் மொழியிலிருந்து இரண்டாம் மொழிக்கு என்ற தலைப்பில் ஒரு தன்னுரையை தமிழச்சி தங்கபாண்டியன் எழுதியுள்ளார். அதில் இந்நேர்காணல் தொகுப்பு பற்றிக் கூறும்போது, "இதன்மூலம்எனது சமூகம், நிலம், கருத்தியல், அரசியல் நிலைப்பாடு, குடும்பம், பெண் இருப்பு, மதிப்பீடு, தொன்மம், கண்ணோட்டம் முதலியன புலப்படலாம். ஒவ்வொரு நேர்காணலுக்குப்பின்பும் நான் என்னை மறுபரிசீலனை செய்து கொள்ள வேண்டுமென நினைப்பதுண்டு"[10] என்று குறிப்பிடுகிறார். எனவே இந்நேர்காணல் தொகுப்பு அவரை அவரே மீள்பார்வை செய்து கொள்ள உதவியுள்ளது என்பதை உணரமுடிகின்றது.

இந்நூல் தெற்கத்திக் கரிசல் காட்டு கிராமம் மல்லாங்கிணற்றிற்காக அர்ப்பணம் செய்யப்பெற்றுள்ளது. குமுதம்.காம், ˙தினமலர் பெண்கள் மலர், வார்த்தை, வீ கேன் டுடே, குமுதம் தீராநதி, பெண்ணியச் சிந்தனை, உதயம்,

அவள் விகடன், இந்தியன் ரிப்போர்ட், ஆனந்தவிகடன், குமுதம், நமது தளபதி, கருஞ்சட்டைத் தமிழர், இனிய நந்தவனம், ஓசை, தினமணி (கொண்டாட்டம்), தினசரி, குமுதம் ஹெல்த், கல்வி போன்ற இதழ்களின் வழியாக நடைபெற்ற நேர்காணல்களின் தொகுப்பாக இந்நூல் அமைந்துள்ளது.

இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள நேர்காணல்கள் வழி தமிழச்சி தங்கபாண்டியன் என்ற படைப்பாளரின் வாழ்க்கையை முழுவதும் அறிந்துகொள்ள முடிகின்றது.

**மொழி பெயர்ப்பு**

இவர் மொழி பெயர்ப்புத் துறையிலும் கால் பதித்துள்ளார். 'தாமஸ் ஹார்டி' என்பவரின் கவிதைகளை ஆங்கிலத்தில் இருந்துத் தமிழுக்கு மொழிபெயர்த்துள்ளார். மேலும் இவர் 'பிரபஞ்சனின் 'மரி என்னும் ஆட்டுக்குட்டி' என்ற சிறுகதையை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கின்றார். இலங்கை எழுத்தாளர்கள் சிலரின் சிறுகதைகளையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.

இவ்வாறு பல்துறை சார் நூல் பணிகளை இவர் வெளியிட்டுள்ளார்.

**தமிழச்சி தங்கபாண்டியன் படைப்புகள் குறித்த ஆராய்ச்சிகள்**

தமிழச்சி தங்கபாண்டியன் படைப்புகளும் பல திறனாய்வாளர்களால் ஆராய்ச்சி செய்யப்பெற்றுள்ளன. காற்று கொணர்ந்த கடிதங்கள், காலமும் கவிதையும் தமிழச்சியின் படைப்புலகம் ஆகியன இவர் எழுதிய படைப்புகள் பற்றிய திறானய்வு நூல்கள் ஆகும்.

இவரின் கவிதைகளை கல்யான்ஜி, கலாப்பிரியா, இமையம், பொன்னீலன், எஸ். வைத்தீஸ்வரன், ந. முருகேசபாண்டியன், இரா. பார்த்திபன், அழகிய பெரியவன், சோ. தர்மன், த. பழமலய், திலீப், துளசிதாசன், சுமதி ராம், குண. ஜெயசீலன், ஸ்ரீதர் ராதை, அரவிந்த் அப்பாதுரை, அலெக்ஸிஸ், நட.சிவக்குமார்,

வீரமணி, தேனி இரா. ஈஸ்வர், வின்சன்ட், ஆ. ஜெகதீசன், தி..க.சி போன்றோர் திறனாய்ந்துள்ளனர். இவை கடிதங்களாக வந்த நிலையில் அவ்வமைப்பிலும், பேச்சாக வந்த நிலையில் உரையாகவும், கவிதையாக வந்தவற்றைக் கவிதையாகவும் காற்று கொணர்ந்த் கடிதங்களில் பதிவு செய்துள்ளார்.

இவரின் வனப்பேச்சி என்ற தொகுப்பு பற்றி “தமிழச்சியின் வனப்பேச்சியில் மண்ணும் மனித உறவுகளும் “ என்ற தலைப்பினில் மு. அருணாசலம் திறனாய்வுசெய்துள்ளார். இது அருண் பதிப்பகத்தால் இரண்டாயிரத்துப் பதிமூன்றாம் ஆண்டு வெளிவந்துள்ளது. இதனுள் “தேர்ந்த கவித்துவம், சொல்வளம், தொடர்ச்சியான கவிதை இயக்கம், அரசியல் உள்ளீடு கொண்ட படைப்பு பலம், தொன்மையும் நவீனமும் இணையும் பாங்கு, அடித்தட்டு மக்களின் மீதான அக்கறை, தமிழ் தேசிய நலனில் கரிசனம், உலகமயமாக்கலின் அடையள அழிப்பிற்கு எதிர்த்திசையில் தமிழின் பன்முக அடையாளங்களை தேடிப்படைக்கும் ஆற்றல் என விரிவான கவித்தளத்தில் இவரது கவிதைகள் இயங்குகின்றன”[11] என்ற மதிப்பினைத் தந்துள்ளார் அ்ருணாசலம்.

இவ்வாறு இவரே திறனாய்வாளராக இருந்தும், இவரின் படைப்புகள் திறானயப் பெற்றும் ஒருங்கே இரு முனைப் பயணமாக இவரின் இலக்கியப் பங்களிப்பு அமைந்து வருகிறது.

**<u>வழிகாட்டிகள்</u>**

இவர் தன் இலக்கிய வழிகாட்டிகளாகவும் சிலரை முன்மொழிகின்றார். பேராசிரியர் சுப்பாராவ் என்பவர் இவரின் முதுகலை ஆங்கிலப் படிப்பின்போது, தேர்ந்த வழிகாட்டியாக விளங்கியுள்ளார். இப்பேராசிரியர் ஆங்கில விமர்சகர்களுள் குறிக்கத்தக்கவராக விளங்கிய எப்ஆர் லீவிஸ்னுடைய மாணவர் ஆவார். இவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் பயின்றவர். இவர் ஆந்திர மாநிலத்தைச் சார்ந்தவர். இவரைப் பற்றி “பேராசிரியர் சுப்பாராவ்

அவர்களுடைய அறிமுகம் தமிழச்சிக்கு மிகப்பெரிய திருப்புமுனையாக அமைந்தது. ஏனென்றால் அதுகாறும் ஆங்கில இலக்கியம் என்றால் மிகப்பெரிய வார்த்தை அலங்காரங்களால் ஆனது என்று நினைத்திருந்தார். அதை முழுவதுமாக கட்டுடைத்து, தாய்மொழிக்கு முதல் முன்னுரிமை கொடுக்கவேண்டும், உனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் நீ புரிந்துகொண்டதை ஒரு பத்து வார்த்தையாவது, ஒரு பத்து வாக்கியங்களாவது எழுதுவதுதான் உண்மையிலே உன்னுடைய பங்களிப்பாக இருக்கமுடியும் என்று முதன் முதலில் தமிழச்சிக்கு உணர்த்தியவர் பேராசிரியர் சுப்பாராவ் அதே போன்று விமர்சன கலையாகட்டும், தத்துவமாகட்டும், ஹகல்லிருந்து – மார்க்ஸ் வரையும் பொருள் முதல்வாதம் வரை தமிழச்சிக்கு அறிமுகப்படுத்தி ஒரு தத்துவார்த்த ரீதியில் இவருடைய பார்வையை விரிவாக்கம் செய்தார்” [12]என்று தன் முன்னோடியைப் பற்றி உரைக்கிறார் தமிழச்சி.

பேராசிரியர் சுப்பாராவ் தமிழ் மொழி, அதன் செவ்வியல் தன்மை ஆகியனவற்றை அறிந்துகொண்டே மனத்தையும் அறிவையும் கூர்மைப் படுத்தவேண்டும் என்றும் ‘தமிழச்சி தங்கபாண்டியனுக்கு அறிவுறுத்தினார். இதனை “இரண்டாவதாக செவ்வியல் அறிவு என்பது மிக முக்கியம். தாய்மொழியில் இருந்தே செவ்வியல் இலக்கியங்ளுடன் பரிச்சியப்படுத்துவது தான் உங்களுடைய அறிவையும், மனத்தையும் கூர்மைப்படுத்தும், பக்குவப்படுத்தும், அதற்குப்பிறகுதான் நீங்கள் புதிய முயற்சிகளுக்கும் போக வேண்டும் என்றும், செவ்வியலில் பரிச்சயம் மிக மிகத் தேவையான ஒன்று என்றும் மிக அழுத்தி தமிழச்சிக்கு சொல்லிக்கொடுத்து அதில் பயிற்சியும் கொடுத்தவர். செவ்வியல் இலக்கியப் பயிற்சியும், தாய்மொழிக்கு முதல் முன்னுரிமை கொடுக்கவேண்டும் என்று சொல்லுகின்ற கருத்தும், தத்துவங்களிலும் முறையான விமர்சனங்கள் அவர் வைத்திருந்த ஆழ்ந்த பிடிப்பும் அந்த வழிநோக்கி நடத்திய தடமும்தான் அவரிடம் என்னை

மிகக்கவர்ந்த அம்சமாகும்”[13] என்று தன் முன்னோடியை மறவாமல் சுட்டிக்காட்டுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

தமிழச்சி தங்கபாண்டியனுக்கு நவீன இலக்கியப் பார்வை ஏற்படுத்திய மற்றொரு முன்னோடி பேராசிரியர் சுகுமாறன் ஆவார். அவரைப் பற்றி “ நவீன தமிழ் இலக்கியம் குறித்த பரிச்சயம் உண்டாகியதற்கு குறிப்பிட்டுச் சொல்லவேண்டும் என்றால் மதுரை தியாகராஜர் கல்லூரி பேராசிரியர் சுகுமாறன் அவர்கள் தான். அவர் பிற்காலத்தில் ‘லலிதா ஜீவல்லரி’ என்றொரு நகைக்கடை வைத்து அதில் நிர்வாக இயக்குநராகவும் இருந்தார். தற்பொழுது ‘சொர்ணாலாயா ஜுவல்லரி’ என்று வைத்திருக்கிறார். நல்ல படிப்பாளி. அவர் மூலம் தமிழ் இலக்கிய உலகத்தில் இருக்கின்ற நவீன ஆளுமைகள் பற்றிய அறிமுகம் கிடைத்தது. அப்பொழுது முறையான ஆழ்ந்த வாசிப்புத்தான் மிகவும் முக்கியம்”[14] என்று குறிப்பிடுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இந்நிலையில் சுகுமாறன் தமிழச்சி தங்கபாண்டியனின் முன்னோடிகளில் ஒருவாராக கொள்ளத்தக்கவராகின்றார்.

இவ்வாறு தன் முன்னோடிகளை மறவாமல் எடுத்துக்காட்டும் போக்குடையவராக தமிழச்சி தங்கபாண்டியன் விளங்குகின்றார்.

**<u>பன்முக ஆளுமை</u>**

தமிழச்சி தங்க பாண்டியன் பன்முக ஆளுமை கொண்டவாராக விளங்குகிறார். இவர் நாட்டியக் கலை, நடனக் கலை போன்றவற்றிலும் தேர்ச்சி பெற்றவர். அத்துறைகளிலும் பங்கேற்று அவற்றையும் வளர்த்துள்ளார். மேலும் இவர் அரசியலிலும் ஈடுபாடு கொண்டு, செயல்பட்டு வருகிறார். இவர் சிறந்த ஆராய்ச்சியாளரும் ஆவார். இவரின் ஆராய்ச்சிகள் ஆங்கில இலக்கியம் சார்ந்து அமைகின்றன. இவர் பல கல்லூரிகளில் பேராசிரியப் பணியையும் ஏற்றுச்செய்துள்ளார். எனவே இவர் பன்முக ஆளுமைத்திறன் மிக்கவர் என்பதை

உணரமுடிகின்றது. அவரின் பன்முக ஆளுமைத்திறன் பற்றிய செய்திகள் பின்வருமாறு.

**நாட்டியக் கலைஞர்**

தமிழச்சி தங்கபாண்டியன் கர்நாடக சமஸ்கிருத இசை சார்ந்த சாஸ்திரிய நடனத்திலும் பயிற்சி பெற்றுள்ளார். இவருக்கு பரதநாட்டியம் கற்றுத் தந்த குரு தஞ்சை நடராஜன் என்பவர் ஆவார். இவர் பல நாட்டிய நாடகங்களில் பங்கேற்றுள்ளார். குற்றாலக் குறவஞ்சி, சிவகாமியின் சபதம் போன்ற நாட்டிய நாடகங்களில் இவர் பங்கேற்றுள்ளார். இவரின் நடனங்களுக்கு நட்டுவாங்கம் செய்தவர் பேராசிரியை சாரதா நம்பியாரூரன் ஆவார்.

**நாடகக் கலைஞர்**

இவர் இளம் வயது முதலே நாடகத்தில் நடிப்பதில் திறனுடன் செயல்பட்டுள்ளார். இவரின் பள்ளிப் பருவத்தில் சாகுந்தலை என்ற நாடகத்தில் இவர் சாகுந்தலையாக நடித்துள்ளார். இந்நாடகத்தில் இவருக்கு மலர்கள் கொண்டு மட்டுமே அலங்காரம் செய்யப்பெற்றது. இவ்வலங்காரம் இவருக்கு மிக விருப்பமானதாக அமைந்ததால் இவர் கைவினைப் பொருள்கள் மீது ஆறாத ஆர்வம் உடையவராக விளங்கினார். நாட்டின் எப்பகுதிக்குச் சென்றாலும் உலகின் எப்பகுதிக்குச் சென்றாலும் கைவினைக்கலைஞர்களை இவர் தேடிக்கண்டறிந்து அக்கைவினைப்பொருள்களுக்கு மதிப்பளிப்பவராகவும் விளங்கி வருகிறார்.

பின்னாளில் இவர் தேர்ந்த நாடகக் கலைஞராகவும் விளங்கியுள்ளார். நாடக நெறியாளர் அ. மங்கையின் இயக்கத்தில், கவிஞர். இன்குலாப்பின் 'குறிஞ்சிப்பாட்டு' எனும் இரண்டு மணி நேர நாடகத்தில் இவர் முக்கியப் பாத்திரத்தில் நடித்துள்ளார். இந்நாடகம் சென்னை மற்றும் சேலத்தில் நடத்தப்பட்டது. ஒடுக்கப்பட்ட மரபுகளையும், பழம்பெரும் கலாச்சார வேர்களையும் அறிவிப்பதர்க இந்நாடகம் அரங்கேறியது.

'வெளி' ரங்கராஜன் அவர்களுடைய நாடகவெளி குழுவிலும் இவர் பங்கேற்றுள்ளார். சென்னை அலையன்ஸ் ப்ராங்கை அரங்கில் கு.ப.ரா.வின் அகலிகை அரங்கேற்றம் செய்யப்பெற்றபோது இவர் அந்நாடகத்தில் அகலிகை பாத்திரமேற்று நடித்தார். இந்நாடகம் நவீன பெண்ணியப் பார்வையுடையதாய் அமைந்தது.

மேலும் இவர் வஞ்சமகள் என்ற நாடகத்திலும் நடித்துள்ளார். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் இந்நாடகம் அரங்கேறியது. இதில் இவர் சூர்ப்பனகைப் பாத்திரம் ஏற்று நடித்திருந்தார்.

மேலும் 'இன்னொரு ஏதோ' எனும் நவீன நாடகத்தை கனடா வாழ் இலங்கைத் தமிழ் எழுத்தாளர் சிறீசுவுடன் அரங்கேற்றினார். தியேட்டார் லேப் என்ற குழுவினருடன் இணைந்து மகாத்மா காந்தியின் கடைசி ஐந்துநிமிடங்கள் என்ற தலைப்பிலான நாடகத்தில் இவர் நடித்துள்ளார். பிரசன்னா ராமஸ்வாமியின் பாரதியார் கவிதைகள் குறித்த இவரது நாடகம் கலாஷேத்ராவிலும் , சென்னைப் புத்தகக் கண்காட்சியிலும் அரங்கேறியது.

நாடகத்துறையில் இவர் விருதும் பெற்றுள்ளார். விஸ்டம் பதிப்பகத்தாரின் சிறந்த இளவயது நாடகக் கலைஞர் விருது இவரின் நாடகப் பணிகளுக்காக வழங்கப்பட்டது.

**அரசியல்வாதி**

தமிழச்சி தங்கபாண்டியன் தன் தந்தையான தங்கபாண்டியனின் வழியாக அரசியல்வாதியாகவும் விளங்குகிறார். இவரின் தம்பி தங்கம் தென்னரசு அரசியலில் பங்கேற்று அமைச்சராகவும் விளங்கி வருகிறார். இதனடிப்படையில் இவர் திராவிட முன்னேற்றக் கழக அரசியல் சார்புடையவராக விளங்குகிறார்.

இவரின் அரசியல் நிலைப்பாடு குறித்து, பின்வருமாறு குறிப்பிடுகிறார். "என்னுடைய ரத்தத்தில் கருப்பு, சிவப்பு அணுக்கள் கலந்திருக்கிறது என்று

நான் அடிக்கடி சொல்வதுண்டு. என் அப்பா தங்கபாண்டியன் திராவிட முன்னேற்ற கழகத்தில் இருந்தவர். எங்கள் வீட்டில் பெரியார், அண்ணா மற்றும் கலைஞருடைய கொள்கைகளைப் பின்பற்றி எங்களை வளர்த்துள்ளார்கள். எனக்குக் கொடியேற்றும் வாய்ப்பு ஓர் இரவில் உலகுக்கு வெளிச்சமாக்கப்பட்டவள் என்ற நிலையில் கிடைத்துவிடவில்லை. கலைஞரைக் கைது செய்தபோது 'எழுதுகோலை எடு தலைவா' என்ற தலைப்பில் எனது கவிதை முரசொலியில் வந்துள்ளது. இப்படிப் பிரச்சனைகள் வரும்போது, என்னுடைய பேச்சு மூலம், எழுத்து மூலம் மறைமுகமாக பலமுறை அரசியலில் இருந்திருக்கிறேன்"[15] என்ற இவரின் கூற்று வழி இளமை முதலே இவர் அரசியல் துறையிலும் ஈர்ப்புடன் இருந்துள்ளார் என்பதை அறியமுடிகின்றது.

இவர் தன் அரசியல் முன்னோடியாக கலைஞர் மு.கருணாநிதியின் மகள் கனிமொழி என்பவரைக் கொண்டுள்ளார். "கனிமொழி கீழ்த்தட்டு மக்கள் மீது அக்கறை உள்ளவர். அந்த வகையில் அவருடைய சமூகதளம், அரசியல் தளம் இரண்டிலும் எனக்கு முன்மாதிரி அவர்தான்"[16] என்ற கூற்று இவரின் அரசியல் முன்னோடி பற்றி அறிவிக்கின்றது. தொடர்ந்து திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரசியல் செயல்பாடுகளில் இவர் ஈடுபட்டு வருகிறார்.

**ஆராய்ச்சியாளர்**

இவர் சிறந்த ஆராய்ச்சியாளராகவும் விளங்குகிறார். ஆராய்ச்சிப் படிப்புகளான இளநிலை ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்டங்களைத் தக்க வழிகாட்டிகளின் வழிகாட்டுதலின் பேரில் பெற்றுள்ளார்.

இவரின் இளநிலை ஆய்வியல் நிறைஞர் பட்டப்படிப்பின் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் சுப்பாராவ் என்பவரின் மேற்பார்வையில் செய்தார். இவர் இவ்வாய்விற்காக 'பியடிஸ் ஸ்வப்' என்பவர்

எழுதிய 'மை அப்ரன்டிஸ்சிப்' என்ற புத்தகத்தை முதன்மை ஆதாரமகாகக் கொண்டு செய்யப்பெற்றுள்ளது.[17]

ஆஸ்திரேலியாவிற்குப் புலம் பெயர்ந்த ஈழத்தமிழர்தம் ஆங்கிலக் கவிதைகளை ஆய்வு செய்வதாக இவரின் முனைவர் பட்ட ஆய்வேட்டின் பொருள் அமைந்தது. 'இலங்கை புலம்பெயர் தமிழர்களின் படைப்பிலக்கிய வெளிப்பாடுகள்' என்பது ஆய்வேட்டின் தலைப்பு என்பது முன்னரே குறிக்கப்பட்டது.

இவ்வாய்வின் களப்பணிக்காக அவர் அடிக்கடி ஆஸ்திரேலியா செல்லவேண்டியிருந்தது. ஆஸ்திரேலியாவில் உள்ள சிட்னி, மெல்பேர்ன் போன்ற பல்கலைக்கழகங்களுக்குச் சென்று அவர் தன் ஆய்வுப்பணியை மேற்கொண்டார். அங்கு சென்று, தான் பெற்ற அனுபவத்தை "நம் நாட்டு பல்கலைக்கழகங்கள் போல கட்டுப்பாடுகள் எதுவும் அங்கு இல்லை. ஒவ்வொரு பல்கலைக்கழகத்திலும் 'கேம்பஸ் சென்டர்' ஒன்று இருக்கும். அங்கே அழகு நிலையம், இசைக்கச்சேரி, காபி பப்கள் உண்டு. பாடவேளை தவிர, மாணவர்கள் எப்போதும் கேம்பஸ் சென்டரில் கொண்டாட்டமாக இருப்பார்கள். வகுப்பறைகளுக்கு வெளியே பெரிய புல்வெளிகள் உண்டு. நிறைய மாணவர்கள் அங்கு படுத்துக்கொண்டே படிப்பார்கள். மாணவர்கள் தினமும் கல்லூரிக்கு வரவேண்டும் என்று கட்டாயம் கிடையாது. வாரத்துக்கு மூன்று நாட்கள் சென்று 'உள்ளேன் அய்யா ' என்று சொன்னால் போதும்" [18] என்று தமிழச்சி ஆஸ்திரேலிய கல்விமுறை பற்றி கருத்துரைத்துள்ளார்.

"ஆஸ்திரேலியாவில் உள்ள வெள்ளைக்காரர்கள் எல்லாம் வந்தேறிகள்தான். ஆஸ்திரேலியாவின் பூர்வ பழங்குடிகள் இன்றளவும் தங்கள் தனித்துவத்தைப் பாதுகாக்கப் போராடி வருகிறார்கள். அவர்களுக்கென்று தனியாக இலக்கியமே இருக்கிறது. பழங்குடி எழுத்தாளரான 'ஆல்ப் டெய்லர்' என்பவர் அவர்களுடைய 'புஷ்' என்னும் நிலப்பரப்பில் தமிழச்சிக்கு விருந்து

அளித்துள்ளார். இந்தப் பழங்குடிகள் திராவிட இனத்தோடு தொடர்புடையவர்கள். முகச்சாயல் கூட தென்னிந்தியர்கள் மாதிரியே இருக்கிறது. அவர்களின் மொழியில் ஏராளமான திராவிடச் சொற்கள் இருப்பது ஆச்சரியமாக உள்ளது”[19] என்கிறார் தமிழச்சி.

மேலும் அவர் ஆஸ்திரேலிய அனுபவங்கள் பற்றிப் பகிர்ந்து கொள்கிறார். “ஆஸ்திரேலியர்களின் பண்பாட்டுக்கு 150 வயதுதான் என்றாலும், ஒவ்வொரு ஊரிலும் மியூசியம், காட்சியகங்கள், நூலகங்கள் கட்டாயம் அமைந்திருக்கும். நமது தாய்மொழி தமிழ் தோன்றி 2000 வருடங்களுக்கும் மேல் ஆகிவிட்டது. முகத்தில் பிரமிப்பு கலந்த வியப்பு. ஆஸ்திரேலியா முழுக்க பாண்டா கரடியையும், கங்காருவையும் பார்க்கலாம். வாழ்க்கையில் ஒரு முறையாவது ஆஸ்திரேலியா சென்று வருவது , நமது வாழ்நாளின் மகிழ்ச்சிகரமான அனுபவங்களில் ஒன்றாக இருக்கும் என்று கூறுகின்றார் தமிழச்சி. ஆஸ்திரேலியாவில் உள்ள நூலகங்கள் தமிழச்சியை வியக்க வைத்ததாகக் கூறுகிறார். சிட்னி உள்பட அது எந்த நகரமாக இருந்தாலும், ஒரு நூலகத்தில் நாம் கேட்கும் ஒரு புத்தகம் இல்லாவிட்டால் அடுத்த மாநிலத்திற்குத் தகவல் தந்து நமக்கு வேண்டியதை வாங்கித் தந்துவிடுகிறார்கள்”[20] என்கிறார் தமிழச்சி.

“ஆஸ்திரேலியாவில் ஆண், பெண் இருவருக்குமே உடல், உடை குறித்து ஒரு கவனம் இல்லை. அந்த வீதிகள் ஒரு சுதந்திர வெளியாக இருந்தது. பெண் என்ற ஜாக்கிரதை உணர்வோடு நாம் அங்கு நடமாட வேண்டிய அவசியமில்லை. அவர்களது அந்தப் பக்குவத்தை ரசித்தேன் என்கிறார். மற்றொரு ஆச்சரியம். நம்முடைய தமிழ் தொன்மத்திற்கும் அவர்கள் பூர்வகுடிக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது என்பதை அவர்கள் பழக்கவழக்கத்திலிருந்து அறிந்து கொண்டேன் என்கிறார். அவர்களும் நம் கிராம மக்களைப்போல பாம்பை வழிபடுகிறார்கள். சடங்கு, குறி சொல்லுதல்

போன்றவை அங்கும் உண்டு. அவர்களும் கனவுகளுக்கு முக்கியத்துவம் தருகிறார்கள்"[21] என்று கூறுகிறார் தமிழச்சி.

இவ்வாறு இவர் அயல் நாடான ஆஸ்திரேலியாவிற்குச் சென்று அங்குள்ள மக்களின், தமிழர்களின் பண்பாடு குறித்து அறிந்து வந்துள்ளார். இதன்வழி இவரின் உலக அறிவு விரிவு பெற்றுள்ளது.

**<u>பேராசிரியர்</u>**

இவர் சிறந்த ஆங்கிலப் பேராசிரியராகவும் விளங்கியுள்ளார். இவர் அண்ணாநகரில் அமைந்துள்ள வள்ளியம்மாள் மகளிர் கல்லூரியிலும், நாமக்கல் பி.ஜி.பி கலை அறிவியல் கல்லூரியிலும், சென்னை இராணிமேரி கல்லூரியிலும் இவர் ஆங்கிலப் பேராசிரியையாகப் பணியாற்றியுள்ளார். திராவிட முன்னேற்ற கழகத்தின் இளைஞர் மாநாட்டில் கொடியேற்றும் பணியை மேற்கொண்ட நிலையில் தன் பேராசிரியப் பணியில் இருந்து விலகினார்.

**<u>விருதுகள்</u>**

இவரின் கவிதைத்தொகுதிகளுக்கும், இவரின் ஒட்டு மொத்த பங்களிப்புகளுக்கும் விருதுகள் வழங்கப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் பின்வருமாறு.

- இவரின் முதல் கவிதைத் தொகுப்பான 'எஞ்சோட்டுப்பெண்' என்னும் தொகுதிக்குக் கவிஞர் சிற்பி விருது வழங்கப்பெற்றது.
- இத்தொகுப்பிற்கு மகாகவி பாரதியார் விருதும் அளிக்கப்பெற்றது.
- இவரின் வனப்பேச்சி தொகுப்பிற்கு தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றத்தின் ஏலாதி இலக்கிய விருதும், திருப்பூர் தமிழ்ச்சங்க விருதும் வழங்கப்பெற்றன.
- .இவருக்குத் தமிழக அரசு பாரதிதாசன் விருதினை இரண்டாயிரத்து ஒன்பதாம் ஆண்டு வழங்கிச் சிறப்பித்தது.

- களம் புதிது இலக்கியக் குழு இவருக்கு இரண்டாயிரத்துப் பத்தாம் ஆண்டு சிறந்த கவி ஆளுமை விருதினை வழங்கி பெருமைப்படுத்தியுள்ளது.

இவ்வாறு இவரின் படைப்புகள் மதிப்பிற்குரிய பல விருதுகளைப் பெற்றுத்தந்துள்ளன.

**விமர்சனங்கள்**

இவர் படைப்புகள் பற்றிய விமர்சனங்கள் பல தளங்களிலும் எழுந்துள்ளன. இவரின் நூல்களில் எழுதப்பெற்றுள்ள மதிப்புரைகளினாலும், இவருக்கு எழுதப்பெற்ற கடிதங்களினாலும் இவரின் படைப்பாளுமை கூர்மைப்படுத்தப்பெற்றுள்ளது.

“மனிதர்களையும் மண் கவிச்சையையும் முன்வைத்த ‘எங்சோட்டுப் பெண்ணில்’ வனப்பேச்சிக்கான எந்த அடையாளமும் இல்லை. ஆனால் வனப்பேச்சியில் எஞ்சோட்டுப் பெண்ணின் சுவடுகள் இருக்கின்றன”[22] என்று கல்யாண்ஜி இவரின் இரு தொகுப்புகளுக்கு இடையேயான தொடர்பினைக் காட்டுகிறார்.

தமிழச்சியின் கவிதைகளில் பெண்ணியத் தாக்கம் இருப்பதைப் பொன்னீலன் கண்டுள்ளார். “பெண்ணிய வேதனைகளின் இழைகளையும் உங்கள் கவிதையில் பல இடங்களில் நான் கண்டேன். ஆராவாராம் இல்லாமல் உங்க ஆதிக்க எதிர்ப்பையும், அதன் மீதுள்ள கசப்பையும், வலிமையாகப் பதிவு செய்திருக்கிறீர்கள்.”[23]

மஞ்சணத்தி தொகுப்பினைப் பற்றி அரவிந்த அப்பாதுரை பின்வருமாறு கருத்துரைக்கிறார். “மஞ்சணத்தியை வெடித்துச் சிதறும் வானவேடிக்கைகள் கொண்ட கவிதைத்தொகுப்பு, திடமான ஒரு பார்வையின் ஆரம்ப காலம்.

இருப்பின் அடையாளங்கள் விழிக்கும் வைகறை”[24] என்பது அவரின் விமர்சனமாகும்.

தமிழச்சியின் கவிதைகளை வட்டார மொழி இலக்கியமாகக் காண்கிறார் அறிவுமதி. “பழமலய், என்.டி.ராஜ்குமார், கரிகாலன், புகழேந்தி, கண்மணி குணசேகரன், தய். கந்தசாமி, என நீளும் வட்டார வாழ்வியல் சார்ந்த தமிழ்க் கசிவுகளின் பட்டியலில் இளம்பிறை, தேன்மொழி, எனும் பெயர்களும் அண்மையில் இணைந்தன. தமிழச்சியும் இந்தப் பட்டியலில் தம் பெயரை அழுத்தப் பதிக்கிறார்”[25] என்பது அறிவுமதியின் கூற்று.

இவ்வாறு பல்வேறு விமர்சனங்கள் தமிழச்சியின் படைப்புகள் பற்றி எழுந்துள்ளன.

இவ்வகையில் கிராமத்து வாழ்வு, அரசியல், அன்பு, கவிதை, திறனாய்வு, கட்டுரை, பேட்டி, விருது, நாட்டியம், நாடகம் போன்ற பல துறைகளில் தடம் பதித்து வரும் குறிக்கத்தக்கப் படைப்பாளராக தமிழச்சி தங்கபாண்டியன் விளங்கி வருகிறார்.

**தொகுப்புரை**

தமிழச்சி தங்கபாண்டியன் விருதுநகர் மாவட்டம், மல்லாங்கிணறு என்ற கிராமத்தில் தங்கபாண்டியன் என்பவருக்கு மகளாகப் பிறந்தார். இவரின் இயற்பெயர் சுமதி என்பதாகும். இவரின் முதல் படைப்பு தமிழச்சி என்ற பெயரில் வெளிவர அதன் க்ாரணமாக தமிழச்சி என்ற புனைப்பெயரை இவர் பெற்றார். மேலும் இவரின் தந்தையார் பெயர் இவருடன் இணைய தமிழச்சி தங்கபாண்டியன் ஆனார்.

இவர் பன்முக ஆளுமை கொண்டவர். இவர் ஆங்கில இலக்கியத்தில் முனைவர் பட்டம் வரை படித்தவர். இவர் நாடகம், நடனம் போன்ற கலைகளிலும் வல்லவர். இவர் இராணிமேரி கல்லூரியில் ஆங்கில

விரிவுரையாளராகப் பணியாற்றித் தன் அரசியல் நுழைவு காரணமாக அப்பணியை விடுத்தவர். இவர் தந்தையார் திராவிட முன்னேற்றக் கழகம் சார்ந்த அரசியல்வாதி என்பதால் இவரும் அக்கழகத்தில் தன்னை இணைத்துக்கொண்டு அரசியலில் ஈடுபட்டுவருகிறார்.

இவரின் உடன் பிறந்த தங்கம் தென்னரசு திராவிட முன்னேற்றக் கழக அரசு தமிழகத்தை ஆளும் நிலையில் அமைச்சர் பதவி வகித்தவர். இவர் ஒரு பொறியியல் பட்டதாரி.

இவரின் கவிதைப் படைப்புகளாக எஞ்சோட்டுப்பெண், வனப்பேச்சி, மஞ்சணத்தி, அருகன், ஆகிய நான்கும் உரைநடைப் படைப்புகளான பாம்படம், சொல்தொடும் தூரம், மயிலிறகு மனசு, மண்வாசம் ஆகிய நான்கும் அமைகின்றன. மேலும் இவரின் பேட்டிகள் தொகுக்கப்பெற்றுத் தனி நூலாக பேச்சரவம் கேட்டிலையோ என்ற தலைப்பில் வந்துள்ளது. இவரின் படைப்புகள் பற்றிய விமர்சனங்கள் காற்று கொணர்ந்த கடிதங்கள் என்ற தலைப்பில் வெளிவந்துள்ளன.

இவரின் படைப்புகள் கிராமத் தன்மை கொண்டவை. நகர வாழ்க்கையில் உள்ள வசதிகளைக் காட்டிலும் கிராமவாழ்வில் உள்ள அன்பு, பண்பு, நேசம் இவரின் மனதில் ஈர்ப்பினைப் பெற்று அவை இவரின் படைப்புகளில் நிலைத்த இடத்தைப் பெற்றுள்ளன.

**<u>சான்றாதாரங்கள்</u>**

---

[1] தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப. 147

[2] தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப.147

[3] தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண், ப.32

[4] தமிழச்சி தங்க பாண்டியன், வனப்பேச்சி, பதிப்புரை,ப. 8

[5] தமிழச்சி தங்க பாண்டியன், வனப்பேச்சி, பக் 10-11

[6] தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 18

[7] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப. 9

[8] பிரபஞ்சனின் முன்னுரை, தமிழச்சி தங்கபாண்டியன், பாம்படம், ப. 12

[9] தமிழச்சி தங்கபாண்டியன், மயிலிறகு மனசு, ப. 5

[10] தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ.ப 11

[11] மு. அருணாசலம், தமிழச்சியின் வனப்பேச்சியில் மண்ணும் மனித உறவுகளும் ப.103

[12] தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,பக் 112- 113

[13] தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,ப. 113

[14] தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,ப. 113

[15] தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப. 39

16 தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப. 39

17 தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,ப 114 (கருத்துச் சுருக்கம்)

18 தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,ப. 129

19 தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,பக். 129-130

[20] தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,ப. 130

[21] தமிழச்சி தங்க பாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ,ப. 135

[22] தமிழச்சி தங்க பாண்டியன், காற்று கொணர்ந்த கவிதைகள், ப. 14

[23] தமிழச்சி தங்க பாண்டியன், காற்று கொணர்ந்த கவிதைகள், ப. 22

[24] தமிழச்சி தங்க பாண்டியன், காற்று கொணர்ந்த கவிதைகள், ப. 48

[25] தமிழச்சி தங்க பாண்டியன், காற்று கொணர்ந்த கவிதைகள், ப. 53

## இயல். 2

## பெண்ணிய நோக்கில் கவிதைப் படைப்புகள்

தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைகள் அவருக்குத் தனித்த அடையாளத்தை வழங்குவனவாக உள்ளன. அவரின் படைப்புகளில் அவரை முன்னிறுத்துவன அவரின் கவிதைப் படைப்புகளே ஆகும். அவர் தன் கவிதைகளைப் பொதுவான சொல்லாடலில், பொருள் நிலையில் கையாண்டாலும் அவற்றினுள் மெல்லிய நிலையில் பெண்ணியச் சொல்லாடல்கள், பெண்ணியக் கருத்துகள் வெளிப்பட்டு நிற்கின்றன. அவர் ஒரு பெண்ணியக் கவிஞர் என்ற நிலையில் முழுதுமாக அறியப்படா நிலை இருந்தாலும் அவரின் கவிதைகளில் பெண்ணிய வெளிப்பாடு தொக்கி நிற்பதை உணரமுடிகின்றது. தமிழச்சி தங்கபாண்டியன் கவிதைகளில் வெளிப்படும் பெண்ணிய நிலைப்பாட்டை எடுத்துரைப்பதாக இவ்வியல் அமைகின்றது.

### பெண்ணியம்

தற்கால நிலையில் பல்வேறு சமுதாய இயக்கங்கள் தோன்றி சமுதாயத்தில் விழிப்புணர்வினை ஏற்படுத்தி வருகின்றன. இவ்வியக்கங்களில் உலக அளவில் முன்நிற்பது பெண்ணிய இயக்கங்களாகும். இந்தியச் சூழலில், தமிழ்ச் சூழலில் பெண்ணியம் என்பது மரபு நிலை மீறாத பெண்ணியமாக அணுகப்பெற்று வருகிறது.

இந்நிலையில் பெண்ணியம் என்பதை வரையறுத்துக்கொள்ள பின்வரும் கருத்துகள் துணை செய்கின்றன.

'பெண்ணியம் என்பது பெண்களின் எல்லாச் சிக்கல்களையும் புரிந்து கொண்டு, அவற்றை நீக்க முயல்வதாகும். அதன்மூலம் உலக அளவில் அரசியலிலும், பண்பாட்டிலும், பொருளாதாரத்திலும் ஆன்மீகத்திலும் பெருத்த மாற்றத்தை ஏற்படுத்தமுடியும் என்கிறார் சார்லட் பன்ச் என்பவர். மேலும் அவர்

பெண்ணியம் என்பது பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டுமல்ல. சமூகத்தையே மாற்றியமைக்க முயல்வதாகும்”[1] என்ற கருத்து பெண்ணியம் என்பது உலக அளவில் பெண்களுக்கான உரிமைகளைப் பெற்றுத் தருவதும், சமுதாயத்தை மாற்றிக் கட்டமைப்பதும் ஆகும் என்பதைச் சுட்டி நிற்கிறது.

‘பெண்ணியம் என்பது பெண் சமத்துவம் வேண்டிப் போராடும் பெண் இயக்கங்களையும், அவற்றின் செயல்பாடுகளையும் குறிக்கிறது”[2] என்கிறார் வாசுகி ஜெயரத்னம்.

‘சமூகத்திலும் வேலைத்தளத்திலும் குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை, மற்றும் சுரண்டல் பற்றிய பெண்களின் உணர்வு நிலைகளும், இந்நிலை மாறுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப் பூர்வமான நடவடிக்கைகளும் பெண்ணியத்தின் பரந்துபட்ட வரைமுறையாக இப்போதைய நிலையில் கொள்ளலாம்’[3] என்கிறார் தேவதத்தா.

“பெண்களின் அடிமைப்பட்ட நிலைக்கு அடிப்படைக் காரணம் ஆண் ஆதிக்கமே என்றும், பாலின ரீதியாக ஒடுக்குமுறையை வாழ்வின் அனைத்து நிலைகளிலும் சமூகம், அரசியல், குடும்பம், பொருளாதாரம், கலை போன்றவற்றில் இனம் கண்டு அவற்றிற்கு எதிராக இயங்கப் பெண்கள் தம்முள் ஓரின ஒற்றுமையுடன் செயல்பட வேண்டிய அவசியத்தை உணரச் செய்வதும் பெண்ணியத்தின் நோக்கங்களாகும்”[4] என்கிறார் காஞ்சனா.

இவற்றின்வழி பெண்ணியம் என்பது பெண்களை விழிப்படையச் செய்து, அவர்களுக்கான உரிமைகளைப் பெற வைத்து, விடுதலையுடன் இயங்க வைக்கக் கூடிய சமுதாய இயக்கம் என்பது தெரியவருகிறது.

பெண்ணியம் என்ற சமுதாயச் செயல்பாடு பல தளங்களில் இயங்குகிவருகிறது. சமுதாயவியல், சமயவியல், சுற்றுச் சூழலியல், தகவல்

தொடர்பியல், இலக்கியத் திறனாய்வியல் போன்ற பல துறைகளில் அது தன் நோக்கங்களைச் செயல்படுத்தி வருகிறது.

இந்நிலையில் இலக்கியங்களைத் திறனாயும் பெண்ணிய ஆய்வு முறை ஒன்றும் வளர்ந்து வருகிறது. பெண்ணியத் திறனாய்வு எனப்படும் அத்துறை ஆண், பெண் படைப்புகளை பெண்ணிய நோக்கில் திறனாய்ந்து பெண்முன்னேற்றம் கொள்ள கருத்துகளை வழங்கி வருகிறது.

<u>பெண்ணியத் திறனாய்வு</u>

"பெண்ணிய நோக்கில் அல்லது பெண்ணின் பார்வையிலிருந்து செயல்படும் திறனாய்வு, பெண்ணியத் திறனாய்வு ஆகும்"[5] என்பது பெண்ணியத் திறனாய்வின் பொதுவான வரையறையாகும்.

'பெண்ணியத் திறனாய்வு என்பது சமூகம் என்ற பன்முகப்பட்ட அனுபவ உணர்வு நிலையில் பெண்ணினுடைய ஆளுமை எவ்வாறு இலக்கியத்தில் வெளிப்படுத்தப்படுகிறது என்று பார்ப்பதாக அமைகிறது'[6] என்பது பெண்ணியத் திறனாய்வின் போக்கினை அறிவிப்பதாக உள்ளது.

பெண்ணியத் திறனாய்வு என்பது பிறந்த இடத்தால் மூன்றுவகைப்படுகின்றன. அவை பின்வருமாறு.

1. பிரெஞ்சு பெண்ணியத் திறனாய்வு
2. அமெரிக்கப் பெண்ணியத் திறனாய்வு
3. ஆங்கிலப் பெண்ணியத் திறனாய்வு

என்பன அம்மூன்றும் ஆகும்.

பெண்ணியத் திறனாய்வு தன்மையின் வகையில், இரண்டு வகையாகக் கொள்ளப்படுகின்றது. அவை பின்வருமாறு

1. பெண்ணிய வாசிப்புத் திறனாய்வு

2. பெண்ணெழுத்துத் திறனாய்வு

என்பன அவை இரண்டுமாகும். பெண்ணிய வாசிப்புத் திறனாய்வு என்பது ஆண்படைத்த இலக்கியங்களில் பெண் படைக்கப்பெற்றுள்ள திறத்தை வெளிப்படுத்தும் திறனாய்வாகும். பெண்ணெழுத்துத் திறனாய்வு என்பது பெண் படைத்த இலக்கியங்களில் காணப்படும் பெண்முன்னேற்ற நிலையை ஆராய்வதாகும்.

இவ்விரு திறனாய்வில் பெண்ணெழுத்துத் திறனாய்வின் அடிப்படையில் தமிழச்சி தங்கபாண்டியனின் படைப்புகளை ஆராய முடிகின்றது.

**<u>தமிழச்சி தங்கபாண்டியன் நோக்கில் பெண்ணியம்</u>**

தமிழச்சி தங்கபாண்டியன் திராவிட அரசியில் பின்னணி சார்ந்தவர். திராவிட இயக்கங்கள் பெண் முன்னேற்றத்திற்குப் பெரிதும் வாய்ப்பளித்துவந்தன. தந்தைப் பெரியார், அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி ஆகியோர் பெண்களை முன்னேற்றும் நோக்கில் செயல் பட்டவர்கள் ஆவர்.

தந்தைப் பெரியார் “பெண் ஏன் அடிமையானாள்” என்ற நூலில் பெண்ணியக் கருத்துகளைப் பெரிதும் வெளிப்படுத்தியுள்ளார். “மனிதப்பிறவி கொண்ட ஆணும், பெண்ணும் இயற்கைத் தத்துவத்திலும் சமுதாய வாழ்க்கைத் தன்மையிலும் ஒருவருக்கொருவர் தாழ்ந்தவர்களல்லவென்பதை அறிவுடைய உலகம் மறுத்தற்கியலாது. அங்க அமைப்பிலன்றி, அறிவின் பெருக்கிலோ, வீரத்தின் மாண்பிலோ ஆண் பெண்களுக்குள் ஏற்றத்தாழ்வான வித்தியாசம் எதுவும் காண இயலுமா? இயலவே இயலாது. ஆடவரிலும் சரி, பெண்டிரிலும் சரி, முறையே அறிவாளிகளும், ஆண்மையுடையோரும், அறிவிலிகளும், பேடிகளும் உண்டு. இவ்வாறிருக்கத் திமிர் படைத்த ஆணுலகம் பெண்ணுலகத்தைத் தாழ்த்தி, இழித்து, அடிமைப்படுத்தி வருத்துதல்

முறைமையும் நியாயமுமாகுமா?"[7] என்று பெரியார் தன் நூலில் பெண் உரிமைக்கான வினாவினை எழுப்புகிறார். பெரியாரின் பெண் ஏன் அடிமையானாள் நூல் முழுவதும் பெண்ணியச் சிந்தனைகள் பரந்து கிடக்கின்றன.

இவர் வழியை ஏற்று வந்த அண்ணாவும், பெண் முன்னேற்ற கருத்துகளை வலியுறுத்தி வந்தார். இதனைத் தமிழச்சி தங்கபாண்டியனும் எடுத்துரைத்துள்ளார். "அண்ணா அவர்கள் முதலில் மூவலூர் இராமாமிருதம் அம்மையாருக்குத்தான் தன்னுடைய கையால் ஷீல்ட் கொடுத்து கௌரவிக்கிறாங்க (கௌரவிக்கிறார்கள்.). அதற்குப் பிறகு வை. சு. மஞ்சுளா, அலமேலு அப்பாதுரை, இப்படி பல ஆளுமைகள். இப்படி முற்போக்கான நான் சொல்கிற முற்போக்கு என்பது வெறும் படித்த பெண்களை மட்டுமல்ல. படிக்காத ஆனால் முற்போக்குக் கருத்துகளை உடைய பெண்கள் இன்றைக்கு 21 ஆம் நூற்றாண்டில் இல்லை., பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலேயே உருவாக்கி அவர்களைத் தூக்கிக் கொண்டாடிய இயக்கத்தில் நான் இருக்கிறேன்"[8] என்ற தமிழச்சி தங்கபாண்டியனின் கூற்று அறிஞர் அண்ணாவின் பெண் முன்னேற்றச் செயல்பாடுகளைக் காட்டுவதாக உள்ளது.

இவ்வாறு திராவிடக் கொள்கையில் மிக முக்கியமானதாக பெண்முன்னேற்றம் தொடர்ந்து செயல்பட்டு வந்துள்ளது. இந்தச் சூழலில் தமிழச்சி தங்கபாண்டியனும் பெண் முன்னேற்ற சமுதாயத்தின் அங்கமாக விளங்கி பெண் முன்னேற்றம் பெறத் தன் கவிதைகளால் முயன்றுள்ளார். அவரின் பெண்ணிய நோக்கு என்பது மென்மையான அதே நேரத்தில் உறுதியாக பெண் முன்னேற்ற வயப்பட்டதாக இருந்துள்ளது என்பதை அவரின் சிந்தனைகள் உணர்த்துகின்றன.

"பெண்ணியமும் பெண்விடுதலையும் ஆண்களையும் உள்ளடக்கியதாக இருக்கவேண்டும். ஆக ஆணுக்கான பொறுப்புணர்வுடன் கூடிய ஒரு பெண்

விடுதலையைத்தான் எங்களைப் போன்ற கவிஞர்கள் முன்வைக்கிறோம். அதனால்தான் பிராந்திய பெண்ணியம் என்ற ஒரு கருத்தியலை நான் முன் வைக்கின்றேன்.”[9] என்று தான் கையாளும் பெண்ணியத்தைப் பிராந்தியப் பெண்ணியம் என்று கருதுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

பிராந்தியப் பெண்ணியம் என்பது இந்திய மண்ணுக்கான, தமிழ் மண்ணுக்கான மரபுகளுடன் கலந்து பெண்உரிமையைப் பெற்றெடுக்கும் நிலைப்பாடு உடையதாகும். இந்நிலைப்பாட்டில் பெண்ணியச் செயல்பாடுகளை ஆற்றி வருகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இப்பிராந்தியப் பெண்ணியம் பற்றி மற்றொரு இடத்தில் தமிழச்சி தங்கபாண்டியன் விளக்குகிறார். உலகின் அத்தனை அதிர்வுகளையும் உள்ளடக்கியது கவிதை. அவ்வையும் ஆண்டாளும் சொல்லாத எதையும் நாங்கள் இப்போது புதிதாகச் சொல்லிவிடவில்லை. அவர்களின் நீட்சிதான் நாங்கள். அதன் அச்சு பெண் படைப்பாளிகளான எங்களிடம் இருக்கிறது. நவீனத்துவம், பின்நவீனத்துவம் என்பன போன்ற வடிவங்கள் மிக அவசியம். ஆனால் என் மரபு தமிழ் மரபு. என் அச்சு திராவிட இயக்கம். என் கைகளும் இறக்கைகளும் நவீனத்துவத்தில் பயணித்தாலும் என் சிந்தனைகள் அனைத்திலும் தமிழ் மணத்தின் தாக்கம் இருக்கும்”[10] என்று தான் கைக்கொள்ளும் பெண்ணிய நிலைப்பாடு பற்றிக் கருத்துரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

‘பெண்ணியம் என்று பார்த்தீர்கள் என்றால் அது “பிராட் கான்வாஸ்” ( Broad canvas) என்றுதான் சொல்லவேண்டும். அதற்குள் விவாதிக்க வேண்டிய விசயம் நிறைய இருக்கிறது. என்னைப் பொறுத்தவரை பெண்ணியம் அல்லது பெண் விடுதலை என்றால் பெண்ணுக்கு மனம் சார்ந்த விசயங்களையும் உடல் சார்ந்த விசயங்களையும் ஒரு ஆண் சொல்வது போலவே தடைகள் இல்லாமல் ஒரு பெண்ணும் சொல்ல முடிந்தது என்றால் அது மகிழ்ச்சியான விசயம். அது

வரவேற்கத் தக்க ஒன்றுதான்”[11] என்று பெண் ஆணுக்கு இணையாக, தன் கருத்துகளை, படைப்பாளுமையை வெளிப்படுத்தும் போக்கே உண்மையான பெண்ணியம் என்று கருதுகிறார் தமிழச்சி தங்க பாண்டியன்.

பெண்ணுக்கான தனித்த மொழி தேவை என்று பெண்ணியத் திறனாய்வு கருதுகிறது. இதுகுறித்தும் கருத்தினை அறிவித்துள்ளார் தமிழச்சி தங்க பாண்டியன். “இன்றைய தமிழ்ச் சூழலில் ஒரு பெண் குடும்பம், சமூகம், திருமணம், மதம், பாலியல் பாகுபாடு போன்ற நிறுவனங்களால் ஒடுக்கப்படுகிறாள். அதிலிருந்து மீண்டு அவளுக்கான அடையாளத்தைக் கண்டடைந்து அதனை வெளிப்படுத்த முனைகையில் ஒரு தனித்துவமான மொழியும், வேட்கை மிகுந்த ஒரு வெளிப்பாடும் பெண் படைப்பாளிக்குத் தேவையாக இருக்கிறது. அந்த வகையில் பெண்மொழி என்ற ஒன்றைப் பெண்ணியச் சிந்தனையாளர்களும், பெண் படைப்பாளிகளும் பெண்களுக்கான பிரத்யேக மொழி ஒன்றைக் கையாளுகிறார்கள்”[12] என்ற கருத்து பெண்ணுக்கான தனித்த மொழி தேவை என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

பெண்ணியத்தின் மற்றொரு கூறு தன் உடலை எழுதுதல் என்பதாகும். இதுகுறித்தும் தமிழச்சி தங்க பாண்டியன் கருத்தறிவித்துள்ளார். “ஆணுக்கு எவ்வாறு தன் உடல் குறித்து எழுதவோ பேசவோ உரிமை இருக்கிறதோ அது போல, பெண்ணுக்கும் உரிமை உண்டு. அதை எழுதுவதாலேயே அவர் மீது தரக்குறைவான விமர்சனம் வைப்பது என்பது கண்டிக்கத்தக்கது. தன் வலிமை, மனச்சிக்கலை பெண் எழுதுகிறபோது ஏன் விமர்சனம் வருகிறது? அவளது காமத்தை எழுதும் போது ஏன் விமர்சனம் வருகிறது. பெண் எழுதுவதற்கான சுதந்திரம் இருக்கவேண்டும்”[13] என்ற நிலையில் பெண்ணுடல் குறித்து பெண் எழுதுவது இயல்பே, உரிமையே என்று கருதுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இதுவரை விவாதிக்கப்பட்டவற்றால் தமிழச்சி தங்கப் பாண்டியன் பிரதேச பெண்ணியவாதியாகத் திகழ்கிறார் என்பதை உணரமுடிகின்றது. தமிழ் உணர்வு

சார்ந்து, ஆணுக்கு இணையான உரிமைகளைப் பெறும் நிலையில் அவரின் பெண்ணிய நோக்கு என்பது பிராந்திய வகைப்பட்டதாக விளங்குகிறது என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது. இவ்வடிப்படையில் அவரின் கவிதைகளில் காணப்படும் பெண்ணியக் கருத்துகளைத் தொகுத்து ஆய்வதாக இவ்வியல் அமைகின்றது,

**ஆண் பார்வை**

பெண்களை ஆண்கள் எப்பொழுதும் போகப்பொருளாகவே, கவர்ச்சிக்குரியவளாகவே காண்கிறார்கள். அவர்களின் பார்வையில் தொனிக்கும் வக்கிரத்தைப் பல கவிதைகளில் பதிவு செய்திருக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“பெண் காம வேட்கைக்கும், அடுப்பூதுதல் முதலிய வேலைகட்கும் பயன்படும் ஒரு பொருள் என்று கருதுதல் அறியாமை”[14] என்கிறார் திரு.வி.கல்யாணசுந்தரனார். இவரின் கருத்துப்படி ஆணிய நோக்கில் பெண் போகப்பொருளாகவே கருதப்பெறுகிறாள் என்ற கருத்தினைப் பெற முடிகின்றது.

“பெண்ணின் உடல்வகைச் செயல்பாடுகளாகப் பாலியல் செயல்பாடு, பணிவிடைச் செயல்பாடு என இருவிதச் செயல்பாடுகள் வரையறுக்கப்பட்டுள்ளன. இவை இரண்டும் ஆண் உடலின் பாலியல் மற்றும் பாலியல் அல்லாத இருவகை நுகர்ச்சிகளுக்காக வடிவமைக்கப்பட்டுள்ளன. ஆணுடைய பாலியல் தேவையைப் பூர்த்தி செய்கிற பெண்ணின் உடல்மீது ஒருவித புனைவுகளும், அவனுடைய வயிற்றுப் பசி தீர்க்க உதவும் சமையல், வீட்டைப் பராமரித்தல்,குழந்தைகளை வளர்த்தல் முதலானவற்றில் தன் உழைப்பை ஈடுபடுத்துகின்ற பெண் உடல்மீது மற்றொருவித புனைவுகளும் ஆண்களால் உருவாக்கப்பட்டுள்ளன”[15] என்ற நிலையில் ஆணின் பெண் குறித்தான இருவகைப் பார்வைகளை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

குறிப்பாக இவ்விரு ஆண் ஆதிக்கப் பண்புகள் இல்லத்தரசி மீது திணிக்கப்படுகிறது. முதல் பார்வையான பாலியல் சார்ந்த பார்வை – எல்லாப் பெண்களையும் காணும்போதும் ஆணுக்குள் எழுகிறது என்பது இங்கு எண்ணத்தக்கது. இவ்வெண்ணம் ஆணுக்குள் இருப்பதைத் தமிழச்சி தங்கப் பாண்டியன் பல கவிதைகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

பேருந்தில் பயணிக்கும்போது பெண்களைப் பார்க்கும் ஆண்பார்வைகள் பற்றி, பல கவிதைகளை அவர் வரைந்துள்ளார்.

“இப்பேருந்து நெரிசலில் பெண்ணாய்

இச்சிக்கப் படுவதைவிடப் பேசாமல்

மைனாவாகப் பிறந்திருக்கலாம்

இடிக்கும் முழங்கைகள் தவிர்த்து

இழுத்து முந்தானை

சொருகி இறங்குகையில்

அந்தச் சந்தேகம் வந்தது

பார்த்தவை அனைத்துமே

ஆண் மைனாக்களோ?”[16]

மேற்கவிதையில், பேருந்து நெரிசலில் சிக்கித் தவித்த பெண் இறங்கும்போது தன்னை ஆசுவாசப் படுத்திக் கொள்கிறாள். இருப்பினும் பேருந்தில் நிற்க இடமின்றித் தவித்தபோது அவளின் உடலை அங்கும் இங்கும் பார்த்த ஆண் பார்வைகளை அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அதனால் அவள் மனிதப் பிறவியாகப் பிறந்ததைவிட மைனாவாகப் பிறந்திருக்கலாம் என்று எண்ணுகிறாள். அப்படிப் பிறந்தாலும் எல்லா ஆண்

மைனாக்களும் பெண் மைனாக்களை வதைப்படுத்தும் நோக்கில்தான் பார்க்கும் என்று கவிதையின் போக்கு உணர்த்துகிறது.

இந்த எண்ணத்தை இக்கவிதையின் முதல் பகுதி சொல்கிறது.

“மைனாக்களுக்கென

பரந்த மைதானமும்

விரிந்த புல்வெளியும் உள

விரும்பினால் புசிக்கலாம்

விண்ணோக்கி விரிக்கலாம்

மண்கிளறி முகம் புதைக்கலாம்

அலகு சொருகலாம்

இணையோடு பிணையலாம்

இல்லையெனில் தத்தித்தத்தித்

தனியிடம் போகலாம்

வசிப்பிடம் ஒன்றின்றியும் வசிக்கலாம்

இவை எதுவுமே சாத்தியப்படாவிடின்

சத்தமின்றிச் செத்துப்போகலாம்”[17]

என்பன கவிதையின் முன்பகுதியாக எழுதப்பெற்றுள்ளது. மைனா என்பது பெண் விடுதலைக்கான குறியீடாகக் கொள்ளப்பட்டாலும் அதனை அடக்கிட ஆண் மைனாக்களின் பார்வை இருப்பதாகக் கவிதை முடிகிறது. இக்கவிதைக்குத் தலைப்பு “ஒரு பேருந்தும் சில மைனாக்களும்” என்பதாகும். மைனாக்கள்

என்பது விடுதலையின் குறியீடாக விளங்க ஆண் மைனாக்கள் ஆண் மைனர்களாக விளங்கும் நிலைப்பாடு இக்கவிதைக்குள் காட்டப்பெற்றுள்ளது.

இதுபோல மழையில் நனைந்த ஒரு பெண்ணின் மேனியினைக் கண்கொட்டாமல் பார்க்கும் ஆண்வர்க்கத்தைச் சாடுகிறது ஒரு கவிதை.

“வீடு திரும்பியவுடன்

ஒட்டியிருந்த ஆடைகளை

உலர வைத்தாயிற்று

பயணத்தில் பார்த்த

நனைந்த உடல்களினால்

சேரும் சகதியுமான மனசை?”[18]

என்ற கவிதையில் சேரும் சகதியுமாக ஆண்மனசு இருப்பதைக் காட்டுகிறார் கவிஞர்.

இளம்பெண் ஒருத்தி மழையில் நனைந்து கொண்டே காய்கறி விற்கிறாள். அவளின் நனைந்த உடலைப் பார்ப்பதற்காக வந்த ஆண்கள் அவளிடம் காய்கறிகளை வாங்கிப் போகிற நிலையில் அவளையும் வெறித்துப் பார்க்கிறார்கள். இதனைப் பின்வரும் கவிதை பதிவு செய்கிறது.

“முழுக்க நனைந்தபடி

வியாபாரம் பார்க்கும் இளம்பெண்ணிடம்

நிமிடத்தில் விற்றுவிடுகின்றன

மூடி வைத்த காய்கறிகள்”[19]

மேற்கவிதையடிகளில் மூடிவைத்த காய்கறிகள் என்பது அவள் தன்னை ஆடையால் மூடிக்கொள்ளவும் மறந்து தான் விற்கும் பொருள்களை மூடிவைத்துக் காப்பாற்றும் நிலைப்பாடு எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. இருப்பினும் அவள் மூடிவைத்திருந்த காய்கறிகளை வாங்க ஆண்கள் கூட்டம் விரைவாய் வருகிறது. ஆண்களின் கூட்டம் காய்கறி வாங்க வரவில்லை. அவளை நோட்டமிட வந்துள்ளது என்பதை இடித்துரைத்தலாக இக்கவிதை சுட்டிநிற்கிறது.

"இரவெல்லாம்

தன் மேல் மேய்ந்திருந்த

கண்களைப் பிடுங்கி

வெளி வாசலைத் தெளிக்கிறாள்

வெயிற் சூட்டுக்காக வெளித்திண்ணையில்

படுத்திருந்த பஞ்சவர்ணம்"[20]

கோடைக் காலத்தில், வெளித்திண்ணையில் புழுக்கம் காரணமாகப் ஒரு பெண் படுத்திருக்க, அவளின் படுத்திருக்கும் உடலமைப்பினை தெருவழி செல்லும் ஆண்களின் கண்கள் பார்த்துக்கொண்டே செல்கின்றன. அவற்றைத் துடைத்துக்கொண்டு வெளிவாசலின் குப்பைகளை நீர் ஊற்றி அவள் அகற்றுகிறாள். இக்கவிதையிலும் ஆண்களின் பார்வைகள் எப்போது பெண்களை ருசிக்கும் நிலையிலேயே இருக்கிறது என்பதைக் கவிஞர் பதிவு செய்துள்ளார்.

பெண் ஆணின் பாலியல் வேட்கைககான பொருளாகவே விளங்குகிறாள். அவளின் பாலியல் வேட்கை என்பது மதிக்கப்படாத நிலையில், ஆணின் அனைத்து வேட்கைகளுக்கும் அவனின் தேவை இருக்கும் நிலையிலும் பெண்

சம்மதிக்க வேண்டியிருக்கிறது என்பதையும் தமிழச்சியின் பல கவிதைகள் காட்டுகின்றன.

“ஒரு கர்ப்பிணியின் வாந்தியினை
எடுத்து உண்ட எத்தியோப்பியக்
குழந்தைகளின் பட்டினியைத்
தொலைக்காட்சியில் பார்த்தபின்பும்
கலவி இன்பம் தூய்த்த
அந்த இரவிற்குப் பின்தான்
முற்றிலும் கடைந்தெடுத்த
நகரவாசியானேன் நான்”[21]

என்ற கவிதையில் தாய்மையின் உடல் உபாதையான வாந்தி எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. அதனைப் புசிக்கவேண்டிய நிலையில் உள்ள எத்தியோப்பியக் குழந்தையின் வறுமை காட்டப்படுகிறது. இதற்குப் பின்னும் கலவி வேண்டி வந்த ஆணின் (கணவனின்) வேட்கையை மேற்சொன்ன அதே வெறுப்புடன் தணிக்க வேண்டியிருப்பதையும் இக்கவிதை சுட்டுகிறது.

இவ்வாறு ஆண்கள் பெண்களை நோட்டமிடும், அவர்களைப் போகப் பொருளாகக் கருதும் நோக்கிலும் செயல்படுகின்றனர் என்பதை இக்கவிஞர் தெளிவுபடக் காட்டியுள்ளார். ஆண் இயல்புகளை ஆதிக்கத் தன்மையற்று ஆனால் அதே நேரத்தில் விமர்சனநோக்கில் கூர்பார்க்கும் பணியை இவரின் கவிதைகள் செய்கின்றன.

இவரின் கவிதைகளில் பெண்கள் நிலைப்பாட்டை எடுத்துச்சொல்லும் பாங்கு அதிக அளவில் காணப்படுகிறது. இதனைப் பின்வரும் பகுதிகள் ஆராய்கின்றன.

**பெண்மை**

பெண்ணிய நிலையில் பெண்மை என்பதை நோக்கினால் அது மரபு சார்ந்த பின்னணி உடையதாகும். தனக்கான தேவைகளை ஆண்களின் சார்புடன் பெற்று குடும்பம் என்ற கட்டுப்பாட்டுக்குள் வாழும் தன்மை பெண்மை என்று குறிக்கப்படுகிறது. இதன் வளர்நிலை பெண்ணியம், பெண் என்பனவாகும். தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைகள் பெண்மைநிலைப் பட்டனவாக விளங்குகின்றன. இவரின் கவிதைகளில் மரபு சார்ந்த பெண்மைத்தன்மை அமைந்து நிற்கிறது.

“குடத்துநீர்

சிறுகுப்பிக் குடிநீர்

குளத்துநீர்

குட்டைநீர்

குளிர்ப்பதன நீர்

ஏரிநீர்

அடைகாக்கும் அணைநீர்

அளவோடு விழும் மடைநீர்

ஆவியாகும் முன்பான அனல்நீர்

தூசியில்லா வடிநீர்

மண் தேங்கும் மழைநீர்

தொடுவாடும் கரையிடும் கடல்நீர்

எனும் அளவுகளின்

உள்ளோடி மூச்சடைக்கும்

உருவங்களுக்குள் உடைபடாத

பெண்மையாய்”[22]

என்ற கவிதையில் பெண்மை என்ற சொல்லாடல் மூச்சடைக்கும் உருவங்களுக்குள் உடைபடாத பெண்மை என்ற நிலையில் கையாளப்பெற்றுள்ளது. நீருக்கு உருவம் உண்டு. அந்த உருவத்திற்கு ஏற்ப கரை உடைக்காமல் அது பயணப்படுகிறது. அதுவே அதற்கு அழகு. அந்நிலையில் பெண்ணும் தனக்கான பெண்மை வடிவில் அமையவேண்டும். ஆனால் அந்த வடிவுக்குள் இறுக்கமாகி மூச்சடைத்து மயக்கமாகிவிடக் கூடாது. தனக்கான அளவிடப்பெற்ற விடுதலையுடன் ஓடிக்கொண்டு இருக்கவேண்டும் என்று கருதுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

வீடு என்பது ஒரு இருப்பிடம். அந்த இருப்பிடத்திற்கு வாசல்படி கதவுகள் அவசியம். அந்த வீடு என்பது பெண்கள் விரும்பியோ விரும்பாமலோ அடைந்து கிடக்கும் கூடாகி விடுகிறது. இந்நிலையில் தன்னை அடைத்து வைத்திருக்கும் கதவினைப் பற்றி ஒரு பெண் எண்ணுவதாக ஒரு கவிதை புனையப்பெற்றுள்ளது.

“வீட்டின் நிலைப்படியே

கதவினை தீர்மானிக்கிறது.

… சட்டங்களைத் துறந்தால்

கதவென்பதன் பொருளென்ன

வெறும் மரம் தானே எனக் கற்பிக்கப்படுகிறது”[23]

இக்கவிதையில் பயன்படுத்தப்பெற்றுள்ள கதவு, சட்டம் ஆகியன குறியீட்டுப் பொருளுடையவை. சட்டங்களைத் துறந்தால் என்பது பெண்ணுக்கு ஆண் வழங்கியுள்ள சட்டங்களையும் உட்படுத்துவதாகும். சட்டங்களைத் துறந்தால் கதவு பொருளற்றதாகிவிடும். பெண்களும் சட்டங்களை மறந்தால் பெண் நிலை தாழும் என்ற அளவில் இந்தக் கவிதை குறியீட்டு நிலைப்பாடு உடையதாக விளங்குகிறது.

‘இருந்தாலும்

சிற்ப நேர்த்தியுடன்

இழைக்கப்பட்ட அதற்கு

இரும்புக் கீல்களுடான

பொருந்தாச் சேர்க்கை பற்றி

பொருமிட அனுமதியில்லை”[24]

என்று தொடரும் இந்தக் கவிதையில் சிற்ப நேர்த்தி என்பது பெண்ணின் அழகு பற்றியது ஆகும். இரும்புக் கீல் என்பது வலிமை மிக்க ஆணின் துணையைப் பற்றியதாகும். அழகான சிற்ப வேலைப்பாடு உடைய மரமும் வலிமையான வேலைப்பாடற்ற இரும்பும் சேரும் சேர்க்கை பொருந்தாச் சேர்க்கை என்பது போல உருவ அழகு மிக்கப் பெண்ணும், இரும்பு நிலை கொண்ட ஆணும் சேர்க்கப்படும் சேர்க்கை பெண்ணுக்கு நலம் தருவதல்ல என்பதை வெளிப்படுத்தக் கூட அனுமதியில்லை என்பதை இக்கவிதை காட்டுகின்றது. சேரும் சேர்க்கை என்பது கட்டாயப்படுத்தி இவரைத்தான் மணக்கவேண்டும் என்ற நிலையில் பெண் மனம் அறியாமல் செய்யப்படும் சேர்க்கை பற்றியதாகும். இதற்குள் அடங்கி வாழ வேண்டிய நிலையில் பெண்மை உள்ளது என்பதை இக்கவிதை வழி அறிந்து கொள்ள முடிகின்றது.

குடும்பம் என்ற கட்டுக்குள் வந்துவிட்டபின் அதனை விட்டு விலக இயலாத மரபுக்கட்டுப்பாடு பெண்ணுக்கு வந்துவிடுகிறது. குடும்பம் என்ற கட்டுக்குள் அவள் முடக்கித் தன்னை இழப்பவள் ஆகிறாள். இதனை மற்றொரு கவிதை பதிவு செய்கின்றது. இங்கும் கதவு ஒரு குறியீடாக வருகின்றது.

"சீறும் சர்ப்பமாய்ச்

சுளீரெனச்

சமயங்களில் சிதறிவிடுகின்ற

வார்த்தைகள்

சத்தமுடன்

அவன் மூடிச்சென்ற

கதவின்

அதிரும் முதுகில்

எதிரொலித்தது"[25]

என்ற கவிதையில் கணவனின் சொற்கள் பாம்பு சீற்றமாகத் தன்முன் விழுவதை ஒரு பெண் அறியும் நிலையைக் கவிஞர் காட்டுகிறார். மேலும் கணவன் கதவினை அறைந்து சாத்தும் நிலை இச்சூழலை விட்டு நீ வெளி கிளம்பக் கூடாது என்பதைக் காட்டுவதாக விளங்குகிறது.

இந்தச் சூழலை விட்டு விலகவும் முடியாமல், இருக்கவும் முடியாமல் அவள் படும்பாட்டை,

"விளிம்பின் அலையோ

வெளித்தள்ள

மையச் சுழலது உள்வாங்க

மனமுத்து அடைகாக்கும்

உடல்சிப்பி யொடுங்க

இத்திசைக்கு அத்திசை

வாழ்க்கை

உந்தித்தள்ளும் ஊஞ்சலென

இல்லறத்து அவள்"[26]

என்ற கவிதை அடிகள் ஆழமான பொருளுடையவை. ஒரு பொருள் சுழலுகின்றபோது அதனுள் மையவிலக்கு விசை, மைய ஈரப்பு விசை இரண்டும் சம அளவில் வேலை செய்து அதனை இருக்குமிடத்தில் அசையாமல் இருக்க வைக்கும். இதன் காரணமாக சுழலும் பொருள் வெளித் தள்ளப்படாது, உள்ளிழுக்கவும் படாது.. இதில் மாறினால் பொருளுக்குச் சேதம் வந்துவிடும். அந்நிலைப்பாடு இல்லறப்பெண்ணுக்கு உள்ளது என்கிறது இக்கவிதை. உடல் சிப்பி ஒடுங்கி, இத்திசைக்கும் அத்திசைக்கும் இல்லறத் தலைவி உந்தித்தள்ளப்பட அவள் அசையாது அப்படியே இருப்பதே நன்மை என்று இருக்கக் கற்றுக்கொள்கிறாள்.

இல்லறப்பெண்ணுக்கு அவள் விரும்பும் ஆடை அணிந்து கொள்வதைக் கூட கணவனால் தடை செய்ய முடிகின்றது. அவள் உண்ணும் உணவைக் கூட இவனே தீர்மானிக்கிறான். இந்நிலையை எண்ணி

"எனக்கான பருத்தி

உன் தோட்டத்தில் பயிரிடப்படுகிறது

அதற்கான நிலத்தையும் உரத்தையும்

நீரோட்டத்தையும் நீயே

முடிவு செய்கிறாய்

அறுவடை முடிந்து

ஆயத்த ஆடை ஆகும்வரை

அதனை அணி

ஆணியக் கண்காணிக்கிறாய்

இலகுவாக இருக்கிறதா

என்பதைவிட எல்லாவற்றையும்

இழுத்து மூடுகிறதா என்பதிலேதான்

உன் கவனம் முழுவதும்”[27]

என்ற கவிதையில் ஆடை அணிவதைக் கூட கண்காணிக்கும் ஆணியகண்காணியாய் ஒரு பெண்ணுக்குக் கணவன் இருப்பதைக் காட்டுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

உண்ணும் உணவிலும் இதே நிலைப்பாடு உள்ளது என்று இந்தக் கவிதை தொரடர்கிறது.

“எனக்கான ரொட்டியின் கோதுமையும்

உன் கைகளாலேயே

விதைக்கப்படுகிறது

நுகர்வின் இன்பமாய்

இரவுகளில் உனக்கும்

நகரும் இயந்திரமாய்ப்

பகலில் பணிகட்குமாய்

என் பொழுதுகள்

பாத்தி கட்டப்பட்டு

பகிரப்பட்டு விட்டன அந்த

கோதுமை வயல்களிலேயே"[28]

என்ற கவிதையில் ஆணின் உடலின் பசி, வயிற்றின் பசி தீர்க்கும் இயங்கும் இயந்திரமாக மனைவி இருப்பதைச் சுட்டுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். ஆணின் இவ்விரு தேவைகளுக்காகவே பெண் படைக்கப்பட்டுள்ளதாக ஆண் உலகம் அவளை எண்ணுகிறது என்பது இக்கவிதை தரும் தெள்ளிய முடிவாகும்.

பெண் சிந்திக்கத் தொடங்கிவிட்டால் ஆபத்து என்பதை மீசை என்ற குறியீட்டைக் காட்டி நிறுவுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"யோசிப்பின் தெளிவும்

சிந்தனையின் தீர்க்கமும்

ஊடுபாவுமெனில் பயிர் கொல்லும்

களைகளென அறிவித்து

அவற்றைப் பிடுங்கிவிடுகின்றாய்

உன் மீசை திருத்துகின்ற

நொடிப் பொழுதில்

என் இருப்பிடத்திறான செங்கற்கள்

உனது புராதனச் சூளையிலே

சுடப்படுகின்றன"[29]

என்ற நிலையில் பெண் சுய சிந்தனை பெற்றவளாக மாறிவிடக் கூடாது என்பதான கருத்தினை ஒவ்வொரு ஆணும் கொண்டிருப்பதாகக் கவிஞர் காட்டிவிடுகின்றார்.

"தேவையிருப்பின் தீக்குளிக்க வேண்டியிருக்கும்

என்கிற நினைவூட்டுதலுடன்

ஆசுவாசிக்கவென இருக்கின்ற

சாவித் துவாரங்களிலும் உன்

கண்களை ஒட்ட வைத்தபின்பே

எப்போதும் என்னைத் தனிமையில்

விட்டுச் செல்கிறாய்"[30]

என்ற கவியடிகளில் பெண் தனிமைச் சிறையில் அடைக்கப்படுவதும்,அவளின் செயல்பாடுகள் சாவித்துவாரத்தின் வழி கண்காணிக்கப்படுவதையும் அவலத்துடன் வெளிப்படுத்துகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

மற்றொரு கவிதையில் பெண்ணையும் அவளின் துணையான ஆடவனையும் ஒப்பு வைத்துப் பார்க்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். அதனைக் கவிதையாகத் தருவதைவிடப் பகுப்பு அட்டவணையாகத் தருவது புரிதலுக்கு எளிமையைத் தரும் என்பதால் இங்கு அட்டவணையாகத் தரப்படுகிறது.

| ஆண் | பெண் |
|---|---|
| பெண்ணின் இருப்பு என்பது பின்குறிப்பு போன்று ஒட்டிக் கொள்வது என்ற நிலையில் ஆணுக்கே முன்னிடம் அல்லது முக்கிய இடம் | பெண் என்பவள் ஆணின் பின்னிணைப்பு, பின்குறிப்பு போன்றவள். |
| பணிக்கென சிறிய முள், பயணத்திற்கென பெரிய முள் கொண்டது ஆணின் கடிகாரம் | நிமிட முள்கள் மட்டும் பெண்ணுக்கு இட ஒதுக்கீடு செய்யப்பெற்றுள்ளது. |
| மதுநெடியுடன் கதவு தட்டும் இரவு ஆணுடையது | முலை சப்பும் குழந்தை திடுக்கிட நீ முத்தமிட்டுவிடுவாயோ எனப் பதறும் இரவு பெண்ணுடையது |
| நிலையற்ற பணி, நீளம் பயணம் என்று பகல் கழிகிறது ஆணுக்கு | மின்சார ரயிலோ, பேருந்தோ உந்திப் போகின்ற பொதி மூட்டைகளின் அடுக்கு பெண்ணின் பகல் |
| நண்பர் ஆணுக்குப் புத்தகம் போன்றவர்கள் | நண்பர்கள் இலவச இணைப்பினைப் போன்றவர்கள் பெண்ணுக்கு |
| உண்டி, காமம் அருட்கொடை ஆணுக்கு | உண்டி, காமம் சுருங்கல் பெண்ணுக்கு அழகு |
| மனைவி என்பவள் பிள்ளைகளுக்காகத்தான் | பிள்ளைகளுக்காகத் தான் என்றால் தாய்மையும் தனமும் வேண்டாம். தனித்தொரு மரமாய்க் கிளைப்பேன் |

இவ்வட்டவணைவழி ஆணுக்குச் சமுதாயம் தந்துள்ள விடுதலையும், ஆண் பெண்ணுக்குத் தந்துள்ள நெருக்கடி மிகுந்த இடத்தையும் உணரமுடிகின்றது. வேலைகளுக்காக மணி நேரங்களையும், பயணங்களுக்காக நிமிடங்களையும் ஒதுக்கும் ஆடவன் பெண்ணுக்காக, தன் மனைவிக்காக நொடிகளைக் கூட ஒதுக்க மறுக்கும் நிலைப்பாடு இங்கு எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. மேலும் பெண் எப்போதும் ஆணின் பின் இணைப்பாக இரண்டாம் இடத்தில் இருக்க வேண்டியவள் என்ற ஆண் அடக்குமுறை இங்குத் தெளிவாகக் காட்டப்பெற்றுள்ளது. பிள்ளைகளுக்காகத்தான் வாழ்க்கை என்றால் தாய்மை, தனம் இரண்டும் வேண்டாம், அவற்றின் பயன் அதுதான் என்றால் அவையின்றித் தனிமரமாகவே

பெண் விடுதலையுடன் உலகின் பெருவனமாக மலரலாம் என்று கவிதை முடிகையில் பெண் விரும்பிய வாழ்க்கையை அடைய இல்லறெ வாழ்வு தடையாக உள்ளது என்பதைப் புரிந்துகொள்ளமுடிகின்றது.[31]

கணவனின் புறக்கணிப்பால் துயருறும் பெண் தன்மையைப் பின்வரும் கவிதைக்குள் காட்டுகிறார் தமிழச்சி தங்க பாண்டியன்

“கடுஞ்சொல்லைவிட உன்

உதாசீனம் உயிர்க்கொல்லி

காதுகள் நோக

முட்களே உன் சொற்களைக்

காதணிகளாக்கும் திடமுள்ள எனக்கு

உன் பாராமுகம் மட்டும்

குடித்துத் தீர்க்கவியலா

துயரப் பெருங்கடல்”[32]

என்ற நிலையில் கடுஞ்சொற்களைத் தன் காதணிகளாக ஆக்கிக்கொள்கிறாள் பெண். ஆனால் அவனின் புறக்கணிப்பைத் தாங்க முடியாது தவிக்கிறாள்.

இதே பொருளுடைய மற்றொரு கவிதை பின்வருமாறு.

“ உத்தேசமாக நீ

உதிர்த்த வார்த்தைகளைக்

கவனமாய்க் கைப்பைக்குள்

பத்திரப் படுத்துகிறேன்”

என்று ஆடவனின் முறையற்ற சொற்களைக் கைப்பைக்குள் அடைக்கலமாக்குகிறாள் பெண்.

“அவற்றின் முலாம் கழற்றி

முகமறிய நிறைய

அவகாசமிருக்கலாம் என் தனிமையில்”

முறையற்ற சொற்களின் பொருளினை அவற்றின் உண்மைத் தன்மையினை அவள் தனிமையில் ஆராய்ந்து பார்க்க முற்படுகிறாள் என்று மேற்கவிதை தொடர்கிறது.

“அர்த்தங்களைச் சரிபார்த்து

அலசியதைப் பொருத்திப்பார்க்க

சட்டையுரித்த பாம்பின்

தகிக்கும் நிர்வாணத்தை

உடுத்தியிருக்கும் உன்

கண்களையும் எடுத்துப்போகிறேன்

இனி இருட்டிலாவது

கண்ணும் வாயும்

கலவி செய்து பிறக்கின்ற

கவிதை மொழி பேசு!”[33]

என்று இக்கவிதை முடிகிறது. கலவிக்கும் கவிதைக்கும் பொதுவான பொருள் கண்ணும் வாயும் என்பதை இக்கவிதை காட்டுகின்றது. படைப்பின் இன்பம் கலவியின் இன்பம் என்பதாகக் கூட இக்கவிதைக்குள் கருதப்பெற்றிருக்க

வாய்ப்புண்டு. பாராமுகத்துடன் இராமல் சுவை மிகுந்த மொழியைப் பேசு என்ற வேண்டுகோளை மனைவி கணவனுக்கு இக்கவிதை வழி வைக்கிறாள்.

இவ்வாறு பொறுத்துப் போகிற பெண்தன்மையைத் தமிழச்சி தங்கபாண்டியன் ஏற்றுக்கொள்கிறார்.

பெண்கள் ஆண்களால் அடக்கப்படுவதை மற்றொரு கவிதையில் தெளிவுபட உரைக்கிறார் தமிழச்சி.

“உரத்துப் பேசுவதற்கு ஆசிர்வதிக்கப்படவில்லை நாங்கள்
வியர்வை அல்லது உதிரம்போல்
இயல்பாய்ப் பெருகும் ஒரு சொல்லைத்
தம் போக்கில் உதிர்ப்பதற்கு
ஆயிரம் தடைகளுண்டு எம் வாழ்முறையில்
நன்நடத்தையின் பெயரால் இன்றும்
குத்துக்காலிட்டே அமர்கின்றோம்”[34]

என்ற கவிதையில் உரத்துப் பேச வாய்ப்பில்லாத நிலையில் பெண்கள் இருப்பது குறிக்கப்பெறுகிறது. நன்னடத்தை என்ற பெயரில் ஆயிரம் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவதை இக்கவிதை சொல்கிறது.

இவ்வாறு இல்லறப்பெண்ணின் அவலங்களை, அவளின் பெண்மைத் தன்மையை, அவளின் பொறுமைத் தன்மையைத் தன் கவிதைகளில் காட்டிநிற்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**பெண்ணின் உடலும் உணர்வும்**

பெண்மை நிலை பற்றி எழுதினாலும் தமிழச்சி தங்கபாண்டியன் தற்காலப் பெண் நிலை வாதத்தின் தாக்கத்தினால் பெண் உடல் பற்றி எழுதும் போக்குடையவராகவும் விளங்குகிறார்.

"தாயிடமும் பகிராத

என் மொட்டவிழ்ப்பை

தாழ்சடையின் கர்வத்தை

உன் தண் நிழலில் தலை சாய்த்த

தனிமையுடன் நகர்ந்தது

என் இளம் பருவம்"[35]

என்ற கவிதையில் தன்னுடைய உடல் வளர்ச்சியின் முக்கிய நிகழ்ச்சியை மஞ்சணத்தி மரத்திடம் பகிர்ந்து கொள்கிறாள் இக்கவிதைப்பெண். இக்கவிதையில் மொட்டவிழ்ப்பு என்று பூப்பினை நயமாகக் காட்டுகிறார் கவிஞர்.

மறுபடி, மறுபடி மாதந்தோறும் பூக்கின்ற பூப்பு நிகழ்விலும் பெண் படும் உடல் மன வலிகளையும் மற்றொரு கவிதையில் பதிவு செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"மாற்றுத் துணியற்ற

மாதந்திர சுழற்சியுடன்

ஊர் ஊராய் இடம் பெயர்ந்த

தமிழச்சிகளின் கடுந்துயரைப்

புலம்பியபடி என் மேல்

அடித்துப் பெய்கிறது அசுர மழை

அந்த அவஸ்தையான நாளொன்றில்

அவசரமாய்ச் சாலை கடக்கையில்"[36]

என்ற கவிதையில் மழை நேரத்தில் மாதச் சுழற்சியால் பெண் படும் அவலம் காட்டப்பெற்றுள்ளது. அவளின் உடை, உடல் நனைந்து அவளின் உதிரம் வெளிப்பட்டுவிடுமோ என்ற ஐயப்பாட்டுடன் சாலை கடக்கும்போது பெண் மனம் படும் துயரம் அளவில் அடங்காதது. அதனை உணர்ந்து அசுர மழை அடித்துப் பெய்கிறது என்று மழை வரவைப் பாடுகிறார் கவிஞர்.

பெண்ணின் குழந்தைகளைப் பிறப்பித்தல் என்ற இயற்கையின் சக்தி, ஆணுக்குக் கிடைக்காத பெருஞ்சக்தியாகும். ஒவ்வொரு பெண்ணும் தாய்மை என்ற பெருமிதத்தைப் பெற்றுச் சிறக்கிறாள். பெண்மையின் சிறப்பு அவள் கருவுறுதலில் அடங்கி நிற்கிறது. அவ்வகையில் கருவுறுதல் குறித்தான செய்திகளையும் பதிவு செய்து தன் பெண்மை நிலைப்பாட்டை உறுதி செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

‘அவளுடைய கர்ப்பப்பை

கேள்விக்குறியின் வடிவில்

இருப்பதாக மருத்துவர் சொன்னபோது

அவளுக்கு ஆச்சரியமாயில்லை

அவளைவிட அதிகம் பதட்டமும் வியப்பும்

அடைந்த அவர் அன்று மாலையே

படைப்பின் அதிசயமென

அதனைத் தலைப்புச் செய்தியாக்கினார்”[37]

என்ற நிலையில் பெண்ணின் கர்ப்பப்பை ஆண்களின் வியப்புக்கான நிலைப்பாடு உடையதாக விளங்குகிறது. ஆனால் அது குறித்துக் கர்வப்படாதவளாக பெண் விளங்குகிறாள் என்பதும் இங்குக் குறிக்கப்பெற்றுள்ளது.

கருத்தடை என்பது இவரின் கவிதையில் பாடுபொருளாகி உள்ளது. ஆனால் கருத்தடை என்பது முழுக்க முழுக்க கணவனின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதாகவே குடும்பத்தில் அமைகிறது என்ற சோகமும் பெண்ணுக்குள் உள்ளது.

“என் சேமநிதி வைப்புநிதி

எல்லாவற்றையும் பசித்திருக்கும்

கழுகின் கூர்மையுடனும்

ஆவேசத்துடனும்

கணக்கிலெடுக்கிற நீ

குழந்தை பெறுதலையும்

கருத்தடையையும் தேநீருக்கான

சர்க்கரையின் அளவு போல

மிகச் சுலபமாகத் தீர்மானிக்கிறாய்”[38]

என்ற கவியடிகளில் பெண்ணின் வழியாகப் பெறத்தக்க அனைத்துப் பணப்பலன்களையும் அனுபவித்துவிட மிகக் கவனமுடன் ஆணின் ஆளுமை எண்ணுவதையும், அவளின் உடல் சார்ந்த கரு உயிர்த்தல் போன்றவற்றில் ஏனோ தானோ என நிமிடத்தில் முடிவெடுப்பதையும் இல்லறப்பெண்ணின் வருத்தங்களாக பதிவு செய்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இவ்வாறு பெண்ணின் உடல் குறித்த பதிவுகள் தமிழச்சி தங்கபாண்டியன் கவிதைகளில் பதிவு செய்யப்பெற்றுள்ளன.

**பெண்களின் வகை**

பெண்மை நிலையில் நிற்கும் இக்கவிஞர் பெண்ணிய நிலையையும், தனித்த பெண் நிலையையும் வரவேற்கிறார். இதற்கான குறியீடுகளைக் காட்டும் வண்ணம் மூன்றினை முன்வைக்கிறார். அவை

1. அவள்
2. நான்
3. இவள்

என்ற குறியீடுகளாகும்.

**அவள் (பெண்மை நிலை)**

அவள் என்ற குறியீட்டில் பழமையை ஏற்கும் மரபு மாறாத பெண்வடிவம் குறியீடாக்கப்பெற்றுள்ளது. பெண்மைக்கான இயல்புகள் பின்வருமாறு. அவள் பாலைவனத்தின் சுடுமணலாகக் காட்சியளிக்கிறாள். அவளுக்கு இரவே விருப்பமான பொழுதாக அமைகிறது. அதாவது கணவனுக்கு மகிழ்வளிக்கும் பொழுதான இரவே அவளுக்கு உரியதாகின்றது. மொழி என்பது அவளுக்கு பிரார்த்தனை செய்ய மட்டுமே பயன்படுகிறது. அவளின் உடைத்தேர்வு என்பது இலகுவானதும் இயற்கையானதும் ஆகும்.

“சமைக்காத காய் கனிகளே அவளது தேர்வு”[39]

‘உபவாசத்தின் கம்பிருத்தில் அவள்”[40]

‘பிரபஞ்சமே அவளுக்கு வீடு”[41]

என்பது அவள் என்ற பழமைப் பெண்ணின் நிலைப்பாடு ஆகும். இவளை ஆதித்தாய் என்ற நிலையில் கொள்ளலாம். இவ்வாதித்தாய் பற்றி மற்றொரு கவிதையில் அவர் பின்வருமாறு பதிவு செய்கிறார்.

தன் மனைவி குறித்த எந்த முடிவையும் ஏனோ தானோ என்று எடுக்கும் கணவனைப் பார்த்து எழுதப்பெற்ற ஒரு கவிதையில் அவனின் செயலைக் கண்டிக்கும் கலகக் குரலுக்கு இடையில் ஆதித்தாயின் நினைவும் வருகிறது தமிழச்சி தங்கபாண்டியனுக்கு.

“கடற்கரை மணலைத் தட்டி உதிர்க்கின்ற

அலட்சியத்துடனோ

சாலை விபத்தென்றைப்

புறக்கணிக்கின்ற பொறுப்பின்மையுடனோ

இனியும் என்னை அணுக விரும்பும்

உனக்கு ஒரு வார்த்தை…

… என் பகலிரவைத் தீர்மானிக்கின்ற

உன் திசைமானியின்

ஈர்ப்புவிசை என்

ஆதித்தாயிடமே என்கிற ஆதாமாய் ஒருநாள்

நீ வருவாய்”[42]

என்ற கவிதையில் ஆதித்தாய் நினைவு கூரப்படுகிறாள். மீளவும் ஆதித்தாயின் தேவை ஏற்படும் என்கிறது இக்கவிதை

ஆதித்தாயாக மஞ்சணத்தி மரத்தையும் சுட்டுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“என் ஆதித்தாயே மஞ்சணத்தி

முகவாயில் நரை முளைத்து

பெருங்கிழவி ஆனபின்னும்

உன் அடிமடி தேடி நான் வருவேன்

அப்போது

என் தோல் நொய்ந்த பழம் பருவத்தை

உன்

தொல் மரத்துச் சருகொன்றில்

பத்திரமாய்ப் பொதிந்து வை”[43]

என்ற கவிதையில் மஞ்சணத்தி ஆதித்தாயாக கொள்ளப்படுகிறாள். அவளின் மடியில் தன்னை ஒப்படைக்கும் நோக்குடையவாரகக் கவிஞர் விளங்குகிறார்.

**நான்**

நான் என்ற குறியீட்டில் உரிமை தேடும் பெண்ணியக் குரல் சார்ந்த பெண்ணின் இருப்பினைக் காணமுடிகின்றது. மழையில் நனைந்த மண்தரையாகப் பதப்படுத்தப்பட்டு இருக்கிறவள் நான். அவளுக்கு அந்திப் பொழுதுகளே பிடித்தவை. அவளுக்கு நன்கு பக்குவப்பட்ட சூடான உணவே ஏற்றதாக உள்ளது. நல்ல செரிமானம் மிக்கவளாக இவள் சமுதாயக் கடமைகளை உள்வாங்கிக்கொள்கிறாள்.

“மரபும் நவீனமும் ஊடுபாவும் நூலிழைகளின் ரசிகை நான்”[44]

“லௌகீகமான வசிப்பிடத்திலும் காற்றும் கதிரும் வேண்டும் எனக்கு”[45]

என்பன நான் என்ற குறியீட்டின் இயல்புகள். நான் என்ற குறியீட்டிற்கு மொழி என்பது

"உணர்வும் தேவையும் நிர்ணயிக்கும் சுவாசிப்பு எனக்கு"[46]

என்ற நிலையில் சற்று உரிமை கோரும் நிலையில் நான் என்ற பெண்தன்மை பணியாற்றுகிறது.

**இவள்**

பெண் முன்னேற்றம், பெண் உயர்வு கருதியதாக இவள் என்ற குறியீடு அமைக்கப்பெற்றுள்ளது. இவள் என்ற உருவம் மதகு திறந்த புதுவெள்ளம் போன்ற புது வரவாகும். பறத்தலின் சாகசம் இவளது இயல்பு. இவளுக்குப் பிடித்த சிறுபொழுது காலை. இவளுக்கு அறிவித்தல் , சர்வாதிகாரம் ஆகியனவே இயல்புகள். இவளுக்கு பச்சை மாமிசமே பசிக்கு உணவாகின்றது. இவளின் உடை 'தீர்மானமற்ற நிர்வாணம்'[47] என்பதே ஆகும். இவளுக்கு வீடு என்பது தேவையற்ற மிகையாகத் தெரிகிறது. ஆண்மொழி என்பது இவளுக்குக் கெட்டவார்த்தை. இவ்வாறு இவள் என்ற வடிவம் கவிஞரால் கட்டமைக்கப்பெற்றுள்ளது.

இவ்வாறு பெண்நிலையை மும்மையாகப் பகுத்து உரைக்கிறார் கவிஞர்.

**விவாகரத்து**

குடும்பம் என்ற கட்டுக்குள் தன் பொறுமையை இழக்காமல் வாழும் பெண்கள் அக்கட்டுக்குள் கடைசி வரை அடங்கி வாழக் கற்றுக்கொள்கிறார்கள். ஆனால் அக்குடும்பத்துக் கட்டுப்பாட்டுக்குள் ஒடுங்கிவிட முடியாதநிலையில் சில பெண்கள் அக்குடும்ப உறவினை விட்டுவிலகி நிற்க முனைகிறார்கள். தற்காலத்தில் பெண்கள் தனித்து வாழ்தல் இயலும் என்ற நிலையில் இந்த பிரிதலும் சாதாரணமாக வாழ்வின் ஒரு பகுதியாகிவிடுகின்றது. அவ்வகையில்

விவாகரத்து பற்றிச் சில கவிதைகளை வரைந்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“சிறுசொல் ஒன்றில் இடறி
இடம் மாறி இருக்கலாம் இருவரும்
கீறலென ஒரு விலகல்
பெரும் பள்ளத்தாக்கானது”[48]

என்று விவாகரத்துக்கான சிறுசொல் விளைவு பள்ளதாக்கானது குறித்து எழுதுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இனி இருவரும் ஒத்து வாழ முடியாது என்ற நிலையை எய்துகின்றனர்.

“மௌனம் கூட்டிச்சென்றுவிட்ட
நெடுந்தொலைவின் இடையே
எழும்பிவிட்ட நடுகற்களைத்தாண்டி
இருவரும் திரும்புதல் சாத்தியமில்லை.
கைநழுவும் மணலும்
காலடி நிழலுமாய்
இருவரும் சந்திக்கையில்
இடறும் சிறுகசப்பற்று
இனி அணைத்தல் இயலாது”[49]

என்ற நிலையில் இருவரும் இனி இணைய இயலாத நிலை உருவாகிவிட்டது. இருவரில் யார் மீது தவறு என்று யாரும் சொல்லத்தயாராக இல்லை. கேட்கவும்

தயாராக இல்லை. இந்நிலையில் விவாகரத்து ஒன்றே தீர்வு என்ற நிலை வந்துவிடுகிறது.

“பிரிதலின் கண்ணியத்தோடு

ஒரு புன்னகையைப் பகிர்ந்து கொள்வது வரை

இந்த உலகம் அழகானதுதான்

இருவருக்கும்”[50]

என்று பிரிதலின் இனிமையைப் பேசுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இந்நிலையில் கட்டுக்குள் இருந்து விடுதலை பெறும் பெண்ணினத்தின் தயக்கமற்ற தன்மையை வெளிப்படையைத் தன் கவிதையில் பதிவு செய்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

மற்றொரு கவிதையிலும் இந்தப் பிரிதல் பற்றிய விவரிப்பு இடம்பெற்றுள்ளது.

“உன்னிடமிருந்து கசப்பற்ற விலகல்

சாத்தியப்படுமாயின் நான் சாகவும் தயார்

புதிது புதிதான பொய்களை

எனது ஒப்பனை சாதனங்களென

திணித்துக் கொண்டு நானும்

களகச்சிதமான நம்பிக்கையில்

என்னை வரவேற்பதுமான

உன் பாவனையும் கண்டு

நமது நபும்சகத்தில் கூசிக்

கிரீச்சிடுகின்றன நாற்காலிகளும் கதவுகளும்.

உண்மையின் குருதி வழியும்

ஒரு சொல்லை உதிர்த்துவிட்டுப்

பிரியவேண்டும் என்பதே என் விண்ணப்பம்”[51]

என்ற கவிதையில் தன்னை அவனிடமிருந்து விடுவித்துக்கொள்ளத் துடிக்கும் பெண்மனத்தின் இயல்பினை உணர்ந்துகொள்ள முடிகின்றது. கசப்பற்ற விலகல் தந்துவிடக் கோருகிறது பெண்மனது. அதனைத் தராமல் இழுத்தடிக்கிறது ஆண்வன்மம்.

இவ்வாறு விவாகரத்தினால் ஏற்படும் விளைவுகளையும் முன்வைத்து, தமிழச்சி தங்கப்பாண்டியன் கவிதை புனைந்துள்ளார். இவரின் கவிதைகளில் ஆண்களின் அடக்குமுறை மென்மையான முறையில் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

**<u>பெண் தொன்மங்கள்</u>**

தொன்மங்கள் என்பவை பழைய மரபு சார்ந்த கருத்துருவாக்கங்கள் ஆகும். “மனிதன் எவ்வளவுதான் நவநாகரிகங்ளினால் அலைப்புண்டாலும் அவனுடைய மனத்தின் ஆழத்தில் அவனே அறியாத நிலையில் வரலாற்றுக்கு முந்திய அவனுடைய தூரத்து மூதாதையின் இனத்தின் அறிவும் உணர்பும் நினைவுகளும் சாராம்சமாகிப் படிந்து உறைந்து கிடக்கின்றன. அடிப்படையில் இவை சராம்சமான அடிப்படை வடிங்களாகும். பின்னைய மனிதன் அவற்றைத் தொன்மங்களாக குறியீடுகளாக சடங்குகளாக எச்சங்களாக யாதாயினும் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் வெளியிடுகிறான்”[52] என்ற நிலையில் படைப்பு மனத்தில் தொன்மம் செயல்படுவதைக் காட்டுகின்றார் தி.சு. நடராசன்.

தாய்த்தெய்வ வழிபாடு என்பது தமிழினத்தின் மூத்தவழிபாடாக விளங்குகின்றது. அதனைத் தொடர்ந்து பல தொன்மங்கள் தமிழ் இலக்கியங்களில் எடுத்தாளப்பெற்றுள்ளன. அத்தொன்மங்களின் நிலையை விமர்சிக்கிற நிலையில் கவிதையாக்கங்களைத் தந்துளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

__வனப்பேச்சி__

வனப்பேச்சி என்ற தொன்மத்தை அதிக அளவில் கையாள்கிறார் தமிழச்சி தங்க பாண்டியன். வனப்பேச்சியைத் தோழியாகவே அவர் காண்கிறார். இவ்வனப்பேச்சி தமிழச்சி தங்கபாண்டியன் குடும்பத்தார் வணங்கும் ஒரு குலதெய்வமாகும். ‘பேச்சி எனப்படுகின்ற சிறுதெய்வம் திறந்தவெளியில் இருக்கின்ற ஒரு கிராம சிறுதெய்வப் பெண் உருவம்”[53] என்று இதனை அறிமுகம் செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இத்தெய்வம் அவரின் பகுத்தறிவு கொள்கைக்கு முரணானது அல்ல என்பதும் அவரின் வாதமாகும்.

பேச்சியம்மன் என்பது ஒரு சிறுதெய்வமாகும். இத்தெய்வம் வனத்தில் இருப்பதால் வனப் பேச்சி எனப்படுகிறாள். இவரைப் பற்றி கதை ஒன்று நிலவி வருகிறது.[54] வல்லாளன் என்ற மன்னனின் குழந்தைப் பேற்றிற்கு உதவியாக வந்த முதியவள் கொடுங்கோன்மை காரணமாக அவனையும், அவன் மனைவியையும், அவன் குழந்தையையும் அழித்த எட்டு கை தெய்வமாக விளங்குபவள் பேச்சி அம்மன் என்ற பெரியாச்சி அம்மை ஆவாள். இவளின் நினைவாகவே வனப்பேச்சியாக தமிழச்சி தங்கபாண்டியன் குடும்பம் அத்தெய்வத்தை வணங்கி வந்துள்ளது.

இத்தெய்வத்தைத் தன் தோழியாகக் கருதுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். அவளின் அங்கத்தை பின்வருமாறு வருணிக்கிறார். இந்த வருணனை ஏறக்குறைய பாதாதி கேச வருணனை ஒத்து அமைகிறது,

அவளின் கால்களின் அழகை

“மனிதத் தொடுகை அற்று

குதிகால் உயரக் காலணித் தழும்புகளில்

மரத்திருந்த

கான்கிரீட் படிக்கட்டுகள்

செருப்புகளற்ற அவளின் அழுக்குப்

பாதங்களைக் காமுற்றுத் தழுவின”[55]

என்று வருணிக்கிறார்.

“பிளாஸ்டிக் கழிவுகளில் வெதும்பியிருந்த

குப்பைத் தொட்டிகளோ

தம் முயல் வடிவக் காதுகளை

விடைத்துக்கொண்டு

விரகத்துடன் உள்ளிழுத்தன

அவளது காய்ந்த பொடிமட்டை நாற்றத்தை”[56]

என்று அவளின் உடல் வாசம் எடுத்துரைக்கப்படுகிறது.

“பானங்களும் பழக்கூழும்

கொட்டுகின்ற இயந்திரங்கள்

பழந்தின்னி வௌவால்களுக்குப்

பாலூட்டும் அவளின்

தாய்மைத் தனங்களிடம்

வெட்கமுற்றுச் சரணடைந்தன”[57]

என்று வனப்பேச்சியைத் தாய்த் தெய்வத்தின் குறியீடாகக் காண்கிறார் தமிழச்சி. கால்களில் தொடங்கி, தற்போது தனங்கள் வரை வருணிக்கப்பெற்று விட்டது.

அடுத்து கைகள்

“சூட்சுமம் புரியாமல்

இடறிய பேச்சியின்

முறக் கைகளை ஆசையுடன் இழுத்து

அய்யானர் குதிரைபோல் அலுங்காமல் தளங் கடத்தின

தானாக நகர்கின்ற இரும்புப்படிகள்”[58]

என்று அவளின் கைகளும் வருணிக்கப்பெறுகின்றன. வனப்பேச்சி என்பதைத் தாய்த் தொன்மமாகக் கண்டு மகிழ்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இவள் கனவு தெய்வம் என்பதையும் தமிழச்சி மற்றொரு கவிதையில் பதிவு செய்கிறார். “கனவில் வந்து கெக்கலித்தாள் பேச்சி”[59] என்ற கவியடி அவள் கனவு தெய்வம் என்பதற்குச் சான்றாகிறது.

உருவ வருணனை செய்து, தாய்த்தெய்வமாகக் கண்ட வனப்பேச்சி தமிழச்சி தங்கபாண்டியன் தளர்வுற்ற போதெல்லாம் அவரை ஆற்றுப்படுத்தும் தெய்வமாகவும் விளங்கியுள்ளாள்.இதனைப் பின்வரும் கவிதை காட்டுகின்றது.

“அவளது நகம் துருத்தும்

சுட்டுவிரல் ஒற்றி எடுக்கும்

தயங்கித் ததும்பும்

என் கண்ணீரின் முதல் துளியை”[60]

என்ற நிலையில் அவளின் சுட்டுவிரல் தமிழச்சி தங்கபாண்டியனின் கண்ணீர்த்துளிகளுக்கு ஆதரவளிக்கிறது.

“இருப்பின் வலி மழுங்கக்

கடித்திருக்கும் என்

பற்களின் கிட்டிப்பை

இலகுவாய்ப் பிளக்கும்

அவளின் சுருங்கிக்கிடக்கும்

அடுத்த விரல்”[61]

என்ற நிலையில் வாழ்வின் நெருக்கடி நிலையில் தன் பற்கள் கடித்துத் தாங்கும் துன்பச் சுமையைக் குறைப்பதாக வனப்பேச்சியின் கட்டை விரல் உதவுகின்றது.

வனப்பேச்சியின் இடது விரல்கள் இப்பணியைச் செய்ய, அவளின் வலது கை விரல்கள் அவரின் முழங்கைகளை நீவி நெட்டுயிர்க்கும் என்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“முன்தள்ளி முன்னேறத் தயங்கிச்

சுருண்டிருக்கும் என் முழங்கைகளை

நீவி நெட்டுயிர்க்கும்

அவளது தேமல் படர்ந்த

வலது கைவிரல்கள் அய்ந்தும்"[62]

என்ற நிலையில் தன் கை கொடுத்துத் தமிழச்சியைத் தாங்கும் பெண் தாயாக வனப்பேச்சி விளங்குகிறாள்.

அவளின் தாய்மைத் தன்மையையும் இக்கவிதை தொடர்ந்து குறிப்பிடுகிறது.

"குனிதல் அற்ற உயரம் வேண்டிக்

காயம்பட்ட என்

குதிகால்களைச் சேர்ந்தணைக்கும்

அவள் பத்துவிரல் தாய்மை"[63]

என்ற நிலையில் தாங்கும் தாய்மைத் தெய்வமாக வனப் பேச்சி அமைகிறாள். அயர்ந்த போதெல்லாம் தாய்மடியாகித் தாங்கும் தன்மை உடையவளாக வனப்பேச்சி கவிஞருக்கு விளங்குகிறாள்.

வனப்பேச்சி என்ற தெய்வத்தின் துணையாக பல கன்னிமார் தெய்வங்கள் உள்ளன. அவை பற்றிய குறிப்பும் மற்றொரு கவிதையில் இடம்பெறுகிறது.

"கவுச்சி வாடை குறையுமோ என

மருதாணி வைப்பதில்லை வனப்பேச்சி

வாசனையற்ற வண்ணங்களிலான

நகப்பூச்சு நகரத்தில் கிடைக்குமென்று

கோமதியும் பிச்சையம்மாளும்

பேச்சுவாக்கில் தூண்டிவிட

கன்னிமார்த் தெய்வங்கள் ஏழும்

ஆளுக்கொரு கலர் கேட்க

நச்சரிப்பில் நகருக்குப் போனாள் பேச்சி”[64]

என்ற நிலையில் வனப்பேச்சியின் உடன் இருக்கும் கன்னிமார் தெய்வங்களை அறிந்து கொள்ளமுடிகின்றது.

தமிழச்சி தங்கபாண்டியன் மஞ்சணத்தி என்ற தன் இரண்டாம் தொகுதியில் சில கவிதைகளில் வனப்பேச்சியை நினைவுபடுத்துகிறார். அவரின் மூன்றாம் தொகுதி வனப்பேச்சி என்ற தலைப்பிலேயே அமைகின்றது.

வனப்பேச்சி தொகுப்பில் இடம்பெற்றுள்ள வனப்பேச்சி கவிதையில் பேச்சியம்மனின் வரலாற்றைக் காட்டும் சில குறியீடுகள் இடம்பெற்றுள்ளன. பேச்சி அம்மன் முதியவள் என்பதால் அவளுக்கு அடையாளமாகச் சுருக்குப்பை கொள்ளப்படுகிறது. அவள் குழந்தைப் பிறப்பிக்க வந்தவள் என்பதால் குழந்தையின் தொட்டில் அதற்கான குறியீட்டு அடையாளமாகின்றது.

இந்நிலையில் இவ்விரண்டு அடையாளங்கள் கொண்ட வீட்டிற்கே தான் வருவேன் என்று கட்டளையிடுகிறாள் வனப்பேச்சி

“சுருண்டிருக்கும் சர்ப்பமென

அவசரம் புதைந்திருக்கும்

இந்நகரத்தின் எந்த வீட்டில்

குழந்தைக்கான ஒரு தூளிச் சேலையும்

வயது முதிரந்தவளுக்கான சுருக்குப் பையும் இருக்கிறதோ

அங்குதான் விருந்தினளாக வருவேன்

என்ற அடம் வனப்பேச்சிக்கு”[65]

என்ற நிலையில் வனப்பேச்சி பற்றிய வாய்மொழிக் கதையில் வரும் எச்சங்கள் இக்கவிதையில் பதிவாக்கப்பெற்றுள்ளன.

இவ்வகையில் வனப்பேச்சி தாய்த் தொன்மமாக விளங்கி, கவிஞருக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்றது.

**பிற தொன்மங்கள்**

ஏவாள், பாஞ்சாலி, அகலிகை, சீதை, மணிமேகலை போன்ற பல தொன்மப் பாத்திரங்களையும் இவர் தன் கவிதைக்குள் கொண்டுவருகிறார். முழுக்க, முழுக்க இத்தொன்மங்களைக் கொண்டு ஒரு கவிதை செய்யப்பெற்றுள்ளது.

“தடுக்கப்பெற்ற கனியின்

முதற் சுவைத்தலில் இருந்து

ஏவாளுக்கான அந்த முதல் துளி

தன்னைத் தோற்றபின் என்னை வைத்தானா?

எனக் கேட்டதில் பாஞ்சாலி

பருகியதும் இத்துளிதான்

இந்திரனைத் தழுவிய அந்த

ஒரு கணத்தில் அகலிகைக்கு

அமுதமானதும் அத் துளியேதான்

இருந்திருக்கலாம் இராவணனின்

உருவம் வரைந்த பலகையினடியில்

சீதைக்கான முதல் துளியும்

காதல் மறுத்து அணைந்து அட்சயபாத்திரம்

அன்பினால் தளும்ப மேகலை

வழிந்ததும் அத்துளியில் தானோ

விழக்கூடுமோ அது ஒரு நாள் எனக்கும்?”[66]

என்ற நிலையில் தொன்மங்களால் இக்கவிதை செய்யப் பெற்றுள்ளது. ஒரு துளி என்பது ஆணின் ஆசை என்பதாகக் கொள்ளவேண்டும்.

| **பெண்** | **ஆண்** |
|---|---|
| ஏவாள் | ஆதாம் |
| பாஞ்சாலி | துரியோதனன் |
| அகலிகை | இந்திரன் |
| சீதை | இராவணன் |
| மணிமேகலை | உதயகுமாரன் |

மேற்குறிப்பிட்ட தொன்மப் பாத்திரங்கள் அதன் இணையாகப் பட்டியலில் தரப்பெற்றுள்ள ஆணால் வஞ்சிக்கப்பட்ட பெண்களின் நிலை அல்லது வஞ்சிக்கப்பட்டவர்கள்- பெண்கள் என்பதை எண்ணிப்பார்த்தால் அவ்வஞ்சனைக்குக் காரணம் ஆசை என்பது அடிப்படையாக விளங்குகிறது என்பதை இவரின் கவிச்சிந்தனை காட்டுகின்றது. ஆண்களின் ஆசை பெண்களைத் துயரப்படுத்துவதாக உள்ளது என்பதை இம்முரண் தொன்மங்கள் உணர்த்துகின்றன. இதே நிலை எல்லாப் பெண்களுக்கும் நிகழக் கூடுமோ என்று கலங்கும் நிலையில் இக்கவிதை படைக்கப்பெற்றுள்ளது. இதன்

காரணமாக காலாகாலமாக பெண்கள் ஆண்களின் ஆசைக்கு இலக்காகி துன்பமடைந்துள்ளார்கள் என்பதை உணரமுடிகின்றது.

சகுந்தலை என்ற புராணப் பாத்திரம் பற்றிய நெடுங்கவிதை ஒன்று எஞ்சோட்டுப்பெண் என்ற தொகுப்பில் மோதிரம் என்றொரு போதிமரம் என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ளது. சகுந்தலை, துஷ்யந்தன் கதையினைச் சொல்லி சகுந்தலையின் அடையாள மோதிரம் தொலைந்துபோனதையும் சொல்லி, துஷ்யந்தன் மறந்துபோனநிலையில் காத்திருக்கிறாள் என்று இக்கவிதை அமைக்கப்பெற்றுள்ளது.

"நகைத்து நவில்கின்றாள்

சகுந்தலை

காத்திருந்தது உண்மைதான்

உன் அரண்மனையில்

என்மகன் இளவரசனாகவும்

நான் பட்டத்தரசியாகவும்

கொலுவிருக்க அல்ல

என்னை இனம் கண்டுகொள்ள

இதயத்தைத் தொலைத்துவிட்டு

இன்னமும் அடையாளங்களைத் தேடுகின்ற

உன் அறியாமையினை

என்றாவது ஒருநாள்

எதிர்நின்று

நான் எள்ளி

நகையாட வேண்டாமா?”[67]

என்ற நிலையில் தன்னை வஞ்சித்தவனை நிற்க வைத்துக் கேள்வி கேட்கும் பாங்கில் சகுந்தலையை இக்கவிதை பேச வைத்துள்ளது. ஆண்களால் வஞ்சிக்கப்பட்ட பெண்கள் ஒருநாளில் அவ்வாணை நிற்க வைத்துக் கேள்வி கேட்கும் நிலை வரவேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் சகுந்தலையின் கேள்வி அமைவதாக இங்குக் கவிதை புனையப்பெற்றுள்ளது.

இவ்வகையில் தொன்மப் பாத்திரங்களை மீட்டுருவாக்கம் செய்து பெண்வாழ்வுத் தொடர் நிலையை எண்ணிப் பார்க்க வைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**பெண் மொழி**

பெண் தனக்கான தனித்த மொழியை உருவாக்கிக்கொள்ள வேண்டும் என்ற தனித்த நிலைப்பாடு தற்போது தோன்றி வருகிறது. பெண்மொழி என்பது “தன்னைக் காத்துக்கொள்ளும் தொடர்கள், அடக்க மிகுத் தொடர்கள், தொடர் கேள்விகள், சாய்வுக் கூற்று முறைகள், செயற்கைப் பெயரடை, தூய்மையான இலக்கணம் பிறழாத சொல்லாட்சி, நகைப்பண்பு இல்லாமல் இயல்பாய்க் கூறும்முறை, சிறப்பான தனித்த சொல்லாட்சிகள், தொடர்கள் முதலியவற்றின் கலவையாக இருக்கும் என்று குறிக்கப்படுகிறது.[68] தமிழிலும் பெண்கள் தனக்கான விடுதலையான மொழிப் பயன்பாட்டைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். பெண் கவிஞர்கள் திட்டமிட்டும், திட்டமிடாமலும் பெண் மொழி வயப்பட்டவர்களாகவே விளங்கும் நிலை அவர்களின் படைப்பில் காணக்கிடைக்கிறது. தமிழச்சி தங்கப் பாண்டியன் பெண்மொழியை வரவேற்பவர் என்றாலும் அவர் தீவிரமாகத் திட்டமிட்டுப் பெண்மொழியைக் கையாளவில்லை என்றாலும் அவரின் கவிதைகளிலும் பெண்மொழி சார் கூறுகள் அமைந்துள்ளன. இதனை எடுத்துரைப்பாதாக பின்வரும் பகுதி அமைகின்றது.

பிழைகளற்ற நிலையில் பெண்படைப்பு அமையும் என்பது திறனாய்வாளர்களின் கணிப்பு. இதனையே அடிப்படையாக வைத்துக் கவிதை செய்ய முனைகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"பிழையற்ற இலக்கணத்திலும்

பெருகி வரும் சந்தத்திலும்

ஒரு காலம்

குறியீட்டு உத்திகளிலும்

நவீன, பின் நவீனப் புனைவுகளிலும்

கட்டுடைத்தலிலும் இயங்களிலும்

இக்காலம்

நடக்கின்ற திருவிழாவில்

நல்லவேளை வழி தவறிப் போய்விட்டது

என் கவிதை

உடைகளற்ற குழந்தைமையென"[69]

என்று கவிதையைக் குழந்தையாக்கி அதனைப் பெற்றெடுக்கும் தாயாகத் தன்னையாக்கி உடைகளற்ற குழந்தையாக புனைவற்ற இயல்புகளால் வரையப்படும் கவிதையை அளிக்கும் நோக்குடையவராகத் தமிழச்சி விளங்குகிறார்.

கவிதையைப் பெண்மொழியில் அமைக்கவேண்டும் என்ற விருப்பம் தமிழச்சி தங்கபாண்டியனிடம் இருக்கிறது.

"குழந்தமைமேல் நம்பிக்கையாய்

இளைப்பாறும் கர்ப்பிணிபோல்

சாரமற்ற சக்கைப் பிரியெனத்

திரட்டப்படும் வைக்கோல் வாழ்க்கையில்

கவிதைக்கான என்

கணத்தைப் பிரித்தெடுக்கும்

பெருஞ்சுமையில் நான்”[70]

என்று பொருளற்ற வாழ்வில், கவிதைக்கான கணத்தை, குழந்தமைமேல் நம்பிக்கை வைத்திருக்கும் கர்ப்பிணியின் காத்திருப்பு போல காத்திருந்து பெற முனைகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

மழையை, அதன் அழகை வியக்க அவருக்குப் பெண் மொழி உதவுகின்றது.

“பூட்டன்மார் செவிசாய்க்கா பூட்டிமார் ஒப்பாரியை

பெயர்த்திக்கு மொழிபெயர்க்கும் ஆசிரியை -இந்த மழை”[71]

இவ்விரண்டு அடிகளில் பூட்டிமார், ஒப்பாரி, பெயர்த்தி, ஆசிரியை என எல்லாமே பெண்பாலாக விளங்குகிறது. பூட்டன்மார் என்பது அவர்கள் இறந்த நிலையில் அவர்கள் கேட்கா வண்ணம் பூட்டிமார் பாடிய ஒப்பரிக்கு முன்னொட்டாக அடையாக வந்தது என்பதைக் கண்டுகொண்டால் இக்கவிதை மழையைப் பெண்மொழியில் சொல்வதைப் புரிந்துகொள்ள இயலும்.

இதே மழைக்கவிதையின் தொடர்ச்சியில்

“நட்டுவச்ச மல்லிச்செடி நடுங்கிச் செத்திடுமோ எனக்

கேவும் மகளுக்குப் பின்னிரவில்

பிசுபிசுக்கும் தாய்மடி இந்த மழை”[72]

என்ற நிலையில் மல்லிகைச் செடி, மகள், தாய், மடி போன்றன பெண் சார்பின் என்பதாலும் இங்கும் பெண்மொழி இருப்பதை உணரமுடிகின்றது.

தாய் வேலைக்குச் சென்றுவிடுகிறாள். அந்நிலையில் வீட்டில் இருந்த பெண்ணைப் பக்கத்துவீட்டார் கடுஞ்சொல் சொல்லிவிட, அதனைத் தாய் வந்ததும் அந்தப் பெண்பிள்ளை சொல்லிவிடுகிறாள். இதனைக் கேட்டுவிட்டு இரவென்றும் பாராமால் பக்கத்து வீட்டுக் கதவைத் தட்டச் சென்ற தாயின் செய்கை போன்று மழை பெய்கிறது என்று மற்றொரு இடத்தில் தமிழச்சி தங்கபாண்டியன் எழுதியுள்ளார்.

“பகலின் கடுஞ்சொல் ஒன்றிற்காய்

பக்கத்துவீட்டுக் கதவினை

இரவில் தட்டுகின்ற

தன்முனைப்பற்ற தாய்முலை இந்த மழை”[73]

என்ற அடிகளில் பெண்மொழி ஊடாடி நிற்பதைக் காணமுடிகின்றது.

குழந்தைக்குப் பால் ஊட்டும் தாயின் பரிவை மற்றொரு கவிதையில் பெண்மொழியில் உணர்த்துகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“இரவென்பது இருள் மட்டுமா?

காதலின் தாபம் கிளர்த்தி

உடலிறகைக் கோதுகையில்

ஏழு வர்ண வானவில்

முலை சப்பும் சிசு உதட்டைக்

கண்மூடிச் சுகிக்கையில்

இசை நிறைந்த புல்லாங்குழல்”[74]

என்ற கவிதையில் குழந்தைக்குப் பாலூட்டும் நிலையில் அது புல்லாங்குழல் அனுபவமாக கவிஞரால் உணரமுடிகின்றது.

தண்ணீர்க் குடங்களைப் பார்க்கும் நிலையில் “சூலுற்ற குடங்கள்”[75] என்று தமிழச்சி தங்கபாண்டியனால் எழுதமுடிகின்றது. ‘செரிமானமற்ற தாய்ப்பாலின் நாற்றம்’[76] என்று ஆணின் அன்பற்ற தன்மையைத் தமிழச்சி தங்கபாண்டியனால் இனம் காண முடிகிறது.

கணக்கெடுப்பு என்ற கவிதையிலும் பெண் மொழிக் கூறுகள் காணப்படுகின்றன.

“நிராகரிப்பின் அவமானத்துடன்

நான் திரும்பிய போது

வயதான மூதாட்டியின்˙ அந்திமத் தனிமைபோல்

இரவினை உடுத்தியிருந்த

வீடு என்னை சப்தமற்று உள்வாங்கியது”

என்ற கவிதையடியில் மூதாட்டியின் தனிமை என்ற உவமை பெண் மொழி சார்ந்ததாக அமைகின்றது.

இக்கவிதை மேலும் தொடர்ந்து

“வலியைப் பகிர நடுங்கும் விரல்களை

வர்ணம் தீட்டிய சுவர்கள்

விம்மல் ஒலி எதிரொலித்த

தாய்மடியாய் மெல்லாடிற்று ஊஞ்சல்”

என்ற கவியடிகளில் தாய்மடி ஊஞ்சலாக உருவகிக்கப்படுகிறது.

“பெருமூச்சின் அனல் தணிக்க

கடற்காற்றை உள்ளனுப்பிய ஜன்னலொன்று

உற்ற தோழியாய்க் கன்னம் தொட்டது”[77]

என்று தோழியாக காற்று உருவகிக்கப்படுகிறது. மேற்காட்டிய மூன்று கவிதைப் பகுதிகளில் மூதாட்டி, தாய், தோழி ஆகிய பெண்களின் உணர்வினை வீட்டினில் காண்பதாக தமிழச்சி குறிக்கிறார். வீடு என்பதே பெண்ணின் இருப்பு என்பதால் வீட்டின் ஒவ்வொரு பகுதியும் அவளின் எண்ணம் தோய்ந்திருக்கும் இடம் என்பதில் ஐயமில்லை. அவ்வளவில் வீடு பற்றிய இக்கவிதையில் பெண்மொழிக் கூறுகள் இருப்பதும் இயல்பானதே ஆகும்.

பின்வரும் ஒரு கவிதை முழுக்க தனித்த பெண் சார்ந்த சொல்லாட்சிகளைக் கொண்டு விளங்குகின்றது.

“விதைக்கப்படும் பொழுதே

மழையைச் சூலுற்றிருந்த மரமது”

என்று மரம் முளைக்கின்றபோதே மழையைச் சூலாகக் கொள்கின்றது.

“முளை விடுகையிலும்,

குருத்துகளாய்க் கிளைக்கையிலும்

துளி மழையைப் பிரசவித்த

ஆயாசத்துடன் நீள் விழுதுகளாய்

நெடுமூச்செரியும் அது”

வளர்கின்றபோது, மழையை அம்மரம் பிரசவிக்கின்றது.

“வெகுகாலத்திற்குப் பின்

முழுவதுமே மழையானதொரு பனிக்குடமாய்

மடி கனத்துப் பரந்திருந்தது”

என்று அதன் பரவலைப் பனிக்குடமாகக் காண்கிறார் கவிஞர்.

காதலுற்ற கனவுகளைச் சேமிக்கக்

கூடொன்றையும் சுமந்திருந்த அதன்

அடிமரத்தின் ஒரு செதிலாய்ப்

படிந்திருக்கிறேன் நான்-

அரவமற்ற பள்ளத்தாக்குகளில் பாடப்படும்

இடையனின் காதல் போல்.

அடித்துப் பெய்த பெருமழைக்குப் பின்

மண் இளகி மரம் நெகிழ்ந்த

அவ்விரலில்

நாகலிங்கப் பூக்களின் போதையுடன்

நடுங்கிக் குவிந்த என்

அதரங்களின் வெப்பம்

எப்பொழுதும் உறைந்திருக்கும்

அம்மரத் தண்டின் அடிவட்டத்தில்

ஒரு எஸ்கிமோ மூதாதையரின்

புராதன பனித்தடமாய்."[78]

என்று பனித்தடத்தில் மூதாரைதயரின் இருப்பினைக் காண்கிறார் கவிஞர். இக்கவிதை முழுவதும், பெண்ணுக்குரிய மகப்பேறு குறித்த அனுபவங்களால் எழுதப்பெற்று பெண்மொழிக்கான தனித்தன்மையைப் பெற்று விளங்குகிறது.

"சப்பாத்திக் கள்ளிகளில்

சிக்குண்ட சரிகைப் பாவாடையின்

ஓரமென நைந்திருக்கிறது மனம்.

சிக்கெடுத்து நீவி நெடுமூச்சுடன்

உச்சி முகர

புகையிலை நெடிக்கும்

மூதாட்டியின் முத்தமின்றி வறண்டிருக்கின்றன"[79]

என்னும் கவிதையிலும்,

"உன்னைத் தின்ற மண்

மூதாதையரைத் தந்த மண்

என்னைச் செரிக்கும் மண்ணின்

வனமுலை சுரக்க

உன் முத்த வாசனை"[80]

என்ற கவிதையிலும் சரிகைப் பாவாடை, மூதாட்டியின் முத்தம், வனமுலை போன்றன தனித்துவம் மிக்க பெண் மொழிகளாகக் கொள்ளத்தக்கனவாகும்.

இவ்வாறு பெண்மொழித் தன்மையுடன் கவிதைகளைப் படைத்து பெண்மை நிலைக் கவிஞராகத் தமிழச்சி தங்கபாண்டியன் அறியப்பெறுகிறார்.

**சகோதரித்துவம்**

பெண்ணிய நிலையில் தற்போது சகோதரித்துவம் என்ற நிலைப்பாடு பெண் முன்னேற்ற நிலைப்பாடுகளுள் ஒன்றாகக் கொள்ளப்படுகின்றது. அதாவது ஒரு அக்காவாக இருந்து, தன் தங்கைக்கு நல்வழி செலுத்தும் நிலைப்பாடாக ஒரு பெண்ணுக்கும் அவளுடன் நட்புடன் பழகும் மற்ற பெண்களுக்குமான தொடர்பு அமையவேண்டும் என்ற கருத்து சகோதரித்துவத்தின் அடிநாதமாக விளங்குகிறது.

'பெண் அடக்குமுறையை எதிர்த்து பாதிப்பிற்குள்ளான மகளிர் அனைவரும் வேறுபாடின்றி சசோதரிகள் போல ஒருங்கிணைந்து பேராடுவது பெண் விடுதலை இயக்கத்தின் முதல் படியாகும் என்று மேரி டாலி எனும் பெண்ணியவாதி விளக்குவார்"[81] என்பது பெண்ணியச் சகோதரித்துவ கொள்கையாகும். இதனடிப்படையில் பெண்களுக்கு ஏற்படும் பாதிப்புகளைக் களைவது என்பது நோக்கமாக அமைகின்றது.

தமிழச்சி தங்கபாண்டியன் தன் மகளுடன், பிற பெண்களுடன் சகோதரித்துவ மனப்பாங்கில் தன் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்கிறார்.

"அடி ஆத்தா பாத்து நாளாச்சுல்ல

பக்குன்னு இளச்சுட்டீக தாயி"

என எதேச்சையாகத் தென்படும் ஊர்க்காரரின்

எதார்த்தமான வாஞ்சையில் உயிரிப்பிக்கிறோம்"[82]

மேற்கவிதையில் தமிழச்சி தங்கபாண்டியன் தன் கிராமத்தாருடன் சகோதரி நேசத்துடன் பழகிவருவதைப் பதிவு செய்துள்ளார்.

'ஆரோக்கியமான அம்மாவைவிட

உடல்நலக் குறைவான

அம்மாவைச் சற்றுக்

கூடுதலாகப் பிடித்திருந்ததில்

வியப்பேதும் இல்லை

அம்மாவின் கால் ஒடிந்த சுகவீனம்

அதிகப்படியான மகிழ்ச்சி

... ஒட்டிக் கொண்டிருக்கும் உடையெனத்

தன்னுடனே அம்மா

ஒருமாதம் இருப்பாள் எனக்

கட்டியணைத்த மகளின் கண்களில்

நட்சத்திரங்கள் மிளிர்ந்தன"[83]

என்ற கவிதையில் தாயருகாமையை எண்ணி மகிழும் மகளின் மகிழ்ச்சியை உணரமுடிகின்றது.

"அருகில் இருந்திராமல் கழிந்த '

பொழுதுகளைப் பழிதீர்க்கும்

வன்மத்தோடு

பால்மார்பு சுரக்க அன்பு செய்தது”[84]’

என்ற நிலையில் தாயன்பு சுரக்கும் நிலையில் இக்கவிதை படைக்கப்பெற்றுள்ளது. இவ்வாறு தாயும் மகளும் சகோதரித்துவ நிலையில் பிணைந்துநிற்கும் வெளிப்பாட்டை இக்கவிதை எடுத்துரைத்துள்ளது.

மற்றொரு கவிதையில் வழிகாட்டும் நிலையில் தாய் அமைகிறாள்.

‘பட்டாம் பூச்சிகளின் இருப்பும் அழகும்

பற்றிய பாடம் ஒன்றில்

பள்ளித்தேர்வு மகளுக்கு

….

பலவிதமான வண்ணங்கள் கொண்டவை

…. காதல் தேவதைகள்

இப்படி விளக்கினேன்

விழி விரிய மகள் தொடர்ந்தாள்

அவைகளுக்கு என்ன பிடிக்கும்?

பூமிப் பந்தும் பூக்களில் தேனும்

பிடிக்காதது?

உன் என் பெருவிரலும் சுட்டுவிரலும்

கொஞ்சம் யோசித்துப் பின் கேட்டாள்

எல்லாம் சரி

அசிங்கமான கம்பளிப் பூச்சி அம்மாவிடம் இருந்து

அழகான பட்டாம்பூச்சி பாப்பா எப்படி வந்தது?

அழகு எனும் புதிரை எப்படி அவிழ்க்க?"[85]

இக்கவிதையில், புதிர்கள் அவிழ்த்து அவற்றிற்கான விடை சொல்ல வேண்டிய சகோதரித்துவ நிலையில் தாய் விளங்குகிறாள்.

எஞ்சோட்டுப் பெண் என்ற கவிதைத் தொகுப்பில் தன் சகோதரித்துவ நட்பின் வலிமையைக் காட்டி நிற்கிறார் தமிழச்சி தங்க பாண்டியன்.

"ஒரு பொழுதும் எனக்குத் தராமல்

ஒளித்து எடுத்து வரும்

எள்ளுருண்டையோ

உமிழ் நீர் சுரக்க வைக்கும்

உளுந்தங் களியையோ

தனித்து உண்டதில்லை நீ

….. பொறிகடலை மாவில்

சர்க்கரை பிசைந்து

மை கலைந்த

தினத்தளாள்களில் பொசிந்து

எனக்காய் எடுத்து வரும் உனக்கு

சர்க்கஸ் வித்தையின்

சாகசத்துடன் நான் செய்கின்ற

சாக்லேட் சுற்றின சரிகைக்

காகித உருவங்களே

சாகாவரம் பெற்ற

கனவு தேவதைகள்”[86]

என்ற விவரிப்பு, சிலம்பாயி என்ற பெண்ணுக்கும் கவிஞருக்கும் இடையே இருந்த சகோதரித்துவ உறவைக் காட்டுகின்றது. ஆனால் இக்கவிதையின் நிறைவு சோகமாய் அமைகிறது.

‘மாசித் தேருக்குத் தவறாமல்

இடித்த மாவிளக்கு மாவோடு

எனைப் பார்க்க

நசுங்கிய குடமாய்

வருடந்தோறும் உருமாறி வந்த

எஞ்சோட்டுப் பெண்ணே

சிலம்பாயி

இந்த முறை தேருக்கு

இரண்டாவது இரட்டைச் சடை

மொட்டுவர

ஒரு வேளை உனக்குச்

சுகவீனமோ என் நான் வினவ

பின்னிருந்து

நாலாவது பிரசவத்தில்

நீ இறந்துவிட்டதாய்

மூன்றாவதைச் சுமந்திருந்த

உன் முதலாவது சொன்னபொழுது

என் மனத்தேரின்

கடையாணி கழன்று

மகளின் மாவிளக்கில்

புதைந்து போனது”[87]

என்ற கவிதையின் சோகம் ஆற்றமுடியாததாக விளங்குகின்றது. நட்புடன் பழகிய, சகோதரித்துவ நிலையில் நின்று நிலவிய சிலம்பாயி கேட்பதாக இந்தக் கவிதை எழுதப்பெற்றுள்ளது.

தனக்காக தன் சோகச் சுமைகளைத் தூக்கிச் சுமந்த தோழியின் சோகமுடிவு மிகக் கொடுமையை அளிப்பதாக இக்கவிதையில் உரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இவரின் சகோதரி பற்றிய கவிதை ஒன்று இதே தொகுப்பில் அமைந்துள்ளது. பிறந்த வீட்டுக் கோடி என்ற தலைப்பில் அமைந்த அந்தக் கவிதையும் சோத்தில் முடிகிறது.

“அக்கா தங்கையென நாம் பதியப்பட்ட

காலப் புத்தகத்தில்

கணக்கெடுத்துப் பார்த்தால்

நம் உடன் பிறந்தானின்

திருமணத்தில்

மேடையில் என் கை பற்றி

நீ நின்றிருந்ததுவும்

நம் தந்தையை நாமிழந்த

அவல நாளின்

கையறு நிலையில்

அடைபடாத கண்ணீருடன் நான்

உன் தோள் சாய்ந்திருந்ததுவும்

சொற்ப பக்கங்களில் தாம்...

அன்னையர் வேறான நிகழ்வு

அநிச்சையாய் நம்முள்

திரித்திருந்த

கூச்சத்தின் மாயக் கயிறறுத்து

வார்த்தைகள் வடித்திராதொரு

வாஞ்சையுடன்

அந்நியோன்யமாய் உன்னை

ஆரத்தழுவ வேண்டுமெனும்

என் நிறைவேறா ஆசையினை

உன் மரணத்திற்காக நான் போட்ட

அந்தப் பிறந்த வீட்டுப்

புதுப்புடவை பூர்த்தியாக்கிற்று"[88]

என்ற கவிதை சகோதரித்துவத்திற்கு எடுத்துக்காட்டாக நிற்கும் கவிதையாகும்.

அன்னையர் வேறாகி, தந்தை ஒருவராக அமைந்த குடும்பச் சூழலில் முதல் தாய்க்குப் பிறந்த தன் அக்காவை அதிகம் அறிந்திடா நிலை உருவாகிவிடுகிறது. இருப்பினும் அக்கா, தங்கை உறவு பல தடைகளைக் கடந்து உயிர்ப்புடன் நிற்கிறது. தம்பி திருமணத்தில், தந்தை இறப்பில் இருவரும் கலந்து பழகும் வாய்ப்பு கிடைக்கிறது. இருப்பினும் சகோதரித்துவ உறவு சொல்லிக் கொள்ளும் நிலையில் இல்லை. அக்காவை அன்புடன் தழுவிட வேண்டும் என்று எண்ணிய நிலையில் அவளின் இறப்பு நேர்ந்து அவளை நிரந்தரமாகப் பிரித்துவிடுகிறது. இந்நிலையில் தங்கை என்ற உறவு நிலையில் இருந்து அவளுக்குக் கோடிப்புடவையை அளித்து மரியாதை செய்யும் பெண்ணாக இக்கவிதையில் இடம்பெறும் பெண் விளங்குகிறாள். அவளின் அணைக்கும் ஆசை, அவள் தந்த புடவை அணைத்ததால் நிறைவடைகிறது,

இவ்வாறு பெண்களுக்குள் சகோதரித்துவ உறவு வெளிப்பட்டு நிற்கிறது.

**தொகுப்புரை**

தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைப் படைப்புகளில் பெண்ணியச் சிந்தனைகள் மரபு சார்ந்த நிலையில் எடுத்தாளப்பெற்றுள்ளன. பெண் என்பவள் பொறுமையுடன், அனுசரித்துக் குடும்ப வாழ்வில் வாழ்ந்திடும் நிலையில் அவளின் உரிமைகளை ஓரளவிற்குப் பெற்றிருக்கவேண்டும் என்ற நிலைப்பாட்டில் இவரின் கவிதைகள் படைக்கப்பெற்றுள்ளன.

இருப்பினும் ஆண் ஆளுமை, ஆணின் பார்வை காரணமாகப் பெண்கள் பாதிக்கப்படும் நிலையையும் எடுத்துரைத்து, இந்நிலை மாறவேண்டும் என்ற நிலையிலும் இவர் தன் கவிதைகளைப் படைத்துள்ளார்.

இவரின் கவிதைகளில் பெண்களின் விடுதலைக் குறியீடாக மைனா என்ற பறவை குறிக்கப்படுகிறது. பெண்ணியவாதிகளின் நிலைப்பாட்டை அவள், நான், இவள் என்ற மூன்று பாத்திரங்களில் அமைத்து – பெண்மைநிலை, பெண்ணிய நிலை, பெண் நிலை என்ற வகைப்பாட்டில் இம்மூன்று பாத்திரங்களுக்கும் உரிய நடத்தைகளை இவர் தன் கவிதைகளில் காட்டியுள்ளார்.

பெண்ணின் பெருஞ்சக்தியாக உயிர்களைப் பிறப்பித்தல் என்பது அமையும் நிலையில் அது குறித்து எவ்வித பெருமையும் கொள்ளாமல், அது குறித்து எவ்வித மேம்பாட்டையும் புரிந்து கொள்ளாமல் இச்சக்தி கொண்டே பெண்களை அடக்கி வைக்கும் ஆண்நிலைப்பாட்டை இவர் கடுமையாகத் தன் கவிதைகளில் விமர்சித்துள்ளார்.

பெண் எப்போதும் ஆணின் பின்னிணைப்பாகவே விளங்கவேண்டும் என்ற ஆண்மனப்பாங்கு மாறவேண்டும் என்பது இவரின் நோக்கமாக உள்ளது.

இவர் வனப்பேச்சி என்ற தொன்மத்தைத் தன் தோழியாகக் கருதி அவ்வனப்பேச்சியுடன் தன் வாழ்வு நினைவுகளைப் பகிர்ந்து கொள்ளும் போக்கில் கவிதைகளைப் படைத்துள்ளார். இதுபோன்ற துணை ஒன்று அனைத்துப் பெண்களுக்கும் அமையவேண்டும் என்ற அடிப்படையில் இவரின் வனப்பேச்சியுடனான இணைப்பு விளங்குகின்றது.

இவர் பல தொன்மப்பாத்திரங்களைத் தன் கவிதைகளில் கையாண்டுள்ளார். அத்தொன்ம பாத்திரங்கள் ஆணின் ஆசையில் பெண் வீழ்ந்த நிலைப்பாட்டினைக் காட்டுவனவாக உள்ளன. எனவே பெண்களின் இழிநிலைக்குக் காரணம் ஆண்களின் ஆசைகளே என்பதை இவரின் கவிதைகள் சுட்டிநிற்கின்றன.

இவரின் கவிதைகளில் பெண் மொழிக் கூறுகள் காணப்படுகின்றன. ஆண் பயன்படுத்திய மொழிநிலைப்பாட்டில் இருந்து பெண் படைப்புகள் வேறுபட பெண் மனம் சார்ந்த மொழிக் கூற்றின் அடிப்படையில் தன் கவிதைகளைப் படைத்துக்கொள்ளவேண்டும் என்ற நிலையில் இவர் தன் கவிதைகளில் பெண் மொழி அடையாளங்கள் பலவற்றைக் கொண்டு தன் கவிதைப் படைப்புகளைப் படைத்தளித்துள்ளார்.

இவரின் கவிதைகளில் சகோதரித்துவப் போக்கு காணப்படுகிறது. ஒரு பெண் தன் உடன் பிறந்தாளுக்கு உரிய நிலையில் உதவும் போக்கில் அமையும் கவிதைகளை இவர் பெண்ணினத்திற்காகப் படைத்தளித்துள்ளளார். இப்பண்பு இவர் கவிதைகளில் காணக்கிடைக்கும் முக்கியமான அடையாளம் ஆகும்.

இவரின் கவிதைப் படைப்புகள் பெண் உரிமையை, பெண்துயரத்தை, பெண் மீட்சியை நோக்கி எழுதப்பெற்றுள்ளன என்று உணர்ந்து கொள்ள முடிகின்றது.

**சான்றாதாரங்கள்**

1 மேற்கோள், இரா.ரெங்கம்மாள், சி. வாசுகி, பெண்ணியம் அணுகுமுறைகளும் இலக்கியப் பயன்பாடும்,ப. 9

2 வாசுகி ஜெயரத்னம், பெண்ணியச் சுவடுகள், ப. 2

3 மேற்கோள், வாசுகி ஜெயரத்னம், பெண்ணியச் சுவடுகள், ப. 3

4 கதிர்.மகாதேவன், இரா. மோகன், பெண்ணியம், இரா. காஞ்சனா, பெண்ணியமும் பெண்ணியத் திறனாய்வும், ப. 14

5 தி.சு. நடராசன், திறானய்வுக் கலை, ப. 218

6 தி.சு. நடராசன், திறானய்வுக் கலை, ப. 219

7 தந்தை பெரியார், பெண் ஏன் அடிமையானாள்? பக் 53-54

8 தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப. 45

9 தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப.101

10 தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப.128

11 தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப.148

12 தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப.124

13 தமிழச்சி தங்கபாண்டியன், பேச்சரவம் கேட்டிலையோ, ப.140

14 மேற்கோள், வேலம்மாள் முத்தையா, விளம்பரங்களில் பெண்மை சித்திரிப்ப, தமிழ்த்துறை, இலக்கியத்தில் பெண்ணியச் சிந்தனை ப. 213

15 சு. பரிமளம் பெண்ணியப் பார்வை, ப. 22

16 தமிழச்சி தங்கப்பாண்டியன், எஞ்சோட்டுப்பெண், ப. 48

17 தமிழச்சி தங்கப்பாண்டியன், எஞ்சோட்டுப்பெண், ப. 48

18 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப.106

19 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப.123

20 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி ப. 136

21 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 38

22 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண், பக் 84-85

---

23 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண், ப.74

24 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண்,ப.75

25 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண். ப.138

26 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண்,ப. 139

27 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி. ப. 86

28 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி. ப.87

29 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி. ப.87

30 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி. ப.87

31 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப.87

32 தமிழச்சி தங்க பாண்டியன், அருகன்,ப. 107

33 தமிழச்சி தங்க பாண்டியன், வனப்பேச்சி, ப. 89

34 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன்,ப.89

35 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி. ப.70

36 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி. ப.112

37 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப.36

38 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி. ப.88

39 தமிழச்சி தங்கபாண்டியன்,அருகன், ப.50

40 தமிழச்சி தங்கபாண்டியன்,அருகன், ப.50

41 தமிழச்சி தங்கபாண்டியன்,அருகன், ப.50

42 தமிழச்சி தங்கபாண்டியன்,வனப்பேச்சி, ப.50

43 தமிழச்சி தங்க பாண்டியன், மஞ்சணத்தி, ப. 72

44 தமிழச்சி தங்கபாண்டியன்,அருகன், ப.50

45 தமிழச்சி தங்கபாண்டியன்,அருகன், ப.50

46 தமிழச்சி தங்கபாண்டியன்,அருகன், ப.50

47 தமிழச்சி தங்கபாண்டியன்,அருகன், ப.50

48 தமிழச்சி தங்கபாண்டியன்,வனப்பேச்சி, ப51

49 தமிழச்சி தங்கபாண்டியன்,வனப்பேச்சி, ப 51

50 தமிழச்சி தங்கபாண்டியன்,வனப்பேச்சி, ப 51

51 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன்,ப.99

52 தி.சு.நடராசன், திறானய்வுக்கலை, ப. 193

53 தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 11

54 http//gsambasivam.blogspot.com/2011/06/blog-post.html வலைப்பக்கத்தில் உள்ள கருத்துகளின் தொகுப்பு

55 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 64

56 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 64

57 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 64

58 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 64

59 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 67

60 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 66

61 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 67

62 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 67

63 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 67

64 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 68

65 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 49

66 தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 67

67 தமிழச்சி தங்கபாண்டியன்,எஞ்சோட்டுப்பெண், ப.164

68 மேற்கோள், மு.பழனியப்பன், மகாராணியின் அலுவலக வழி,ப. 28

69 தமிழச்சி தங்க பாண்டியன்,வனப்பேச்சி,ப. 25

70 தமிழச்சி தங்க பாண்டியன், வனப்பேச்சி,ப. 93

71 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன்,ப.74

72 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன்,ப.74

73 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன்,ப.75

74 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன்,ப.84

75 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன்,ப.91

76 தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 36

77 தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப. 34

78 தமிழச்சி தங்க பாண்டியன், வனப்பேச்சி, ப. 95

79 தமிழச்சி தங்க பாண்டியன், வனப்பேச்சி, ப. 44

80 தமிழச்சி தங்க பாண்டியன், அருகன், ப. 83

81 தேவதத்தா, தி.கமலி, பெண்ணிய கலைச்சொல் விளக்கக் கையேடு, ப. 86

82 தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப.63

83 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப.54

84 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப.55

85 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப 46

86 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப் பெண், பக் 79-80

87 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப் பெண், பக் 81

88 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப் பெண், பக் 51-52

## இயல்.3

## பெண்ணிய நோக்கில் உரைநடைப் படைப்புகள்

தற்காலத்தில் தமிழ் மொழியில் உரைநடைப் படைப்புகள் அதிக அளவில் எழுதப்படுவனவாகவும், பரந்த அளவில ் வாசிக்கப்படுவனவாகவும் விளங்கி வருகின்றன. தமிழின் உரைநடைக் கூறுகள் சிலப்பதிகாரத்தில் தொடங்கித் தற்போது மிக வளமான அளவில் வளர்ச்சி பெற்றுள்ளன. கட்டுரை, சிறுகதை, நாவல், திறனாய்வுக் கட்டுரை, அறிவியல் கட்டுரை, தன்னம்பிக்கைக் கட்டுரை, செய்திக் கட்டுரை, சமையல் குறிப்புக் கட்டுரை, சமூகவியல் கட்டுரை, மன நலக் கட்டுரை, வாழ்க்கை வரலாறு, தன் வரலாறு, கடிதம், நாடகம் போன்ற பல வடிவங்களில் தமிழின் உரைநடைப் படைப்புகள் பல எழுத்தாளர்களால் எழுதப்பெற்று வருகின்றன. தமிழ் உரைநடைப் பரவலாக்கத்தில் தமிழ் இதழ்கள் முக்கியப் பங்கு வகித்துவருகின்றன. இதழியல் நிலையில் தமிழின் வளர்ச்சி குறிக்கத்தக்க அளவினை எட்டியுள்ளது என்பதில் ஐயமில்லை. இவ்வகையில் பல்வகை படைப்புகளாலும், பல்வகை எழுத்தாளர்களாலும் வளர்த்து எடுக்கப்பெற்று தமிழ் உரைநடை இலக்கியம் செம்மைபட, தமிழச்சி தங்கபாண்டியனின் படைப்புகளும் உறுதுணை புரிந்து வருகின்றன. இவற்றினை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

தமிழச்சி தங்கபாண்டியன் சிறந்த விமர்சகராகவும், கிராம மண் மனம் சார்ந்த எழுத்தாளராகவும் விளங்குகிறார். அவரின் “பாம்படம், மண்வாசம், மயிலிறகு மனசு” போன்ற அவரின் அனுபவம் சார்ந்த உரைநடை ஆக்கங்களில் சிறந்தனவாக விளங்குகின்றன. அவரின் விமர்சனப் பார்வைக்குச் சான்றாக அமையும் உரைநடைப் படைப்பு “சொல் தொடும் தூரம்” என்பதாகும். இவற்றை பெண்ணிய அடிப்படையில் அணுகும் நிலைப்பாடு, இவர் கொண்டிருந்த பெண்ணியச் சிந்தனையை வெளிப்படுத்துவதாக அமையும்.

## பெண்ணிய நோக்கில் அனுபவம் சார்ந்த கட்டுரைப் படைப்புகள்

### பாம்படம்

சூரியக் கதிர் என்ற இதழில் தன் அனுபவங்களைக் கட்டுரைகளாகத் தமிழச்சி தங்கபாண்டியன் தொடராக எழுதியுள்ளார். இக்கட்டுரைகள் தொகுக்கப்பெற்று ஒரு கட்டுரைத் தொகுப்பாக பாம்படம் என்ற பெயரில் வெளியிடப்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் பெரும்பாலும் தன் கிராமத்தின் பருவ நிலைகளைப் பற்றியும், இப்பருவ நிலைகளில் வாழும் மனிதர்கள், பெண்களின் இயல்புகள் பற்றியும் எழுதியுள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இத்தொகுப்பில் மொத்தம் பதினெட்டு கட்டுரைகள் அடங்கியுள்ளன. அவற்றின் மையக் கருத்துகள் பெண்ணிய அடிப்படையில் எடுத்துரைக்கப்பெறுகின்றன.

### அழகு

அழகு என்பதைப் பற்றிய விவரிப்பாக இக்கட்டுரை அமைகிறது. அழகினைப் பற்றி பாக்யம் என்ற கிராமத்துப்பெண், “ கண்ணுக்கும் மனசுக்கும் சந்தோஷம் தர்ரதுதேன். அர்த்தம் பார்த்தா அழகேது”[1] என்று குறிப்பிடுகிறாள்.

அழகு என்பது புனைவிக்கப்பட்ட கருத்து என்று தமிழச்சி தங்கபாண்டியன் கருதுகிறார். “கற்பிக்கப்பட்ட ஜோடனைகளுடன், பெண் என்றால் ‘இன்னின்ன எடை, உடை, வளைவுகள் என்பதுவும், ஆண் எனில் வலுவேற்றப்பட்ட உடலும் அழகு என்பதன் எடைக்கற்கள் ஆனது எப்படி? எப்பொழுது நிகழ்ந்தது இது? உலகமய, தனியார்மய, தாராளமயப் பொருளாதாரச் சந்தையும், ஒற்றைக் கலாச்சாரப் போக்குமே இப்பிறழ்வுக்கான காரணிகள் என்றாலும் ஆதியிலிருந்தே அழகு என்பது புனைவு எனும் பதத்துடன் தொடர்பு கொண்டதே. இப்புனைவின் திரை கிழித்து, இயல்பாய் எளிமையாய் சற்று கற்பனை கலந்து துருத்தி நிற்காமல், தம்மை

இரசனையோடு வெளிப்படுத்துகையில் புனைவினது குரூரமும் பொய்யும் உடைந்து அழகு தனித்ததொரு கொண்டாட்டமாகிறது"[2] என்று அழகிற்கு விளக்கம் தருகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இப்பகுதி வழியாக பெண் என்பவளின் அழகு எடை, உடை, வளைவு போன்றவற்றால் நிர்ணயிக்கப்படும் உலக அழகிப் போட்டிகளின் தரத்தை விமர்சிக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். அது உண்மையான அழகு அல்ல. அது புனைவு என்பது அவரின் கருத்தாக அமைகின்றது.

கிராமத்துப் பெண்களின் அழகையே இவர் அழகென்கிறார். "மருதாணியும், சாம்பிராணிப் புகையும், தூதுவளைக் கண்மையும், கண்ணாடி வளையல்களும், கலர்ப்பாசியும், கிராமம் சார்ந்த சராசரிப் பெண்களின் அழகு சாதனங்களே"[3] என்ற கருத்து இவர் கிராமம் சார்ந்த அழகினை மதிப்பவர் என்பதைக் காட்டுவதாக உள்ளது.

**<u>அவரவர் மழை</u>**

கரிசல் பகுதியில் மழை என்பது அபூர்வமாய் பெய்யக் கூடியது. இதனை ரசிப்பது என்பதும், மழையால் துன்பப்படும் மக்களின் துயரத்தில் பங்கு கொள்வது என்பதும் கரிசல் பகுதியில் பாதிக்குப் பாதி நடக்ககூடியதாகும். 'மழையும் அப்படித்தான். சலிப்பும், சந்தோஷமும் சேர்ந்து நெய்த பொத்தல் கம்பளி. வாழ்வும் வலியும் சேர்ந்து தருகின்ற அமுத நஞ்சு"[4] என்று மழையின் இருநிலைகளையும் காண்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இன்னும் இதனை விரிவாக "விவசாயம் பார்த்துப் பிழைப்பவர்களுக்கோ வந்தால் சீதேவி, வரலைன்னா மூதேவி. அதிகமாயப் பெய்து பயிரைப் பாழாக்கினால் கொடுத்துச் சாகடிக்கும் சீதக்காதி"[5] என்று கிராமத்து விவசாயப் பெருமக்கள் மழையை நோக்குவதாக இவர் பதிவு செய்கிறார்.

இவர் மழையில் நனையாமல் வீடு செல்லும் நிலையில் “ சேலையை முழங்கால் வரை வரிந்து கட்டிக்கொண்டு வீட்டுக்குள் புகுந்த நீரை வாரியிறைக்கும் பெண் என்னைப் பார்த்து விகல்ப்பமற்றுச் சிரிக்கிறாள். ஒரு கணம் உடலும் மனமும் கூசுகிறது”[6] என்ற விவரிப்பில் மழை வந்தபோதும் குடும்பத்தைக் காக்கும் பெண்ணின் வலி உணர்த்தப்பெற்றுள்ளது.

**மனமும் மனம்சார் வாழ்க்கையும்**

தன் கிராமத்து இயற்கை அனைத்தையும் பெண்ணாகக் காணும் பார்வை கொண்டவராகத் தமிழச்சி தங்க பாண்டியன் விளங்குகிறார். அவரின் கடல் பற்றிய அனுபவம் மனமும் மனம் சார் வாழ்க்கையும் என்ற கட்டுரையாக விரிகிறது. “கரிசலின் ' மரமெல்லாம் பெண்தான் எனக்கு. ஊருணி, கண்மாய், மற்றும் நீரின் அனைத்து வடிவங்களும் பெண்மைதான் எனக்கு. மழையும், வெயிலும் பெண்ணின் வெவ்வேறு பருவங்கள்தான் எனக்கு. ஆனால் கடல் மட்டும் ஒரு பெண்ணாக என்னோடு இதுவரை சொந்தம் கொண்டாடியதில்லை. காரணம் என் நிலத்தை (கரிசல் பகுதியை) அதன் தாவரங்களை, பறவைகளை, பருவங்களை, நீர் நிலைகளை, தானியங்களை முழுவதுமாய் என்னுள் நிறைத்துக் கொண்டு மனமும் - மனம் சார் வாழ்க்கையுமாய் மட்டுமே இந்தப் பெருநகரத்தில் நான் இருக்கிறேன்”[7] என்ற மனப்பாங்கில் தமிழச்சி தங்கபாண்டியன் கடலினிடத்தில் ஒரு அந்நியத்தைக் காண்கிறார். காரணம் அவர் பிறந்த இடம் கிராமம். புகுந்த இடம் அல்லது வாழ்கிற இடம் கடல் சார் நகரம். இந்நகரத்து வாழ்க்கை அவரின் கிராமத்து வாழ்வை வாழவிடாமல் செய்துவிட்டது என் ஏக்கமாக இருக்கவேண்டும். மேலும் தன் கிராமத்துப் பொருள்கள் அனைத்தையும் பெண்களின் வடிவமாகக் காண்பவர்க்கு நகரத்து வடிவங்கள் அனைத்தும் அதன் எதிர் நிலையில் தெரிவது இங்குக் குறிக்கத்தக்கது.

கடலின் அந்நியத்தன்மையை அவர் “ கடல் என்பது என் கரிசல் நிலப்பரப்பில் இல்லை. அது ஒரு மயக்கும் பிம்பம் தானே அன்றி மனதிற்கும் உடம்பிற்கும் நெருக்கமானதொரு உறவல்ல. வேடிக்கை பார்க்கத் திருவிழாவிற்கு ஆசையும் எதிர்பார்ப்புமாய்ப் போனாலும் அப்பாவின் தோள் வேண்டும். எனக்கு ‘கடல்’ என்பது எனக்குள் வேர்விடாத தள்ளி நிற்கிற புதிர்தான். அணுக்கம் கொள்ள முடியாத அந்நிய வசீகரம்தான்.கிலுகிலுப்பைக்கு மயங்கும் குழந்தைபோல் கொஞ்சநேரம் கடலின் ஆளுமையினை வியந்துவிட்டு அம்மாவின் பழம்புடவைத் தொட்டில் எனக் கரிசல் காட்டிற்குள் அடைக்கலமாகிவிடுகிறேன்”[8] என்ற நிலையில் கடல் அந்நியத்தன்மை பெற்றுவிடுகின்றது. கரிசல் மண்ணில் இல்லாத எல்லாப்பொருளும் அவருக்கு அந்நியத்தன்மையுடன் விளங்குகின்றன என்பதை இவற்றின் வழி உணரமுடிகின்றது.

## <u>வெயில் மரம்</u>

கிராமத்தின் வெயில் கால அனுபவத்தை வெயில் மரம் என்ற இக்கட்டுரை காட்டுகின்றது. “இராமநாதபுரம் மாவட்டத்தில் வெயில் வீட்டாள் போல, மழையோ விருந்தாடி”[9] என்று வெயிலுக்கு இலக்கணத்தை இக்கட்டுரை தருகிறது. கரிசல் மண்ணின் காந்தல் வெயிலும் ஒரு ருசி என்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். “பருத்தி ஆடை, உழைப்பிற்கும் ஓய்விற்கும் நீராகாரத்தில் ஊறவைத்த கம்பு உருண்டைகள், பச்சை வெங்கயாம், தேங்காய்ச்சில், நீர் மோர், என்கின்ற உடலைக் குளிர்விக்கும் உணவு இவற்றோடு வெயிலை உண்டும் கண்டும், கேட்டும், முகர்ந்தும், உய்ந்தும் இருப்பார்கள் கரிசல் மக்கள்”[10] என்ற கருத்து வெயிலை இவர் எவ்வளவு நேசித்து வருகிறார் என்பதைக் காட்டுவதாக உள்ளது.

**நாளை இன்னுமொரு நாளே**

மார்கழிப் பனி அனுபவம், பொங்கல் அனுபவம் பற்றிய கட்டுரையாக நானை இன்னுமொரு நானே என்ற கட்டுரை அமைகிறது. “ உள்ளங்கையில் வழிகின்ற சொட்டுப் பொங்கலைச் சுவைத்துவிட்டுக் கையைத் துடைத்துவிட்டுப் பின் தூண் மறைவில் நின்றபடி இன்னொரு முறை கைநீட்டிக் கூச்சமில்லாமல் சாப்பிட்ட சிறுமி, நகரம் சேர்ந்து நாப்கினில் கை துடைத்து அளவாய் வெட்டிய ஆங்கிலப் புத்தாண்டு கேக் சாப்பிட்ட – நாரீமணியான கதையை எங்குப் போய்ச் சொல்வேன் எம்பாவாய்”[11] என்று மார்கழிக்குப் பாவைப்பாடலை உரைநடையாகப் பாடுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

பொங்கல் கிராமத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அங்கு வைக்கப்படும் மண்பானைப் பொங்கலுக்கு ஈடு இணையில்லை. அதே நேரத்தில் பொங்கலுக்காக முன் தயாரிப்பாக வீடு சுத்தம் செய்யும் பாங்கும் கிராமத்தில் நடைபெறும். ஒற்றைச் சடை சொர்ணாக்கா என்பவள் பொங்கலுக்குப் பொங்கல் தாய் வீட்டுக்கு வந்து அதனைச் சுத்தம் செய்துவிட்டுப்போவாள். அவளிடம் இவர் “புகுந்த வீட்டில் பழசையெல்லாம் ஒழித்து ஒதுங்க வைப்பதை விட்டுவிட்டு அம்மா வீட்டுக்கு வந்து சுத்தம் பண்றீங்களே.. இங்கே ஆள் இல்லை என்றா?”[12] என்று கேட்கிறார். அதற்கு அப்பெண் சொன்ன பதில் இவர் மனதைப் பாதிக்கிறது.

“வாக்கப்பட்ட வீட்டில் பழசைக் கொளுத்துறதுக்குக்கூட எனக்கு வக்கில்லை. என்னைக் கேட்காமல் இதை ஏன் கழித்தாய், எப்பவாவது எனக்குத் தேவைப்படும். இதை ஏன் ஒழித்தாய் அப்படின்னு ஏகப்பட்ட கேள்விகள் என்றாள்”[13] இந்த பதில் சாதாரணமாக இருந்தாலும், இந்தப்பதில் அனைத்து இல்லத்தரசிகளுக்கும் ஏற்படாமல் இருந்ததில்லை என்பதை உணர்ந்து கொள்ளமுடிகின்றது. இவ்வாறு ஒரு சிறு நிகழ்விற்கும் பெண்

தன்மையுடன் தன்னை தன் அனுபவத்தைப் பகிர்ந்து கொள்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**குழாயடிகளும் பல்கலைக்கழகப் புல்வெளியும்.**

கிராமத்தில் நடைபெறும் சண்டைகளுள் குறிக்கத்தக்கது குழாய் அடிச் சண்டைகள். ஆனால் அவையும் இப்போது காணாமல் போய்விட்டன என்ற ஏக்கத்தை இக்கட்டுரை வெளிப்படுத்துகிறது. ஏனெனில் வீட்டுக்கு வீடு குழாய் வந்துவிட மக்கள் தொடர்பே அற்றுப்போனது என்பதை இக்கட்டுரை எடுத்துரைக்கிறது.

கிராமத்துப்பெண்கள் இரவு உடை உடுத்திக்கொண்டு விடுதலையுடன் இருப்பதை எண்ணி இக்கட்டுரையில் மகிழ்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். “ஐரோப்பியப் பெண்ணும் இரவு உடையில் வீட்டைவிட்டு வெளியே வருவதில்லை என்றாலும் எனதூர்ப் பெண்கள் விரும்பிய வசதியான உடை அணிந்து நடமாடுவது உண்மையிலேயெ சந்தோஷம்தான்”[14] என்ற கருத்து பெண்களுக்குக் கிடைத்துள்ள உடை விடுதலையை வரவேற்பதாக உள்ளது.

இக்கட்டுரையில் இவரின் அப்பத்தா ஒருமுறை தெருச் சண்டை போட்டுப் போக்குவரத்து நெரிசல் உருவான நிலையையும் எடுத்துரைக்கிறார். இதன் காரணமாக மாவட்ட வருவாய் அலுவலர் என்ன சண்டை என்று அப்பத்தாவிடம் கேட்க, “ டிராபிக்க சரி செய்யச் சொல்லி சண்டைய நிறுத்திட்டு வழிவிட்டாச்சு. ஏன் எதற்கு இந்தச் சண்டை என்பதை எல்லாம் நான் உங்களிடம் சொல்ல வேண்டியதில்லை. அது என் சொந்த விஷயம்”[15] என்று அச்சமின்றிக் குறிப்பிட்ட அப்பத்தாவின் ஆளுமையை இக்கட்டுரையில் பதிவு செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**<u>கம்பந்தட்டைகள் + மைனாக்கள் = காதல்</u>**

காதல் பற்றிய கருத்துகளை உடையதாக இக்கட்டுரை அமைகிறது. ‘காதல் கம்பஞ் சொங்குதான். - உறுத்தி கண்ணீர் வரவழைத்தாலும் தவிர்க்க இயலாது. காதல் துடைத்துவிட்டுப் போகக் கூடியதுதான். வாழ்வின் நெருக்கடி அச்சுறுத்துகையில் காதல் தானியம்தான். வாகனங்களால் அரைபட்டுச் சேகரிக்கப்பட்ட சாக்கு மூட்டைகளில் இருந்துத் தப்பிச் சிதறுகையில், கருணையோடு அவை இன்னமும் எத்தனை மைனாக்களின் பசியைத் தீர்க்கின்றன. காதல் ஒரு வேண்டுதல்தான். நிறைவேறினால் கோயில் மணியாகவும், இல்லையெனில் கூடுதல் கம்பிகளுக்காக பிரார்த்தனையாகவும் உருவகிக்கின்ற பேதமைதான். காதல் ஒரு பாம்படம்தான். என் கரிசக்காட்டுப் பாட்டிகளின் காதுகளில் காலந்தோறும் ஆடும் காதல் ஒரு பாம்படம்தான்’[16] என்று தமிழச்சி தங்கபாண்டியன் காதல் என்பது எல்லார்க்கும் ஏற்படும் அனுபவம்தான். அதனைக் கடந்து போகிறவர்கள் போகிறார்கள். அதில் கரைந்துபோகிறவர்கள் கரைந்து போகிறார்கள் என்று கருதுகிறார். இக்கட்டுரையில் பாம்படம் என்ற அணி பயன்படுத்தப்பெற்றுள்ளது. காதல் கிராமத்துப் பாட்டிகளின் காதுகளில் தொங்கும் பாம்படம் போன்றது என்று இவர் குறிக்கிறார். இது இத்தொகுப்பின் தலைப்பாகவும் அமையக் காரணமாகி உள்ளது.

**<u>ஆனைகள் வரும் அழகான தெரு</u>**

திருவிழாக்காலத்தில் ஊருக்கு வரும் யானையின் வரவு பற்றிய கட்டுரையாக இது அமைகிறது. சென்ன கேசவப் பெருமாள் கோயில், பேச்சியம்மன் கோயில் போன்ற கோயில்களின் திருவிழாவிற்கு யானை வரும். இதனைக் காணக் கிராமத்துக் குழந்தைகள் கூடுகின்றனர். பொம்மக்கா என்பவள் தன் மகள் படிக்காமல் யானை பார்க்க வந்து விட்ட நிலையில் அவளைக் கண்டிப்பதை இக்கட்டுரை கண்முன் நிறுத்துகிறது. “ஒரு நா லீவு வுட்டாக்கா, வீட்டில் இருந்து பேன் சீவுனோம். அரப்பு தேய்ச்சுக் குளிச்சோம்னு

இல்லாம ஆனை பார்க்க ஓடியாந்துட்டா”[17] என்று கோபப்படும் பொம்மக்காவை இக்கட்டுரை காட்டுகிறது. பெண்பிள்ளைகளுக்கு உள்ள கட்டுப்பாட்டினைக் காட்டுவதாக இது அமைகிறது.

**<u>மேடம் லண்டன் சோட்டும் வலையன் குளக் கொத்தனாரம்மாவும்</u>**

லண்டனில் டேம் டுசாட் உருவாக்கிய அருங்காட்சியம் உள்ளது. அங்கு புகழ் பெற்றவர்களின் மெழுகுச்சிலைகளாக உருவாக்கப் பெற்றுக் காட்சிக்கு வைக்கப்பெற்றுள்ளது. இதனைக் கண்டுவந்த தமிழச்சி தங்கபாண்டியன், இக்காட்சியகத்தில் இன்னும் மெழுகுச்சிலைகளாக வைக்கவேண்டிய கிராமத்துப் பெண்கள் பலர் உள்ளனர் என்று கருதுகிறார். கொத்தனார் அம்மா என்றொரு பாத்திரம் கணவனைப் பிரிந்து நின்று, சமுதாயத்தை எதிர்கொள்கிறாள். “அப்புறம் கண்ணகி-ன்னு ஒரு பேச்சுக்குத் தனியா வந்தவதான் நான். இன்னிவரை தெருவோட போறப்ப கூட அதைக் கண்டா காறித் துப்பிட்டுத்தான் மேல நடப்பேன். இராமரு, இன்னாசி முத்து எல்லாரும் ஆம்பளைதான்?”[18] என்ற அவளின் பேச்சில் கண்ணகியை ஒப்பு வைத்துப் பேசும் பாங்கு இவருக்கு வியப்பளிப்பதாக உள்ளது. இவளின் சுயமரியாதைத் தன்மைக்காக இவளுக்குச் சிலை வைக்கவேண்டும் என்ற எண்ணம் தமிழச்சி தங்கபாண்டியனுக்கு ஏற்படுகிறது.

**<u>கச்சம்மா என்னும் கிளியோபாட்ரா</u>**

கச்சம்மா என்ற பெண்ணின் இயல்புகளை எடுத்துரைப்பது கச்சம்மா என்னும் கிளியோபாட்ரா என்ற கட்டுரையாகும். “செமதீ (தமிழச்சி தங்கபாண்டியனின் இயற்பெயர்), பெண்ணாய்ப் பிறப்பது சந்தோஷம்தான். எப்ப தெரியுமா? கொஞ்சம் நிலமும் கூடுதலாக கொஞ்சம் நிறமும் இருந்தா-அப்படீன்னு என் ஆத்தா சொல்லுவா. ஆனா, நா அப்படி நினைச்சதில்லை. கையும், காலும் குறையில்லாத பிறப்பா இருந்தாப் போதும். எப்படியும் உருண்டு, புரண்டு எந்திரிச்சலாம்னு இப்ப வரை நம்புறேன். எங்க காலத்துல

கூடுதல் பலமா பொம்பளக்கு வாய்ப்பேச்சை வைச்சிருந்தோம். இப்போ படிப்பு. வாய்க்குப் பதிலா பொத்தகப் பை” என்றவளைக் கண்ணகலப் பார்த்தேன்”[19] என்பது கச்சம்மாவின் பெண் எண்ணம் ஆகும். இச்செய்தியின் வழியாகப் பெண்ணாகப் பிறந்தால் சற்று நல்ல நிறத்துடன் பிறக்கவேண்டும் என்ற முன்தலைமுறைக்கால செய்தியையும், தற்காலத்தில் படிப்பும், பேச்சும் இருந்தால் பெண்ணுக்கு மதிப்பு உண்டு என்பதையும் அறிந்து கொள்ளமுடிகின்றது.

கச்சம்மாவின் உழைப்பழகிற்கு உலக அழகிகளின் அழகு இணையானது அல்ல என்பதை உணர்த்துவதாக இந்தத்தலைப்பு வைக்கப்பெற்றுள்ளது. “ பாரு கச்சம்மா! நிழலுக்கு நிறமேதுமில்லை. நீ, நான், திமிசு எல்லோரது நிழலும் ஒரே நிழல்தான் என்று சொன்னபடி அவளது மெலிந்த கைவிரல்களைப் பற்றினேன். நகக்கண்ணில் காரையின் அழுக்குப் படிந்திருக்க, கரடுமுரடான உள்ளங்கை வறண்டிருந்தது. களை எடுக்க அருவா, கம்பு குத்த உலக்கை, கார வேலை செய்ய இரும்புத்தட்டு, இப்படி ஏந்தி எத்தனை கடினமான வேலைகளை இந்தக் கைகள் செய்திருக்கும்? முறையான ஊட்டச்சத்தும், பராமரிப்பும் இல்லாத இவற்றைவிட உலகின் பிரபஞ்ச அழகிகளின் கைகள் சிறப்பானவை இல்லை”[20] என்ற உழைப்பின் மேன்மை பெண்களின் தனித்தன்மையாக விளங்குகிறது.

**போதும்பொண்ணும் சில கேள்விகளும்**

கிராமங்களில் பெண் குழந்தைகள் தொடர்ந்து பிறந்தால் ஆண் குழந்தை விருப்பப்படும் சூழலில் போதும் பொண்ணு என்று கடைசியாகப் பிறந்த பெண்ணுக்குப் பேர் வைப்பது இயல்பான வழக்கமாகும். அவ்வாறு போதும் பொண்ணு என்று பெயர் வைக்கப்பட்ட ஒரு பெண்ணிடம் தமிழச்சி தங்கபாண்டியன் ஏன் உன் பெயரை இன்னும் மாற்றவில்லை. மாற்றிக்கொள்ளலாமே என்று கேட்டபோது அப்பெண் சொன்ன பதில் “ம். பேரை

மாத்திட்டா எல்லாம் மாறிடுதாக்கும். தாசில்தார் ஆபீஸுக்குப் போனாலே எனக்குக் கண்ணைக் கட்டும். அங்கனபோயி அஞ்சு, பத்தைக் கொடுத்துப் பேரை மாத்தினாலும் ஆயியும் அப்பனும் உடன் பொறந்ததுகளும் பொறந்தப்ப வைச்ச பேரைத்தான் பொட்டில் அடிச்சது போலக் கூப்பிடுவாக. ஒன்ன மாதிரி பேரை மாத்தி ஒரே நாளில் பேமஸ் ஆக முடியுமா என்ன?”[21] என்ற கேள்வியில் பேர் மாற்றத்திற்குக் கூட உரிமையற்றவர்களாகப் பெண்கள் இருப்பதை உணரமுடிகின்றது. மேலும் சுமதி தமிழச்சி தங்கபாண்டியனாக மாறி பிரபலம் ஆனதையும் இங்கு இப்பெண் சுட்டிக்காட்டி எல்லாப் பெண்களாலும் இது முடியுமா என்று வினா எழுப்புகிறாள். ஒவ்வொரு பெண்ணின் வாழ்விலும் ஏதாவது ஒரு சோகம் கலந்திருப்பதை இக்கட்டுரை அறிவிக்கின்றது.

இதே கட்டுரையில் சவுரியக்காவிடம் கேட்கப்படாத கேள்விகள் பற்றித் தமிழச்சி தங்கபாண்டியன் வினவுகிறார். சவுரியக்கா எப்போதும் சவுரி முடியுடன் இருப்பதால் இப்பெயர் அவளுக்கு ஏற்பட்டது. அவளுக்குக் குழந்தை இல்லை, முடியும் சவுரி முடியாக உள்ளது. அவளிடம் கேட்கப்படாத அல்லது கேட்க விரும்பாத கேள்விகளாக இரண்டு உள்ளன. ஒன்று சவுரி முடி படுக்கும்போதும் இருக்குமா? மற்றது அடுத்தது ஏன் குழந்தை இல்லை? என்பதும்தான். இவை இரண்டையும் ஒரே தளத்தில் வைத்துச் சவுரியக்கா பார்க்கிறாள். ஏனென்றால் இவை இரண்டையும் கணவன் அவளிடம் கேட்காததும், அவளைப் பார்த்து யாரும் கேட்காததும் ஆனவை இவையாகும்.

இவ்வாறு பெண்களின் சிக்கல்களாக பேர் மாற்றம், குழந்தை இன்மை, உண்மை முடி இன்மை போன்றன இக்கட்டுரையில் இடம்பெறச் செய்யப்பெற்றுள்ளன.

**பிள்ளையார் எறும்பும் உப்புக்கண்டமும்**

பெரியான் என்பவருக்கும், அவரின் மனைவியான பெரியாம்படையாளுக்குமான ஊடல் குறித்து இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது.

பெரியான் உழைப்பாளி, பெரியாம்படையாள் அசைபா எனப்படும் தன்னார்வத் தொண்டு நிறுவனத்தின் பணியாளர். ஞாயிறன்று தவறாமல் பெரியாம்படையாள் தேவாயலத்திற்குச் சென்றுவிடுவார். ஆனால் பெரியான் செல்வதே இல்லை. இது ஒரு மனக்குறையாக இருந்தது பெரியாம்படையளாளுக்கு.

தாய்வீட்டுக்கே செல்லாது பெரியான் வீட்டில் இருப்பதே பெரியாம்படையாளுக்கு மிகவும் பிடித்தமானது. இச்சூழலில் தேவாலயத்தில் உறவு முறைப் பிள்ளைக்கு ஞானஸ்நானம் வைத்திருந்தார்கள். அதற்குச் சரியான நேரத்தில் பெரியாம்படையாள் போகமல் பெரியான் சற்று மது போதையில் இருந்துவிட்டார். இதன் காரணமாக “ஆசிர் பெறவும் ஆசீர்வதிக்கவும் ஒரு கொடுப்பினை வேணும். உனக்கு எங்கே அது எழுதியிருக்கு?”[22] என்று பெரியாம்படையாள் சொல்லவும் சற்றுக் கோபம் வந்து அசைபாச் செல்லும் அவள் தனக்கு உணவு சரியாக சமைப்பதில்லை என்பதைக் கருத்தில் கொண்டு இரு உப்புக்கண்டத்திற்குக் (காயவைத்துப் பதப்படுத்தப்பட்ட ஆட்டுக்கறிப்பகுதி) கொடுப்பினை கிடைக்கட்டும் என்று பெரியான் பேசிவிடுகிறார். இதனால் மனமுடைந்த பெரியாம்படையாள் தன் தாய்வீட்டிற்குச் சென்றுவிடுகிறாள். இந்த ஊடல் நீடித்த நிலையில் ஒரு நாள் தூக்குச்சட்டி நிறைய உப்புக்கண்டத்துடன் பெரியானைப் பார்க்கவருகிறாள் அவளின் மனைவி. இதற்கு இணையான அப்பம் தேவலோகத்தில் இல்லை என்று தமிழச்சி தங்கபாண்டியன் இந்தக் கட்டுரையை நிறைவு செய்கிறார்.

**ஓங்க மனசு**

மல்லாங்கிணற்றில் சலவைத் தொழில் செய்யும் குருவன் சலவை செய்து வந்த துணிகளுக்குக் கணக்குப் போட்டு காசு வாங்குதில்லை. ஓங்க மனசு போல தாங்க என்பதே அவரின் கூலியாகும். இதுபோல பாண்டியம்மா என்ற பெண்மணி ஊர் சுத்தம் செய்தாலும் வயது முதிர்ந்த நிலையிலும் தமிழச்சி தங்கபாண்டியன் வீட்டிலும் சுத்தம் செய்து வருபவள் ஆவார். இவள் தமிழச்சி

தங்கபாண்டியன் கையெழுத்து இருந்த காகிதத்தைக் குப்பை என்று சொன்னபோதும் அதனைத் தூக்கி வீசாமல், தன் முந்தானைக்குள் முடிந்து கொள்கிறாள். இவளை விடச் சிறந்த கவிதை எது? என்று இக்கட்டுரையை முடிக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

ஏழைகள், உழைப்பாளிகள் என்றபோதும் தங்களுக்குள் ஒரு நியதியுடன் செயல்படும் இவர்களின் நேர்த்தி இவர்களைக் கட்டுரைப் பொருளாக்கியுள்ளது.

<u>எட்டுரூபா செப்புக்குடம்</u>

வெடிவால் கருப்பையா என்ற பலசாலி இறந்துபோக அவரின் மகள்கள் இருவர் படும் துயரத்தைப் பற்றிய பகிர்வாக இக்கட்டுரை அமைகிறது. கருப்பையாவின் மகள்கள் இருவர் நிர்கதியாக நிற்கிறார்கள். மூத்தவளுக்குக் கண்கள் தெரியாது. இளையவள் தன் கணவனை இழந்து ஒரு மாத காலம்தான் ஆகிறது. இச்சூழலில் தன் பழைய சிநேகிதியான தமிழச்சி தங்கபாண்டியனைப் பார்க்க வருகிறார்கள் அப்பெண்கள். அவர்களின் நிலையறிந்து கவலைப்பட்டு, அவர்களின் வாழ்க்கைக்காக தன்னால் இயன்றதைச் செய்ய எண்ணுகிறார் கட்டுரையாசிரியர்.

விருதுநகரில் கட்டிக்கொடுக்கப்பட்ட இளையவளுக்கு விதவை உதவிச் சம்பளம் பெற விருதுநகர் செல்ல இயலாத நிலையில் அக்கா இருக்கிறாள். அக்காவை கையோடு அழைத்துச் செல்ல அந்த விதவைத் தங்கை இருக்கிறாள். அத்தங்கை சொல்கிறாள். இளவயதில் கணவனைப் பறி கொடுத்தவர்களுக்கு உதவித் தொகை வழங்கமாட்டார்களாம். ஏனென்றால் அவர்கள் மறு கல்யாணம் பண்ணிக் கொள்வார்களாம் என்பதால் அதனைத் தரமாட்டார்கள் என்று இளம் விதவை சொல்கிறாள். இருப்பினும் தமிழச்சி தங்கபாண்டியன் மாப்பிள்ளை பார்க்கும்போது சொல் உதவிகள் செய்கிறேன் என்று வாக்களிக்கிறார்.

பெண்களின் வாழ்வில் இத்தனை துயரங்கள் உள்ளன என்பதை எடுத்துரைக்கிறது இக்கட்டுரை.

**புறவழிச்சாலை**

புறவழிச்சாலையில் இளநீர் கடை வைத்திருக்கும் பெண் படும் அவலத்தை இந்தக் கட்டுரை காட்டுகிறது. மரங்கள் எல்லாம் புறவழிச்சாலைக்காக வெட்டப்பட்ட நிலையில் ஒரு நெகிழிக்குடைக்குள் இளநீர் விற்கும் பெண் ஒதுங்கக் கூட இடம் இல்லாமல் தவிக்கிறாள். நீர் அருந்தினால் ஒதுங்கவேண்டும் என்று தான் விற்கும் இளநீர் குடிக்காமல் வெயிலில் நிற்கும் பெண்ணின் அவலத்தினை இக்கட்டுரை வெளிப்படுத்தி நிற்கிறது.

**செந்துருக்கம் பூர்ணம்**

வயது அதிகமானவர்களைப் பற்றிய கவலையை வெளிப்படுத்துகிறது செந்துருக்கம் பூர்ணம் என்ற தலைப்பிலான இக்கட்டுரை. மதுரை தொடர்வண்டி நிலையத்தில் ஆதரவற்ற முதியவள் ஒருத்திக்காக ரொட்டியும் பாலும் வாங்கிக்கொடுத்துவிட்டு அவளின் நினைவாகவே தன் ஊருக்கு வந்த தமிழச்சி தங்க பாண்டியனை அன்றைக்குச் சந்தித்தவள் செந்துருக்கம் பூர்ணம் என்ற மூதாட்டியாவாள். தன் பிள்ளைகள், பேரன்கள் எல்லாரையும் வளர்த்துத் தற்போது தனிமரமாக இருக்கிறாள். அவள் நெற்றியில் எப்போதும் செந்தூரம் நிறைந்திருக்கும். திருநீறு வாசனை, வெற்றிலைக் குதப்பல், மூக்குப்பொடி முந்தனை இவை அவளின் அடையாளங்கள். இருப்பினும் அவளையும் முதுமை விட்டபாடில்லை. தும்மல் வரும் போதும் இருமல் வரும் போதும் அவளையறியாமல் நீர் பிரிகிற அளவிற்கு வயது ஆகிவிட்டது.

அவளைப் போலவே வெள்ளைப்பூண்டு விற்கும் தாத்தாவும் வயதின் ஏற்றத்தில் இருந்தார். அவர் கருப்பட்டி, பூண்டு, கருப்பையா சுவாமி ஆகிய மூன்றின் ஆதரவில் வாழ்பவர். அவரையும் முதுமை விட்டபாடில்லை.

இவர்களுக்கு முறையே அதாவது பூர்ணம் அம்மாள், வெள்ளைப்பூண்டு தாத்தா, தமிழச்சி தங்கபாண்டியன் ஆகியவர்களுக்கு வெற்றிலை, கள், கவிதை என்பன போதை தருவன. ஏதேனும் ஒரு போதை இல்லாமல் யாரும் வாழ முடியாது என்கிறது இக்கட்டுரை.

**சிலோன் காலனி**

இலங்கை அகதிகள் முகாமில் இருக்கும் சிறுமி யுகாமினி. அவளின் குடும்பம் முழுவதும் இலங்கையில் அழிந்துபோக, இவளின் பாட்டி இவளை இங்கு வந்து, கரிசல் மண்ணில் வளர்த்து வந்தாள். அவளும் இறந்துபோக யுகாமினி தனி ஆள். அவளை அந்தக் காலனியே வளர்த்து வருகிறது. நன்றாக படிக்கிறாள். படம் வரைகிறாள். தானாகச் சமைக்கக் கத்துக்கொண்டாள். இருப்பினும் அவளுக்குத் தன்குடும்பம், தன் இளவயது வாழ்க்கை பற்றிய நினைவுகள் இல்லாமல் போகுமா. அந்த நினைவுகள் அவளை வருத்தச்செய்யாதா? இதற்கு யார் காரணம். இந்த சுமையை இறக்கி வைக்க எந்த சுமைதாங்கிக் கல் உள்ளது என்று இக்கட்டுரை இலங்கைத்தமிழர் வாழ்விற்கு இரங்குகின்றது.

**செல்லக்கிளியின் குச்சி ஐஸ்**

ஜக்கம்மா என்ற பெண்ணின் மகளான செல்லக்கிளி குச்சி ஐஸ் சாப்பிட ஆசைப்படுபவள். அவள் ஜாமின்ரி பாக்ஸ் வாங்கத் தந்த காசினைக் குச்சி ஐஸ் சாப்பிடச் செலவழித்துவிட அவளின் அம்மா ஜக்கம்மா அடித்துவிடுகிறாள். அவளின் வறுமை அப்படி அவளைச் செய்யச் சொல்கிறது. மேலும் ஆடிக்குத் தாய் வீடு செல்லுதல் என்ற முறைமை கரிசல் பகுதியில் உண்டு. ஆனால் ஜக்கம்மாவுக்கு அதுக்கு வாய்ப்பே இல்லை. அவளே தன் குடும்பத்தைச் சம்பாதித்து நடத்த வேண்டியவளாக உள்ளாள். தீப்பெட்டித் தாள்களை ஒட்டி அவளின் கரங்கள் அந்நாற்றத்தில் தோய்ந்து கிடக்கின்றன. இதனை விட்டுவிட்டு அவள் எப்படி தாய் வீட்டுக்குச்சென்று சீராட இயலும். ஆடிக்குச் சென்று

தாய்வீட்டில் கஞ்சி குடித்தால் அது கௌரவம் என்று நினைக்கும் அவள் ஒரு சிறு கல்லை எடுத்து எதிர் சுவற்றில் ஒட்டப்பட்டிருந்த சுவரொட்டியில் அடித்தாள். அது ஆடித்தள்ளுபடி விளம்பரம். ஆடியின்மீது அவளுக்கு இருந்த வெறுப்பு அது.

இவ்வாறு பாம்படம் என்னும் இத்தொகுப்பு பெண்கள் படும் இன்னல்களை மென்மையான முறையில் இயல்பாக படம் பிடித்துக் காட்டியுள்ளது. கணவன், குழந்தைகள், முதுமை, தனிமை, கணவன் இறப்பு, பெயர் மாற்றமுடியாமை போன்ற பல இன்னல்கள் பெண்களின் வாழ்வில் இணைந்தே வருகின்றன. இவற்றை வெளிப்படுத்துவதன் வாயிலாக பெண்களின் பொறுமையை, சமுதாயத்தில் அவர்கள் பெற்றுள்ள மதிப்பினை உணர்ந்து கொள்ளமுடிகின்றது.

**<u>மயிலிறகு மனசு</u>**

மயிலிறகு மனசு கட்டுரைத் தொகுப்பில் பல பெண்கள் பற்றிய அறிமுகங்கள் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகள் அவள் விகடன் என்ற பெண் குறித்தான சமுதாய இதழில் வெளிவந்துள்ளன. எனவே இவ்வறிமுகக் கட்டுரைகள் முற்றிலும் பெண்களுக்கு உரியது என்ற நிலையில் இக்கட்டுரைகள் பெண் நலம் பயப்பனவாகின்றன.

**<u>ராதிகாவின் கொலுசும், ரம்யமான மனசும்</u>**

நீலாங்கரையில் குப்பைகளைச் சுத்தம் செய்யும் ராதிகா என்ற பெண்ணின் கலை ரசனையைக் காட்டும் உரைநடைப் பகுதியாக இக்கட்டுரை அமைகின்றது. “பளபளக்கின்ற வெள்ளி, பஞ்சலோகம் எனப்படும் ஐம்பொன், கிரிஸ்டல் எனப் பலவகைக் கொலுசுகளைவிட இந்தப் பொடிப் பாசிக் கொலுசுகள் எனக்கு வெகு முக்கியம். மிகக் கவனமாகவும் நேர்த்தியாகவும் கோக்கப்பட்ட இந்தக் கொலுசுகளில் ராதிகாவின் வியர்வை மணமும், அவளது கைகளின் அழுக்கின் அழகும் கூடுதலாகச் சேர்ந்து பிரகாசித்தன. உலகின்

தலைசிறந்த டிசைனர் புராடக்ட்ஸ் என்கிற பட்டியலில் நீலாங்கரையில் குப்பைகளைச் சுத்தம் செய்பவளது கலை நேர்த்தியான கொலுசுகள் இடம்பெறாது போகலாம். ஆனால் எனக்கென்று நான் சேர்த்து வைத்திருக்கின்ற பொக்கிஷங்களில் இந்தக் கொலுசுகள் வயோதிகத்தின் சுருக்கம் படாமல் அப்படியே இருக்கும்"[23] என்ற அளவில் பெண்களின் கைத்திறன் சிறப்பித்துக் காட்டும் பகுதியாக இப்பகுதி அமைகின்றது. கைத்திறனும், படைப்பாற்றலும் கற்காத பெண்களிடத்திலும் காணப்படுகிறது என்பதற்கு ராதிகாவும் ராதிகா பற்றி எழுதிய கட்டுரையும் சான்றாகின்றது.

**<u>கைப்பையில் நிரம்பிய அன்பு</u>**

கைப்பை என்பது பெண்ணுக்குரிய பொருள்களில் ஒன்று. முன்னரே கைப்பை என்பது கவிதைப் பகுதியில் பெண்ணின் சேமிப்புக் களமாகக் கொள்ளப்பட்டு தமிழச்சி தங்கபாண்டியனால் கவிதை எழுதப்பெற்றுள்ளது. இத்தலைப்பின்கீழ் நடிகை ரோகினி பற்றிய அறிமுகத்தைத் தருகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"தன் மகன் ரிஷிக்கு அம்மாவாகவும், அப்பாவாகவும் அவள் இருக்கிறாள். சிங்கிள் பேரண்ட் (Single Parent) எனும் வலி மிகுந்த சுமையை அவள் எவ்வித புகார்களுமற்று ஏற்றுக்கொண்டவள். கணவனைப் பிரிந்திருந்தபோது, ரிஷியின் தந்தைக்கான இடத்தை வலிந்து தான் ஏற்றுக்கொண்டு செயல்படுத்த அவள் முனைந்தது இல்லை. ரிஷியும் அவனது தந்தையுமே அதை நிரப்பிக் கொள்ளும் அளவுக்கான தைரியத்தை அவளுடைய தாய்மை கொடுத்திருந்தது"[24]என்ற பகுதியில் நடிகை ரோகினியின் தற்கால வாழ்வில் அவர் தன் மகனுடன் தனித்து வாழும் நிலையில் தாங்கிக்கொள்ளவேண்டிய துன்பங்களை மெல்ல எடுத்துக் காட்டியுள்ளார். பெண் எழுத்து என்பது பெண்ணுக்கான துன்பத்தைப் பகிர்ந்து கொள்ளும் இயல்பான எழுத்தாக விளங்குகிறது என்பதற்கு இக்கட்டுரை சான்று.

**பச்சையம் சுமக்கும் பட்டாம்பூச்சி**

கவிஞர் இளம்பிறையைப் பற்றிய கட்டுரைக்குப் பச்சையம் சுமக்கும் பட்டாம் பூச்சி என்று தலைப்பிட்டுள்ளார். சுமத்தல் என்பதே பெண்ணுக்கான வினை என்பதால் இக்கட்டுரையிலும் பெண்மனம் காணத்தக்கதாக உள்ளது.

இருபெண்கள் சந்திக்கும்போது ஏற்படும் மகிழ்ச்சியைத் தமிழச்சி தங்கபாண்டியனின் உரைநடை அழகாகக் காட்டுகிறது. " ஆதி மனுஷிகளாக, வேஷங்களற்று, நிர்பந்தமோ, எதிர்பார்ப்போ துளியும் இன்றி, அறிவின் போலி கிரீடமின்றிக் கதைகள் பரிமாறிக் கொண்டு இரண்டு பெண்கள் சிறுமிகளாகின்ற அந்த அதிசயம் நேற்றும் நான் இளம்பிறையைச் சந்தித்தபோது நடந்தது"[25] என்ற விவரிப்பில் பெண்கள் இருவர் சந்திப்பு என்பது இயல்பானது என்பதையும், பாசாங்கு அற்றது, எதிர்பார்ப்பு இல்லாதது என்பதையும் உணர்ந்து கொள்ளமுடிகின்றது. மேலும் ஆதி மனுஷிகள் இருவர் சந்தித்துக்கொள்கிற நிலை என்ற சொற்றொடர்களில் பெண்களின் பழமை சார்ந்த மரபுத் தொடர்பு அமைந்திருப்பதை உணர்ந்து கொள்ள முடிகின்றது.

கவிஞர் இளம்பிறை சந்தித்த தடைகளையும் அவர் இக்கட்டுரையில் பதிவுசெய்துள்ளார். "தன் பால்யம் தந்த தடைகளை, தளராத மன உறுதியோடு எதிர்த்து நின்று, ஒரு படைப்பாளியாக பொறுப்புள்ள ஆசிரியையாக மிளிர்பவர். மிகப்பெரிதான பின்புலம் எதுவுமின்றி தனியொரு பெண்ணாக சமூகம் தந்த சவால்களை எதிர் நீச்சலிட்டு வென்றவர். தம் மண்ணையும் அதன் மொழியையும் மறக்காதவர். கோஷமற்று வேஷமற்று இசங்களற்றுக் கவிதை புனையும் தன் கிராமத்து வயல் வரப்பின் பச்சையம் சுமக்கின்ற பட்டாம்பூச்சி. ஒரு பெண்ணாகத் தன் இருப்பு குறித்தும் நிலை குறித்தும் தீராத கேள்விகளோடும் திடமான பதில்களோடும் இயங்குபவர்"[26] என்ற இச்சொற்றொடர்கள் கவிஞர் இளம்பிறையின் பெண்ணியத் தன்மையினை எடுத்தியம்புவதாக உள்ளது.

<u>சேவகி அல்ல சிநேகிதி</u>

மயிலிறகு மனசு என்ற தொகுப்பின் உள்ளுறையாக அமைந்துள்ள கட்டுரைகள் அனைத்தும் பெண்தன்மை, பெண் மொழி அடையாளம் சார்ந்த தலைப்புகளைப் பெற்றுள்ளன. இதற்கு மற்றுமொரு சான்று பாண்டியம்மா என்பவரைப் பற்றி எழுதப்பெற்ற கட்டுரைக்குத் தலைப்பு "சேவகி அல்ல சிநேகிதி" என்பதாகும். இதில் உள்ள சேவகி, சிநேகிதி ஆகியன பெண் மொழிசார்ந்த சொல் ஆளுமைகளாகும்.

பாண்டியம்மா துப்புரவுப் பணி பார்க்கும் பெண் ஆவார். இவரின் அம்மா வள்ளி, அப்பா பெரியகருப்பன், கணவர் கருப்பையா அனைவரும் துப்புரவுப் பணியாளர்களாகவே வாழ்ந்தவர்கள். பாண்டியம்மாவின் இயல்பினை "இன்று வரை கருப்பையா எனும் தன் கணவன் பெயரை அவள் சொன்னதில்லை. சிறு வெட்கமுடன் அது என அவள் தன் கணவரைச் சுட்டும் அழகுக்கு நான் அடிமை"[27] என்ற விவரிப்பில் பாண்டியம்மாவின் பண்பாட்டு அழகு தெரியவருகிறது.

<u>தாய்மைக் கனவுகளைப் பூர்த்தி செய்பவள்</u>

தமிழச்சி தங்கபாண்டியனுடன் உடன் படித்த ஜெயராணி என்பவர் தற்போது மருத்துவராகி பெண்களின் தாய்மைப் பேறு மருத்துவத்தைச் சிறந்த முறையில் செய்து வருகிறார். அவரைப்பற்றிய அறிமுகமாக தாய்மைக் கனவுகளைப் பூர்த்தி செய்பவள் என்ற கட்டுரை அமைகிறது.

'வாதாங் கொட்டைகள் பொறுக்க அதிகாலையில் சேர்ந்து சென்றதையும் ஒரு விடுமுறையில் பதினைந்து நாட்கள் நான்மட்டும் ஊர் சென்றுவிட, திரும்பும் வரை தனிமையில் இருந்த ஜெயா, நான் விடுதி வந்தவுடன் என்னைக் கட்டிப்பிடித்து அழுத அழுகையும், எங்களின் இன்னொரு தோழி துர்கா, அப்போது வியப்பாக எங்களைப் பார்த்துக்கொண்டு இருந்ததையும் அசைபோட்ட

அந்த மதியத்தில் அவளது ஸ்டெத்தஸ்கோப்பும் எனது பேனாவும் இல்லாத உலகத்தில் இருந்தோம்"[28] என்ற தொடர்களில் இளமை காலச் சிநேகிதமும், தற்போது அவரவர்க்கு உள்ள வேலைப்பளுவும் ஒன்றாகக் காட்டப்பெற்றுள்ளது. இங்கு மருத்துவரின் உபகரணமும், கவிஞரின் எழுதுகோலும் ஒன்று படுத்திக் காட்டப்பெற்றுள்ளன. பெண்களின் உயர்வைக் காட்டும் முன்னேற்றத் தொடராக இத்தொடர் அமைகின்றது.

<u>அன்பின் பால்வீதியில் தனித்தொரு துருவ நட்சத்திரம்</u>

பேராசிரியர் சுகுமாறன் என்பவரின் மனைவியாக விளங்கும் லலிதா என்பவருடன் தனக்குள்ளான தோழமையை இத்தலைப்பிலான கட்டுரை எடுத்துரைக்கிறது. லலிதா என்பவர் லலிதா ஜுவல்லரி என்ற நிறுவனத்தின் உரிமையாளர் மகள் என்ற நிலையில் வைத்துப் பார்த்தால் அவரின் செல்வ உயரம் தெரியும். ஆனால் அதனை வெளிக்காட்டாத பாங்கு என்பது அவருக்கு உரிய பண்பு என்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"செல்வந்தக் குடும்பத்தில் பிறந்த லலிதா ஒரு போதும் மிகையாகத் தன்னை அதன்வழி வெளிப்படுத்திக்கொண்டதே இல்லை. 'லலிதா ஜுவல்லரியின் உரிமையாளர் என் தந்தை எனும் தன் முனைப்போ, கர்வமோ சிறிதும் இல்லாதவர்"[29] என்ற இந்த சொற்கோர்வையில் பெண்கள் இயல்பான குணமுடையவர்கள் என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது,

'தனக்கான விழுமியங்களுடன் உறுதியான நெறிமுறைகளுடன் அசாத்தியமான நம்பிக்கையுடன் இந்தக் கணம்வரை வாழ்வின் மீது பெருங்காதலுடன் இருக்கின்ற லலிதாவின் உலகம், குடும்பம், நட்பு, ரசனை, சேவை எனும் துளைகள் அடங்கிய சிறுமூங்கில்தான். ஆனால் அது என்னிடம் பகிர்ந்து கொண்ட இசையோ எனது சுத்தைப் பெருக்கியும், துக்கத்தைக் குறைத்தும் இன்று வரை உடன் வருகின்ற பெருவனத்துப் புல்லாங்குழல்"[30]

என்ற நிலையில் இயல்பான பெண்மணியின் உன்னதமான குணங்களை அறிந்து கொள்ளமுடிகின்றது,

**<u>சூரியனின் மஞ்சள் ஒளியில் ஒரு நிழல்</u>**

நிழல் என்ற குறிப்பும் தளர்ந்து வந்தவர்களைத் தாங்கும் தன்மையால், தன் தண்மை எனும் குளிர்ச்சியால் பெண்தன்மை வாய்ந்ததாக உள்ளது. இக்கட்டுரையில் வழக்கறிஞர் அருள்மொழி அவர்கள் பற்றிய அறிமுகம் அமைகிறது. தமிழ்ப் புலவர் அண்ணாமலையின் புதல்வியாக விளங்கும் அவர், திராவிடர் கழகத்தின் பிரச்சாரச் செயலராகவும் உள்ளார்.

“கடைசியாக அம்மா இறந்த அன்றுதான் மொட்டைமாடிக்கு வந்ததாகச் சொன்னார். எத்தனையோ பெண்களின் கண்ணீரை வழக்குரைத்துத் துடைக்கின்ற தாயுமானவளான இவர், இன்னமும் கூடத் தன் தாயின் கதகதப்பைத் தேடுகின்ற சிறு குழந்தைதான் என்றெண்ணியபடி வானத்தைப் பார்த்தேன்”[31] என்ற தொடர்கள் பெண்களின் தாயன்பினைக் காட்டும் தொடர்களாக விளங்குகின்றன. பெண் என்பவளுக்குள் உறைந்து கிடக்கும் தாயன்பு என்ற தொடர் சிந்தனை என்றும் தொடர்ந்து கொண்டிருக்கும் என்பதன் அடையாளமாக இப்பகுதி அமைகின்றது.

**<u>கூடுதலாக இனிக்கும் ஆப்பிள் துண்டு</u>**

சமூக அறிவியல் துறையில் பேராசிரியரான சரசுவதி அவர்களைப் பற்றிய அறிமுகக் கட்டுரை கூடுதலாக இனிக்கும் ஆப்பிள் துண்டு என்ற தலைப்பினில் எழுதப்பெற்றுள்ளது. ‘ஒரு கட்டுப்பாடான கிராமியச் சூழலில் பிறந்து தன் தாயின் நிலை கண்டு, துக்கித்துத் துவங்கிய சிறு பொறி, இன்று சமூகத்தில் எங்கெல்லாம் பெண்கள் ஒடுக்கப்படுகின்றார்களோ அங்கெல்லாம் சென்று பற்றி எரியும் தீப்பந்தாமயிருக்கின்ற வளர்ச்சி என்னைப் பிரமிக்கச்

செய்தது"[32] என்ற நிலையில் இவரின் பெண் சமுதாயச் சேவை காட்டப்பெற்றுள்ளது.

**சுழலைப் பகிர்ந்தபடி ஓடும் பெருநதி**

தன் தாய் ராஜாமணி பற்றிய கட்டுரைக்குச் சுழலைப் பகிர்ந்தபடி ஓடும் பெருநதி என்று பெயர் தந்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். "வைணவக் குடும்பத்தில் பிறந்து, மன உறுதியுடன் எதிர்ப்புகளுக்கு நடுவே அப்பாவைக் கலப்புத் திருமணம் செய்துகொண்ட போதிருந்த அவளது உறுதியினை "மிசா"வின்போது அப்பா சிறையிலிருந்த ஒன்றரை வருடங்களிலும் நான் பார்த்துள்ளேன். தன்னந்தனியளாய் இரண்டு சிறு குழந்தைகளுடன் வாழ்வை நேர்கொண்ட அவளது தன்மானமும், திடமுமே அப்பா திடீரென மறைந்தபோதும் எங்களை வழிநடத்தியது"[33] என்ற குறிப்பு தன் தாயார் எதிர்கொண்ட போராட்டங்களை ஒரு மகள் பதியவைக்கும் தன்மையில் வலியுடன் அமைந்துள்ளது.

**அறிவின் மகரந்தம் சுமக்கும் பட்டாம்பூச்சி**

இவற்றுள் மகரந்தம், பட்டாம் பூச்சி ஆகியன பெண்மொழி சார்ந்த மொழி ஆளுமை என்றே கொள்ளப்படத்தக்கனவாகும். சென்னை எத்திராஜ் மகளிர் கல்லூரியில் ஆங்கிலத் துறைப் பேராசிரியராகத் தமிழச்சி தங்கபாண்டியனுக்கு வழிகாட்டியாக விளங்கியவர் பேராசிரியை நிர்மலா ஆவார். 'வாழ்வின் நீரோட்டத்தை நாம் காண்கிற பலதரப்பட்ட மனிதர்களில் சிலரது சந்திப்பே, செழுத்துக் கிளைக்கின்ற உறவாய்த் தொடரும். அப்படிக் கிடைத்த கொழுமரம் அவர் எனக்கு. ஒரு மழைக் காலத்தில் அவரது வழிகாட்டுதலின் கீழ் ஆராய்ச்சி மாணவியாகச் சேர்ந்தபோது, புரிதலும் அன்பும், தோழமையும் காத்திருந்தன. கற்பித்துக்கொண்டே கற்றுக் கொள்ளுதலில் இருக்கின்ற ஆனந்தத்தை என்னை முழுமையாக உணரச் செய்தவர் அவர்"[34] என்ற உரைநடைப்பகுதி பெண்

ஆசிரியர் ஒருவரின் தோழமையைக் காட்டுவதாக உள்ளது. ஆராய்ச்சியாளரும் பெண், நெறியாளரும் பெண் என்ற அடிப்படையில் எழும் பெண் கல்வி உலகம் வரவேற்கத் தக்கது என்பதற்கு இந்த ஆசிரியை மாணவி உறவு முறை சிறப்பாகும்.

**<u>பூக்களிடத்தில் கடன் பெற்றவள்</u>**

பூக்களிடத்தில் கடன் பெற்றவள் என்ற தலைப்பின்கீழ், பூக்களைத் தொடுத்து விற்றுவரும் கோவிந்தம்மா பற்றிய கட்டுரை அமைகின்றது. இவ்வம்மாளின் தினசரி வாழ்க்கைமுறையைப் பின்வரும் பகுதி அறிவிக்கின்றது. “தினமும் மதியம் பன்னிரண்டு மணிக்குப் பாரிமுனை வரை சென்று, இரண்டு பெரிய பைகளில் உதிரிப்பூக்களை அடைத்துக்கொண்டு, ‘பி.பி 19’ பேருந்தில் வெட்டுவாங்கேணிக்கு இரண்டு மணிக்குத் திரும்புகின்ற கோவிந்தம்மாளின் தினசரி வேலை, மதியத்தில் மூன்று மணிநேரம் பூ கட்டுதல், பின் மாலை ஐந்து மணி முதல் இரவு ஏழு மணி வரை வீடுகளுக்குப் பூ கொடுத்தல் என்று நீள்கிறது. எல்லாவற்றையும் இயல்பான ஓர் ஏற்றுக்கொள்ளலுடன் சொல்லும் அவள், ‘வார இறுதிகளில் துணி துவைப்பதற்கே சரியாக இருக்கும்’ என்று சொல்கையில் , அதில் சலிப்போ, வெறுமையோ சற்றுமிருக்காது”[35] என்ற பகிர்வில், பெண்களுக்கு அடுத்து அடுத்துப் பணிகள் காத்திருப்பதை அறியமுடிகின்றது. கோவிந்தம்மாவின் அடுக்கடுக்கான பணிகளைச் சொல்லி ஏழ்மையிலும் உழைப்பினால் உயரத்துடிக்கும் பெண் உள்ளத்தைத் தன் எழுத்துகள் வழியாக பெண்ணுலகிற்குக் காட்டுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இதன் காரணமாகப் பெண்கள் உழைத்து முன்னேறும் எண்ணம் வலிமை பெறச் செய்யப்படுகிறது.

**<u>அடுக்குமல்லிப் பூ அவள்</u>**

அடுக்கு மல்லிப் பூ அவள் என்ற தலைப்பின் கீழ் சரயு என்ற தன் பெண்ணின் அறிமுகத்தைச் செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். “உலகின்

மிக அற்புதமான அந்தச் சொல்லை அவள் எனக்குப் பரிசளித்த அந்த நாள் நவம்பர் 23. ஒரு முன் மாலைப் பொழுதில் மொட்டவிழாத பூவென அவளைக் கைகளில் ஏந்தியபோது, என் அப்பாவும் அருகிருந்தார். பஞ்சுப்பொதி மேகமொன்று கண் விழிப்பது போல, அவள் இமைசுருக்கி விரித்தபோது, ஆகாயம் முழுவதும் ஆயிரம் அம்மாக்கள் நட்சத்திரங்களாக என் பிம்பத்தில் தெறித்து ஒளிர்ந்தார்கள். அவளது 'ங்கா' என்றொரு முனகலில் எடையற்றவளாகி, லட்சம் சிறகுகள் முளைக்க, அம்மாவான நான், அந்தக் கணத்திலிருந்து என் அம்மாவை இன்னும் அதிகமாக நேசிக்கத் துவங்கினேன்"[36] என்ற தொடர்கள் வழியாக தாயன்பின் நேசத்தை அறிந்துகொள்ளமுடிகின்றது. குழந்தையைப் பிரசவித்த தாய் அதனைத் தன் படைப்பிலும் பெயர்த்து எடுத்துத் தந்த மொழிகள் மேற்கண்ட தொடர்கள் ஆகும். அம்மா என்ற சொல்லாடல் ஆயிரம், லட்சம் என்பதில் பல்கிப் பெருகிப் பின் தன் அம்மா என்ற ஒரு சொல்லில் அடங்கி நிற்கின்ற அனுபவ வெளிப்பாடு பெண் எழுத்து வெளிப்பாடாகும்.

மேலும் தன் மகள் விபத்தில் சிக்கிய நேரத்தில் அதனைப் பின்வருமாறு தமிழச்சி தங்கபாண்டியன் விவரிக்கிறார். "மிகப் பெரிய விபத்தொன்றை 2007 ம் ஆண்டு அவள் சந்தித்தபோது, நான் ஒரு நாடக ஒத்திகைக்கு ஆயத்தமாகிக் கொண்டு இருந்தேன். நகரத்தின் புகழ்பெற்ற 'தீம் பார்க்' ஒன்றுக்குத் தோழிகளுடன் சுற்றுலா சென்றிருந்தவள், 'ரோலர் கோஸ்டர் ரைட்' எனும் ராட்சத ராட்டினத்திலிருந்த நான், அறுவை சிகிச்சையைத் தவிர்க்க வேண்டுமென்றால், மூன்று மாதங்கள் படுக்கையில் அவள் இருக்க வேண்டும் என்றவுடன் உடைந்துபோனேன். வலி மறைத்த புன்னகையுடன் என்னைத் தேற்றிய முதல் வார்த்தை அவளுடைய 'கூல்மா' என்பதுதான்."[37] என்ற நிலையில் தமிழச்சி தங்கபாண்டியன் என்ற தாயின் தவிப்பு தெரியவருகிறது. அதே நேரத்தில் தாய் அழுவதைக் கண்டு மகளான பெண் அவளைத் தேற்றும் பெண் உள்ளங்களின் இணைப்பும் பெண்மொழியின் வழியாக வெளிப்பட்டுள்ளது.

“தளராத தன்னம்பிக்கையுடன், அந்தக் கொடூர விபத்திலிருந்து மீண்டு வந்தாள். மிக இளவயதில் அவளுக்கிருந்த திடம் எனக்கொரு பாடம். தீவிர சிகிச்சைப் பிரிவில் அவள் அனுமதிக்கப்பட்டிருந்த நிலையில், ஆஸ்திரேலியத் தூதரகம் உயரிய விருதொன்றை அளித்து நான் உள்ளிட்ட சில ஆராய்ச்சியாளர்களைக் கௌரவித்தது. தயங்கியபோதும் என்னை உற்சாகப்படுத்தி, டெல்லி சென்று அவ்விழாவில் கலந்துகொண்டேயாக வேண்டும் என பிடிவாதித்து, வெற்றி பெற்ற அவளின் மன உறுதி என் வரம்”[38] என்ற பகுதி தாய் பெறும் மதிப்பை மகள் பெறச் செய்த உதவியாக அமைகின்றது.

இவ்வாறு தாயன்பு என்பது பெண்ணைத்தவிர ஆண் யாரும் அறியமுடியாத ஒன்று என்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது,

**அறிவிக்கப்படாத மெய்க்காப்பாளி**

“அந்தக் கல்லூரியில் எனக்கு அறிவிக்கப்படாத மெய்க்காப்பாளி அவள்தான். அவளது கண்ணசைவின் ஒப்புதலின்றிக் கல்லூரி மகளிர் விடுதியில் மாணவர்களை நான் சந்திக்க முடியாது. விடுதியிருந்து கல்லூரிக்கு தெப்பக்குளத்தைச் சுற்றி நடந்து செல்கின்ற அந்த ஐந்து நிமிடங்களும் நிழல் போலவே தொடர்ந்து வருவாள். வெளிப்படையான அறிவுரைகள் அதிகமின்றி, முகத்தில் ஒரு தீவிரமுடன் ‘இது சரியில்ல’ என்று இரண்டொரு வார்த்தைகளில் தவறுகளைச் சுட்டும்போது, அவள் தாயுமானவள்” என்று தன் தோழி மலர்மாலா பற்றிக் குறிப்பிடுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

தற்போது பெங்களூருவில் வசித்து வரும் மலர்மாலா, கல்லூரிக்காலத் தோழியாகத் தமிழச்சி தங்கபாண்டியனுக்கு விளங்கியவள். அவளின் அரவணைப்பில் பாதுகாப்பில் வளர்ந்த பெண்ணாக தமிழச்சி தங்கபாண்டியன் திகழ்ந்துள்ளார். சகோதரித்துவ மனப்பாங்கு இங்கு இவ்விருவரையும் ஒன்றிணைத்துள்ளது என்பது கருதத்தக்கது.

இவ்வாறு பெண் எழுத்தாளர், பெண்களைப் பற்றிய கட்டுரை, பெண் வாசகர்களுக்கான இதழ் என்ற அமைப்பில் முழுக்க பெண் நலம் பேசும் கட்டுரைத்தொகுப்பாக “மயிலிறகு மனசு” அமைகின்றது.

**மண்வாசம்**

இதனுள் இரு பகுதிகள் விளங்குகின்றன. ஒரு பகுதி மண்ணும் மருத்துவமும் என்பதாகும். மற்றொரு பகுதி மண்ணும் மனசும் என்பதாகும். இவ்விரு பகுதிகளிலும் பெண்கள் பற்றிய பல பதிவுகள் அமைந்துள்ளன.

**மண்ணும் மருத்துவமும்**

அன்றாட வாழ்வில் பெண்கள் பயன்படுத்துகின்ற கீரைவகைகள். காய்கறி வகைகள். கிழங்குவகைகள், பழவகைகள், அஞ்சறைப்பெட்டிச் சாமான்கள், பல்வேறு வகையான மரங்களின் இலைகள், மண்வகைகள் போன்றவற்றில் உள்ள மருத்துவக்குணங்களையும், அவற்றைப் பயன்படுத்தும் முறைகள் பற்றியும் இப்பகுதியில் தமிழச்சி தங்கபாண்டியன் குறித்துள்ளார்.

இருவகையான மருத்துவக் குறிப்புகள் இவரால் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை

1. உடல் - உள்ளுறுப்புநலம்
2. உடல் - வெளியுறுப்புநலம் (புறநலம்)

என்று இருவகைப்படும்.

**உடல் - உள்ளுறுப்பு நலம்**

இதயம், நுரையீரல், கல்லீரல், கணையம் சிறுங்குடல். பெருங்குடல் போன்ற உள்ளுறுப்புகளைப் பாதுகாக்கும் வகையில் கூறப்பெற்றுள்ள செய்திகள் பின்வருமாறு.

**மிளகு, திப்பிலி, கருப்பட்டி (கற்கலாம் கை வைத்தியம்)**

குழந்தைகளின் அஜீரணச் சிக்கலைத் தீர்க்க பெரியக்கா பாட்டி ஒரு பொடி தருகிறாள். அப்பொடியில் மிளகு, திப்பிலி, கருப்பட்டி ஆகியன கலந்து இருக்கின்றன. இதனைக் குழந்தைகளுக்குத்தர அக்குழந்தைகளின் அஜீரணச் சிக்கல் தீர்ந்து போகிறது. வயிறு என்னும் உள்ளுறுப்பு சரிவர இயங்க இந்த கிராமத்து மருந்து உதவுகிறது.

**பெயரில் குப்பை, நலனில் கோபுரம்**

குப்பைக் கீரை அல்லது முள்ளிக் கீரையின் மருத்துவத் தன்மையை இக்கட்டுரை காட்டுகின்றது. கெம்பம்மா என்பவர் கரிசல் பகுதியில் சிறந்த நாட்டுவைத்திய மருத்துவச்சி ஆவார். அவர் பல நோய்களுக்கு மருந்து சொல்பவர். குப்பைக் கீரையை உணவில் சேர்த்துக் கொண்டால் தங்கம் போன்ற உலோகங்களைக் கூட அது பொடியாக்கிவிடும் என்று அப்பெண்மணி குறிப்பிடுகிறார்.

மேலும் உப்புசம் போகப் பல மருந்துகள் இக்கட்டுரையில் சொல்லப்பட்டுள்ளன. சீரகத்தை மை போல அரைத்து, அதனுடன் எலுமிச்சம் பழச் சாறைப் பிழிஞ்சி தண்ணீர் பெருக்கி உண்டால் உப்புசம் போகும் என்று ஒரு வழி சொல்லப்படுகிறது. இஞ்சி, கொத்தமல்லி, எலுமிச்சம்பழச் சாறு சேர்த்து உண்ண உப்புசம் போகும் என்று மற்றொரு குறிப்பு தரப்படுகிறது.

**அஞ்சறைப் பெட்டி ஆஸ்பத்திரி**

அடிக்கடி ஏற்படும் சளி தொந்தரவுக்கு சுக்கு, மிளகு, சித்தரத்தை, இஞ்சி, திப்பிலி ஐந்தும் இணைந்து உண்டால் சரியாகிவிடும் என்று ஒரு கிராமத்து மருந்தைச் சொல்கிறாள் ராசாக்காள். மேலும் கற்பூரவல்லி இலை, துளசி போன்றவற்றைத் தனியாக உண்டாலும், அல்லது காய்ச்சி உண்டாலும் சளி வராது என்றும் ராசாக்காள் குறிப்பிட்டாள். இன்னமும் சளி இருந்தால்

நொச்சியை எடுத்து ஆவி பிடிக்கணும் என்று சளி தொந்தரவு குறைய வழி சொல்கிறாள் இப்பாட்டி.

**நீராகாரம்**

வாதம் பிடிவாதம் என்ற தலைப்பிட்ட கட்டுரையில் நீராகரத்தின் பயன் தரப்பெற்றுள்ளது. வயிற்றுப் புண், தொண்டை எரிச்சல், மலச்சிக்கல் போன்றனவற்றைப் போக்குவது நீராகராம் என்பது அக்குறிப்பு ஆகும். ஆற்று நீர் வாதம் நீக்கும். அருவி நீர் பித்தம் போக்கும். உணவு நீர் (நீராகாரம்) வாதம், பித்தம் இரண்டிற்கும் மருந்து என்று இக்கட்டுரையில் சுட்டப்பெற்றுள்ளது. ஆத்துநீர் வாதம் போக்கும், அருவி நீர் பித்தம் போக்கும், சோத்து நீர் இரண்டையும் போக்கும் என்பது[39] கிராமத்துச் சொலவடையாகும்.

**இளநீரில் இருக்கிறது இதய ரகசியம்**

இளநீருடன் சீரகத்தைச் சேர்த்துச் சாப்பிட்டால் இதய ரத்த சுழற்சிக்கு நல்லது என்று ஒரு குறிப்பு இளநீரில் இருக்கிறது இதய ரகசியம் என்ற கட்டுரையில் காட்டப்பெற்றுள்ளது. இளநீருடன் மஞ்சள் கலந்து குடித்தால் இதய அடைப்பு நீங்கும் என்பதும் ஒரு மருந்தாகும்.

அகத்திக் கீரையை அவித்து உண்டால் இரத்தக் குழாயில் அடைப்பு இருக்காது என்ற குறிப்பும் இதனுள் உள்ளது. மேலும் பல குறிப்புகள் தரப்பெற்றுள்ளன. அவை பட்டியலாகப் பின்வருமாறு தரப்பெறுகிறது.

| **காய்கறி வகைகள்** | **தீரும் நோய்** |
|---|---|
| கருணைக்கிழங்கு | மூல நோய் நீங்கும் |
| முள்ளங்கி | சர்க்கரை நோயைக் குணப்படுத்தும் |
| காரட் | கண்பார்வை காப்பாற்றப்படும் |
| உருளைக் கிழங்கு | பலம் பெருகும் |
| அதிமதுரம் | கொழுப்பு குறைந்து இதயம் பலப்படும் |
| ஆவாரம்பூ | இதயத்திற்கு நலம் செய்யும்.[40] |

இக்கட்டுரையில் இதயம் நலம் பெற பல வழிகள் காட்டப்பெற்றுள்ளன.

கரிசல் காட்டு கைவைத்தியம் என்ற பகுதியில் பொன்போல் மேனி மின்ன பொன்னாங்கண்ணிச் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று குறிக்கப்படுகிறது.[41]

**வெந்தயக் கீரை**

வெந்தயக் கீரை ஜீரணத்திற்கு மிகவும் நல்லது. ஓமட்டல் நிற்க இந்தக் கீரையை முகர்ந்து பார்க்கவேண்டும். காசநோய்க்கும் மருந்தாக வெந்தயக் கீரை அமைகிறது.

**கழுதை முள்ளி**

கழுதை முள்ளி கற்பக விருட்சம் போன்றது. சர்க்கரை நோய் நீங்க இது நல்ல மருந்தாகும்.

**புறநலம் பற்றிய குறிப்புகள்**

**மஞ்சணத்தி மகிமை**

கால்வீக்கம் குணமாக மஞ்சத்தி மர இலைகள் மற்றும் உரித்த சின்ன வெங்காயம் இரண்டையும் சாதம் வடித்த கஞ்சியில் இட்டு வேக வைக்கவேண்டும். வெந்த நிலையில் அதனை ஒரு துணியில் கட்டி வீக்கம் உள்ள இடத்தில் ஒத்தடம் கொடுக்க வீக்கம் நீங்கும் என்று ஒரு மருத்துவக் குறிப்பினைத் தருகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். கரிசல் பகுதியில் விதையிடாமல் வளர்ந்து கிடக்கும் மஞ்சணத்தி மரங்கள் ஒன்றுக்கும் ஆகாது என்று ஒதுக்கப்படும் நிலையில் அவற்றின் இலைகள் மருத்துவ குணம் வாய்ந்தவை என்பதை இவரின் எழுத்து வெளிப்படுத்தி நிற்கிறது. இந்தக் குறிப்பைத் தந்தவர் வல்லார நெல்லி அம்மாள் ஆவார்.

**<u>வாதம், பிடிவாதம்</u>**

வாதம், பிடிவாதம் என்ற கட்டுரையில் இடுப்புப் பிடிப்பிற்கு ஒரு கிராமத்து மருத்துவம் தரப்பெற்றுள்ளது. மங்கை மாமி என்பவர் இந்த மருந்து பற்றிய செய்தியைத் தந்துள்ளார். வாத நாராயணன் மரத்து இலைகளை எண்ணெய் சட்டியில் போட்டு நல்ல வேப்ப எண்ணெய் விட்டு வதக்கி ஒரு துணியில் கட்டி பிடிப்பு உள்ள இடத்தில் ஒத்தடம் கொடுத்தால் வாதம் நீங்கும் என்று அவர் ஒரு குறிப்பினைத் தருகிறார்.

**<u>கரிசல் காட்டு கை வைத்தியம்</u>**

விரல் இடுக்குகளில் வரும் சிரங்குகளைப் போக்க உருளைக்கிழங்குத் தோலுடன், மஞ்சள் சேர்த்து அரைத்துத் தடவ அது நலம் தரும் என்ற குறிப்பு கரிசல்காட்டு கை வைத்தியம் என்ற கட்டுரையில் தரப்பெற்றுள்ளது. மேலும் மருதாணி இலையும் சிரங்கினைப் போக்கும் என்றும் காசினிக் கீரையை புழுங்கல் அரிசி கழுவின நீரில் கழுவி அதனுடன் புளி சேர்க்காமல் துவரம் பருப்பு சேர்த்து சமைத்துத் தந்தால் அரிப்பு நீங்கும் என்றும் ஒரு குறிப்பு தரப்பெற்றுள்ளது. இக்குறிப்புகள் முறையே சுப்பு, கோமதியக்கா போன்றோர் தந்த குறிப்புகள் ஆகும். மேலும் கொத்தமல்லி இலைகள், மிளகு, வெந்தயம் ஆகியன கலந்து விழுதாக அரைத்து அதனுடன் எலுமிச்சம்பழம் சேர்த்து சிரங்கில் தடவினால் இருக்கிற இடம் தெரியாமல் மறைந்துவிடும் என்கிறார் சுப்பு.

தலைமுடி நன்றாக அமையச் சில குறிப்புகளும் இக்கட்டுரையில் தரப்படுகிறது. தயிர், முட்டை, எலுமிச்சம்பழம் கலந்து தேய்ச்சுக் குளிக்க பொடுகு நீங்கும் என்ற குறிப்பும் இதனுள் உள்ளது.

வசம்பு (பெயர் சொல்லாதது) என்பதைக் கல்லில் உரசி தேங்காய் எண்ணெய் சேர்த்துத் தடவினால் சிரங்கு வராது என்பதும் ஒரு குறிப்பாகும். குப்பை மேனிக் கீரையுடன் உப்பு கலந்து அரைச்சு சிரங்குக்குப் பூசினால்

நன்மை ஏற்படும் என்று சிரங்கு குணமாக பல மருத்துவக் குறிப்புகள் தரப்பெறுகின்றன.

**<u>அழகுக்கு ஆற்றுமண், அக்கிக்குச் செம்மண்</u>**

தாயம்மாள் என்பவர் அக்கி என்ற நோய்க்குச் செம்மண்ணில் எழுதி அதை நீக்கும் மருத்துவம் தெரிந்தவர் ஆவார். இவர் இதனை இவரின் தாத்தாவிடமிருந்துக் கற்றுக்கொண்டதாகக் குறிப்பிடுகிறார்.

அடிவயிற்றில் செம்மண் குழைத்து இட்டால் வெக்கை குறையும். கண்கட்டிக்குப் போடுகிற நாமக்கட்டியும் வெள்ளைமண்தான். ஆற்றுமண்ணைத் தேய்த்துக் குளித்தால் பளபளப்பு கிடைக்கும். வைத்தீஸ்வரன் கோயிலில் மண் உருண்டைதான் வைத்தியம் என்று மண்வாசம் பேசுகிறாள் தாயம்மாள்.

**<u>இடுப்புவலி நீங்க வெந்தயக் கீரை</u>**

வெந்தயக் கீரையுடன், நாட்டுக்கோழி முட்டை, தேயங்காய்ப்பால், பசுநெய் சேர்த்துச் சாப்பிட இடுப்புவலி நீங்கும் என்ற குறிப்பு[42] இக்கட்டுரையில் உள்ளது. மூக்கடைப்பு நீங்க இந்தக் கீரையுடன் அத்திப்பழம், திராட்சை ரசம் சேர்த்துத் தந்தால் நீங்கும். முட்டி வலி நீங்கவும் வெந்தயக் கீரை விழுது பயன்படுகிறது.

**<u>கறுப்பு அழகு</u>**

கறுப்பு அழகு என்ற கட்டுரையில் பல அழகுக் குறிப்புகள் தரப்பெறுகின்றன. தோல் வறட்சிக்கு வெள்ளரிச் சாறு அமிர்தம். சாறு பூசியபின் கடலைமாவு பூசி முகத்தைக் கழுவினால் முகம் பளபளப்பாகிவிடும். முட்டைக் கோசு அவித்த நீர், வேப்ப இலை வெந்நீர் போன்றவற்றாலும் முகம் கழுவினால் மிக நல்லது. வாழைப்பழம், பப்பாளிப் பழம் ஆகியன மையாகப் பிசைந்துத் தடவினால் அதுவும் முகத்திற்குப் பொலிவு தரும். வாழைத்தண்டினைப்

பாதியாப் பிளந்து முகப்பரு: உள்ள இடத்தில் தடவினால் பரு காணாமல் போய்விடும்.

இவ்வாறு பல்வேறு அழகுக்குறிப்புகளை மண்வாசம் கட்டுரைத் தொகுப்பு கொண்டுள்ளது.

**<u>மண்ணும் மனசும்</u>**

இதில் தான் பழகிய பல மனிதர்கள் பற்றிக் குறிப்பிடுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். கரிசல் மண்ணில் வாழும் மனிதர்களின் மனங்களை இவற்றின்வழி அறிந்து கொள்ளமுடிகின்றது.

**<u>விசுவாசம்</u>**

தமிழச்சி தங்கபாண்டியனின் வீட்டில் கணக்குப்பிள்ளையாக இருந்த, வேலன் மாமாவின் வாழ்வினை ஒட்டி எழுதப்பெற்ற கட்டுரை விசுவாசம் என்பதாகும். வேலன்மாமா என்று அன்பாக அழைக்கப்பெறும் அவரே தமிழச்சி தங்கபாண்டியனை மதுரைக்குக் கொண்டுவந்து விட்டுப்போவதை, திருப்பி அழைத்துப்போவதைப் பணியாகச் செய்தவர். அவரின் மனைவிக்காக அவர் தினம் மல்லிகைப்பூ வாங்கிப்போகும் வழக்கமுடையவர். அவர் முதுமையில் வயிறு வீங்கி நிற்கும் நிலையில் காதுகேட்காத அவரின் மனையாள் பொட்டு பூவுடன் அவருக்குத் துணையாக இருப்பதைக் கடமையாகச் செய்து வருகிறார். காதுகேட்காத மனைவி என்றபோதும் விட்டுக் கொடுக்காத வேலன் மாமாவின் வாழ்க்கை விசுவாசம் மிக்கது என்பதை இக்கட்டுரை பதிவு செய்துள்ளது.

**<u>மகனான காரோட்டி</u>**

ராஜபாளையத்தில் இருந்து தமிழச்சி தங்கபாண்டியன் வீட்டிற்கு மகிழ்வுந்து ஓட்டுநராக வந்து சேர்ந்தவர் மாரியப்பன். தமிழச்சி தங்க பாண்டியனின் அப்பா தங்கபாண்டியனின் சொந்த மகிழ்வுந்தான வெள்ளை அம்பாசிடாரின் ஓட்டுநராக விளங்கிய அவர் மகிழ்வுந்தில் இருக்கும்போது

பொறுப்பு மிக்கவராகவும், மற்றநேரங்களில் வேடிக்கை விநோதங்களின் இருப்பிடமாகவும் இருப்பவர். தங்க பாண்டியன் அரசுப் பணியில் இருந்தபோது அவரின் அரசாங்க வாகனத்தை ஓட்டாமல் ஒதுங்கியே இருந்தவர். தங்க பாண்டியன் இறந்தபோது அவரின் உடலுடன் மகனாக வந்தவர். அவ்விறப்புக்குப் பின் அந்த வெள்ளை அம்பாசிடாரைத் தான் வைத்துக்கொள்ளவேண்டும் என்று எண்ணிய நிலையில் சென்னைக்கு வந்து அதனை விட்டுச் சென்ற மாரியப்பன் மூன்று வருடங்களில் தூக்கத்தில் மாரடைப்பில் இறந்துபோனார் என்ற செய்தி மிகப்பெரும் வருத்தத்தைத் தமிழச்சி தங்கபாண்டியனுக்குத் தந்தது. மாரியப்பனின் மகளின் திருமணத்திற்குச் சென்று வாழ்த்திவிட்டு வந்தபோது அந்த ராஜபாளையம் தமிழச்சி தங்க பாண்டியனுக்கு வெறுமன தெரிந்தது.

மேற்குறிப்பிட்ட இரு கட்டுரைகளும் ஆண்மையம் சார்ந்தவை என்றாலும் அவற்றிலும் வேலன் மாமாவின் மனைவி, மாரியப்பனின் மகள் ஆகிய பெண்களின் நிலை எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. தமிழச்சி தங்கபாண்டியனின் பெண் மனம் இவற்றின் வழியாக வெளிப்பட்டு நிற்கிறது.

<u>**நிலவின் இரு பாதி**</u>

தங்கபாண்டினின் முதல் மனைவியின் மகளான பானுமதி பற்றிய விவரங்கள் அடங்கிய கட்டுரை நிலவின் இருபாதி என்ற கட்டுரையாகும். பானுமதி என்ற தமிழச்சி தங்கபாண்டியனின் அக்கா, குழந்தைகள் பெற்றெடுத்தது, அப்பாவின் இறப்பிற்கு வந்தது, இவரின் நடன நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டது, அப்பாவின் நினைவாக சொத்து எதுவும் வேண்டாம், ஒரு வேட்டி துண்டு போதும் எனச் சொன்னது, இவற்றையெல்லாம் கடந்து அவள் ஆஸ்துமாவினால் இறந்தபோது அவளுக்குச் சீர் செய்தது என எல்லா நிகழ்வுகளும் இக்கட்டுரைக்குள் வருகின்றன.

**கழுதை வாங்க கைநாட்டு போதாதா?**

கிராமத்தில் சலவைத் தொழிலாளியாக விளங்கும் குருவன் தங்கபாண்டியன் இருந்தபோதும் இறந்தபோதும் தொடர்ந்து தன் பணியை இவரின் குடும்பத்திற்காகச் செய்து வருகிறார். அவர் ஒரு முறை தங்கம் தென்னரசு என்ற தென்னரசுவின் மகன் படம் போட்ட உள்ளாடை (பனியன்) அணிந்து வர அது குறித்துத் தமிழச்சி கேட்க அப்பாவிற்குப் பின் தம்பிதான் எல்லாம் என்று சொன்ன பதில் அவரின் ஆறாத நம்பிக்கையைக் காட்டுவதாக இருந்தது. மேலும் அவர் இன்னமும் துணிகளைச் சுமக்கிறார் அந்தக் குடும்பத்திற்காக. உள்ளாடையில் எழுதப்பட்டதைப் படிக்கவும் கணக்குப் பார்க்கவும் தெரியாத அவருக்கு கைநாட்டு மட்டும்தான் தெரியும். கழுதை வாங்க கைநாட்டு போதாதா என்பது அவரின் வாசகம்.

**அப்பத்தாவின் சுருக்குப் பை**

சாயல்குடியை இருப்பிடமாகக்கொண்ட அப்பத்தா தனக்கென ஒரு வீடு சாயல்குடியில் வேண்டும் என்ற கனவில் இருந்தவள். தன் வாழ்வில்தன் மகன்களை இழந்தபோது அவர் பெரிதும் வருத்தப்பட்டுள்ளார். அவளின் இறப்பின்பொழுது அவளின் நினைவுகள் அலைமோதும் நிலையில் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது.

**வெதுவெதுப்பான கிடை ஆட்டுப்பால்**

ஆட்டுக் கிடை போடும் மலையாண்டி என்பவரைப் பற்றிய செய்திகளை உள்ளடக்கியதாக இக்கட்டுரை அமைகிறது. மலையாண்டி அண்ணன் என்ற முறையில் தமிழச்சி தங்கபாண்டியனுக்கு அமைகிறார். இவர் நிலம் வாங்கித் தருவதில் வல்லமை வாய்ந்தவர். ஒரு முறை சென்னைக்கு வந்து அந்த நகரத்து வாழ்க்கையை, நெருக்கடியை ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தார்.

இவரின் முதுமையில் இவருக்குச் சருமநோய் தோன்றி அவரை வதைத்தது. அவர் பற்றி எழுதிய கவிதையைத் தான் பார்த்துவிட வேண்டும் என்று அவர் எண்ணிய எண்ணம் நிறைவேறாமல் அவர் இறந்துபோனார். அவர் இறந்தபின் கவிதை வந்தென்ன என்ற எண்ணத்துடன் இந்தக் கட்டுரை முடிகிறது.

**எனது ஊர்ப்பெண்கள்**

இவரது கிராமத்துப் பெண்கள் பற்றிய கட்டுரையாக எனது ஊர்ப்பெண்கள் என்ற கட்டுரை அமைகின்றது. கச்சம்மா, பாக்கியம் இருவரும் தமிழச்சி தங்க பாண்டியனின் நெருங்கிய தோழிகள் ஆவர். பாக்கியம் தமிழச்சி தங்கபாண்டியனுக்காக நேரம் ஒதுக்கி, ஆறுதல் சொல்பவள் ஆவாள். அவள் இல்லாத கச்சம்மா ஒரு அடுக்குமல்லி உதிர்ந்து கிடப்பதைப் போல வாழ்கிறாள். இன்னமும் தொடர்கின்றன அவர்களைப் பற்றிய நினைவுகள்.

**தேவரம்மா பெருமாத்தம்மா**

தமிழச்சி தங்கபாண்டியனின் தோட்டத்தில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றிவருபவர்கள் தேவரய்யா, தேவரம்மா ஆகியோர் ஆவர். இவர்கள் இருவரும் இணைபிரியாதவர்கள். உழைப்பிலும், விருந்திலும் இணைபிரியாமல் இருப்பவர்கள். இருப்பினும் முதுமை அவளைத் தேவரய்யாவிடம் இருந்துப் பிரித்துவிட்டது. மாரடைப்பால் அவள் இறந்தபோது தினம் கூட்டிப் பெருக்கிச் சுத்தம் செய்யும் தோட்டம் அவள் வரவிற்காகக் காத்துக்கிடந்தது. பெருமாத்தம்மா என்று ஒருத்தி அவளைப் பெயரிட்டு அழைத்தபோதுதான் அவளின் இயற்பெயர் தெரிந்தது.

**அத்தையின் வாசம்**

தமிழச்சி தங்கபாண்டியனின் பால்ய காலத்தில் அவரைத் தூக்கி வளர்த்தவர் பத்மா அத்தை. அவர் ஆசிரியையாக இருந்து ஓய்வுபெற்றவர்.

இவரைக் கவனித்துக் கொண்டு அல்வா செய்து கொடுத்து தன் மகளாகப் பாவித்தவர். அம்மாவின் தோழியாய் விளங்கிய அவள் அப்பா தங்கபாண்டியன் மிசா காலத்தில் சிறையில் இருந்தபொழுது தமிழச்சி தங்கபாண்டியனின் தாய்க்கு உறுதுணையாக இருந்தவர்.

**<u>கல்லூரியும் நானும்</u>**

சென்னை, இராணி மேரி கல்லூரியில் பணிபுரிந்த காலத்தில் நாகலிங்க மரம் தோழியாக அமைந்த நிலையைக் காட்டுவது கல்லூரியும் நானும் என்னும் கட்டுரையாகும். கல்லூரியில் பணியாற்றிய காலத்தில் நாகலிங்க மரத்தை நாகு என்ற தன் தோழியாகவே இவர் கருதியுள்ளார். நாள்தோறும் அதனைப் பார்ப்பது, அதனிடம் தன் சுக துக்கங்களைப் பகிர்வது என்று கழிந்த அந்தப் பொழுதுகளை மீட்டெடுக்க மறுபடி ஒருமுறை இவர் அங்குச் சென்றார். அப்போதும் நாகு வரவேற்றது.

**<u>ஸ்ரீவர மங்கை</u>**

ஆழ்வார் திருநகரியில் இருந்து, மல்லாங்கிணறுக்குக் குடியேறியவர் ஸ்ரீவர மங்கை. இவரின் கணவர் தோத்தாத்திரி பள்ளி ஆசிரியராக இருந்தவர். இவர்களின்மகன் கண்ணன் தங்கபாண்டியனாருக்கு உகந்த சேவகன். தற்போது புத்திப் பேதலித்து வயதான அம்மாவின் கண்காணிப்பில் இருக்கிறார் என்பது துயரம். பட்சணங்கள், கதைகள், ஆண்டாள் பாடல்கள், பெரியகோலம், ஸ்லோகங்கள் என்று தமிழச்சி தங்கபாண்டியனின் இளமை வாழ்க்கையை நிரப்பியவர் ஸ்ரீவரமங்கை ஆவார். அவரின் இக்கால வாழ்க்கை காலம் கடத்தும் வாழ்க்கையாக உள்ளது.

**<u>மலையாண்டி அண்ணனும் லெட்சுமி கிழவியும்</u>**

மலையாண்டி அண்ணன் பற்றிய பல கட்டுரைகளில் எழுதியுள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இவர் சென்னை வந்த அனுபவம், கலங்கரை

விளக்கு பற்றிய அவரின் அதிசயம் ஆகியன இக்கட்டுரையிலும் இடம்பெறுகின்றன. மேலும் லெட்சுமிப் பாட்டி என்ற பாத்திரத்தையும் இக்கட்டுரையில் அறிமுகம் செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். சிங்கப்பூர் சென்ற கணவன் அங்கேயே ஒரு பெண்ணைப் பார்த்து மணந்து கொண்ட நிலையில் சற்று புத்தி பேதலித்த நிலையில், பத்து ரூபாய் சில மிட்டாய்கள் இவற்றுக்குள் அடங்கிவிடுகிறது அவளின் வாழ்க்கை.

**<u>கொப்புக்கார அம்மாவின் கோணவகிடு</u>**

பருத்திப்புடவை அணிந்து வேலைக்கு ஆள்களை அனுப்பும் பணி செய்து வந்தவள் கொப்புக்கார அம்மா. இவள் எப்போதும் கோண வகிடே எடுப்பவள். மற்ற புடவைகளை விட பருத்திப் புடவைதான் இனியது என்ற கருத்துடையவள். இவள் மடிநிறைய மருதாணி இலைகளுடன் வந்து சேர்ந்தாள். பால்யக் காலத்தில் தனக்குப் பிடித்தவற்றைச் செய்து தரும் பாக்கியம் இறந்தது தமிழச்சி தங்கபாண்டியனுக்கு வருத்தம் அளித்தது.

**<u>படிகளுடன் சில நொடிகள்</u>**

மதுரை சிம்மக்கல் மூளையில் பனங்கிழங்கு விற்கும் பெண்ணுடனான பேட்டியாக இக்கட்டுரை அமைகிறது. அவளுக்கு ஒரு மகன் பத்தாவது படிக்க, அதன்பின் படிக்காமல், வேலைக்குப் போகிறேன் என்று அவன் சொன்ன காரணத்தினால் எரிவாயு குழுமத்திற்கு அனுப்பிவைத்துள்ளாள். இருப்பினும் வெயிலில் உட்கார்ந்து அவள் பனம் கிழங்கு விற்பதும், பிய்ந்துபோன பணப்பை வைத்திருப்பதும், பிய்ந்துபோன செருப்பு வைத்திருப்பதும் அவளின் பொருளாதார நிலையைக் காட்டுவனவாக அமைந்துள்ளன. அவளைப் பற்றி மல்லாங் கிணறு வீட்டின் படிகளில் இருந்தபடி யோசிப்பதாக அமைகிறது இக்கட்டுரை.

**முட்டி முட்டி பால் அருந்தும் மழை**

மல்லாங்கிணறு கிராமத்திற்கு ஒருமுறை தமிழச்சி தங்கபாண்டியன் சென்றபோது, மாலை நேரத்து நடைபயணம் மேற்கொண்டார். அப்போது மழை வந்துவிட அதன் பொருட்டு அருகிருந்த முத்துராக்குவின் வீட்டுக்குள் நுழைகிறார். அங்கு முத்துராக்கு, அவரின் கணவர், மூன்று பூனைக்குட்டிகள் ஆகியன வாழ்கின்றன. மில்லுக்காரர் தோட்டமாக விளங்கும் அப்பகுதியில் கதவு இல்லாத வீட்டில், வறுமை தாண்டவமாடும் சூழலில் வாழ்கிறார்கள் அவர்கள். வெளியில் சமைத்து உள்ளுக்குள் வைத்துப் பாதுகாக்கும் முறைதான் அவர்களுக்கு. வெயில் காலம் என்றால் பரவாயில்லை. மழை வந்துவிட்டால் சிரமம்தான். தன்மகனைப் படிக்க வைக்க தன் அம்மா வீட்டிற்கு அனுப்பிவிட்ட முத்துராக்கு, இங்குத் தன் கணவனுடன் வாழ்ந்து வருகிறாள். துண்டு தந்து தலை துவட்ட வைத்த முத்துராக்கு சாப்பிடவும் உணவு தர அவர்களின் வாழ்வினை எண்ணி அங்கேயே நினைவில் ஆழ்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**மதியவிட இளநீதான் ஒசத்தி**

மற்றொரு முறை கண்மாய்க்கரையில் நடை மேற்கொண்டபோது கிழவி ஒருத்தியுடன் பேசிய பேச்சுகள் மதியவிட இளநீதான் ஒசத்தி என்ற கட்டுரையாகி உள்ளது. கண்மாய்க் கரையில் சந்தித்த ஒரு பெண்ணின் பெயர் இளமதி என்பதாகும். பலர் இவளின் பெயரைச் சரியாகச் சொல்லாமல் இளநீ என்று சொல்லி அழைக்கிறார்கள். மதிய விட இளநீயே ஒசத்தி என்ற நிலையில் அவளின் பெயர் நலமானதாக அமைகிறது.

வெயிலை எப்படித் தாங்குகிறீர்கள் என்ற கேள்வியை அந்தக் கிழவியிடம் கேட்டபோது அவள் அது பழகிவிட்டது என்கிறாள். ஒருகாலத்தில் கண்மை வாங்க இயலாமல் வீட்டில் வண்டி மைதடவிய நிலையில் இன்று

குடிநீரையே விலைக்கு வாங்க வேண்டிய நிலை வந்துவிட்டதை அந்தக்கிழவி எடுத்துரைத்தாள்.

<u>**வெயிலோவியம்**</u>

கண்மாய்க்கரையில் மீண்டும் ஒரு நடை மேற்கொண்டு வெயில் பற்றிய செய்திகளைத் தருகிறது வெயிலோவியம் என்ற இந்தக் கட்டுரை. ஒரு தாத்தா ஒருவர் கத்திரிச் செடிகளுக்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருக்க அவரிடம் அறிமுகமான தமிழச்சி தங்கபாண்டியன் அவரின் வாழ்க்கையைப் பற்றி வினவுகிறார். அவரின் சாயல் இவரின் தாத்தாவை ஞாபகப் படுத்துவதாக இருந்தது. அவருடன் கத்திரிச் செடிகளுக்கு நீர்ப்பாய்ச்ச சென்றபோது நெருஞ்சிப்பிள்ளைகள் (நெருஞ்சி முட்கள்) அதிகமாக இருக்கிறார்கள் பார்த்து வா என்று குறிப்பிட்டார். தாவரங்கள் அனைத்தையும் தன் பிள்ளைகளாகக் கருதும் அவரின் தன்மை தமிழச்சி தங்கபாண்டியனுக்கு வியப்பினைத்தந்தது.

இந்நேரத்தில் நேரம் அதிகமாகிவிட்டதே இன்னும் சுமதியைக் காணவில்லையே என்று தேடி ஒரு பெண்கள் கூட்டம் கத்திரிச் செடிகளுக்கு அருகில் வருகிறது. செவந்தி, ராமுவின் மகள், பெத்தம்மக்கா போன்றோர் சுமதியிடம் வந்து நாங்கள்தான் வெயிலில் அலைகிறோம். நீங்களும் ஏன் அலைகிறீர்கள் என்று கேட்டது. மேலும் சிவந்த தோல் படைத்த பெண்களின் ஆளுமை அதிகமாக இருக்கிறது என்றும் ஒரு பேச்சு எழுந்தது. இருப்பினும் அன்பிற்கும் நிறத்திற்கும் தொடர்பில்லை என்பதாக அந்தக் கட்டுரை முடிந்தது.

<u>**கரிசல் மண் கருணை மிக்கது**</u>

மற்றொரு நாளில் தன் கிராமத்துப் பெண்களைப் பார்த்த அனுபவத்தைக் கரிசல் மண் கருணை மிக்கது என்ற கட்டுரையாகத் தந்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். கத்திரிக்காய் விற்கும் கந்தனின் மனைவியின் ஆசைகள், கடமைகள் பற்றி முதலில் அறிந்து கொண்ட தமிழச்சி தங்கபாண்டியன் அடுத்து, தன்னுடன் படித்த கொட்டாப்புளியின் தங்கையான கெங்கம்மாவைச்

சந்திக்கிறார். அவள் கோயிலின் முகப்பில் கண்ணாடி வளையல் விற்கும் பெண்ணாக விளங்கினாள். அவளின் வரிசையில் கைப்பிள்ளைக்காரி ஒருத்தியும் வளையல்விற்றாள். அவளிடமும் வாங்கச் சொல்லி கங்கம்மா வற்புறுத்த அவளிடமும் வளையல் வாங்குகிறார் தமிழச்சி தங்கபாண்டியன். கரிசல் மண் கருணை மிக்கது என்பது இதன்வழி தெரிகிறது. இருந்தாலும் வளையல் விற்கும் யார் கரங்களிலும் வளையல் இல்லை என்பது இவருக்கு முரணாக விளங்கியது.

**<u>பூவும் பொட்டும்</u>**

வேலக்கா என்ற பூக்காரப் பெண்மணியுடன் நிகழ்ந்த உரையாடல் பூவும் பொட்டும் என்ற கட்டுரையாகி உள்ளது. வேலக்கா ஒரு பால் காய்ச்சும் வைபவத்திற்காக அயலூருக்கு நடந்து செல்லும் நிலையில் தமிழச்சி தங்காபண்டியனைச் சந்திக்கிறாள். பாலத்தின் கட்டையில் வேலக்கா, அவருடன் வந்த பெண், தமிழச்சி தங்கபாண்டியன் ஆகிய மூவரும் பேசி மகிழ்கின்றனர்.

பூவிற்கும் இந்த வேலக்கா தன் கணவன் சொன்ன ஒரு சொல்லுக்காக பூவே வாழ்நாளில் வைக்காமல் விற்றுவருகிறாள். கணவன் இல்லாத நாளில் பூவைத்து இருந்த நிலையில் நான் இல்லாத நாளிலும் பூ வைப்பாயா என்று கேட்ட கணவனின் சொற்களில் வேறு கருத்து இருப்பதை உணர்ந்த வேலக்கா அன்று முதல் பூ வைப்பதையே நிறுத்திவிட்டாள். இதுகுறித்து “பூவும் பொட்டும் நாம ரசிச்சு நமக்காக சந்தோஷமா வைச்சுக்கணும். செமதி புருஷன்காரனுக்கு அதுல ஆசை இருக்கணும். சரிதான். பட்டா போடற ஆக்கிரமிப்புத்தனம் ஆகாதுல்ல”[43] என்ற வேலக்காவின் பேச்சில் பெண்ணுக்கான விடுதலை உணர்வு தொக்கி நிற்பதைக் காணமுடிகின்றது.

**<u>பேனா பிடிக்க நினைக்கையிலே</u>**

லக்கம்மா என்ற பெண்ணின் அன்றாடப் பொழுது மாவு இடித்தலில் கழிகிறது. அவளின் வாழ்க்கையில் மாதத்திற்குப் பத்துநாள் என்ற மாதச்

சுழற்சியின் வலியில் கழிகிறது. இதன் காரணமாக அவளால் வேலைகளைப் பார்க்க முடிவதில்லை. தன்னை அவள் அலங்கரிக்க நினைத்தாலும், அவளால் இயலுவதில்லை. மாமியார், கணவன் எல்லோரும் அவளின் மேல் பூச்சு பற்றி இழிவாகப் பேச அவள் தன்னை அலங்கரிப்பதை நிறுத்திவிட்டு, தான் கொண்டு செல்லும் பித்தளை தூக்குச் சட்டியைப் பளபளப்பாக்கிக் கொண்டுபோகிறாள்.

இவ்வாறு பல பெண்களின் வாழ்வில் நடைபெறும் சோக அனுபவங்களைப் பதிவு செய்யும் நிலையில் மண்வாசகம் என்ற தொகுப்பின் பின்பகுதி அமைந்துள்ளது.

இந்தக் கட்டுரைகளின் மற்றொரு சிறப்பு எல்லாக் கட்டுரைகளும் நிலவு என முடிகின்றன. ‘கவலை குறைந்து என்னைத் தூங்கச் சொல்லியபடி மேலெழுந்த அன்றைய இரவின் வெண் நிலவில் மாமியின் திரட்டுப்பால் ருசி”[44], “என்முன்பாக அவள் உரித்துப் போட்ட சாக்லேட் காகிதம் நினைவுகளின் புரட்டலில் படபடத்தது ஓரங்கள் நைந்த நிலவென”[45] என்பன அவற்றில் சில சான்றுகள் ஆகும். எனவே திட்டமிடப்பட்ட நிலையில் இக்கட்டுரைகள் நிலவு என்ற நிலையில் முடிக்கப்பெற்றுள்ளன. பெரும்பாலும் நிலவு என்ற முடிவு பெண்களின் தன்மையை ஒத்து அமைகிறது. குளிர்ச்சியும் அழகும் நிரம்பிய முழு நிலவாக பெண்கள் இங்கு உருவகிக்கப்பட்டு அவர்களின் தன்மைகள் இங்கு வெளிப்படுத்தப்பெற்றுள்ளன.

மேற்காட்டிய மூன்று தொகுப்புகளும் தமிழச்சி தங்கபாண்டியனின் நேரடி செயல் அனுபவம் தந்த எழுத்துரைகளாகும். இவற்றின்வழி பெண்கள் படும் துன்பங்கள், அவர்களின் ஆசைகள், அவர்களின் மனதில் தோன்றும் உரிமைகள் போன்றவற்றை அறிந்து கொள்ளமுடிகின்றது. பெண்களின் வலிகளைப் பெண்ணே சொல்லும் நிலையில் இந்தக் கட்டுரைகள் முக்கியத்துவம் பெறுகின்றன.

**விமர்சனநோக்குடைய உரைநடைப் படைப்பு**

கவிஞராகவும், கட்டுரையாசிரியராகவும் விளங்கும் தமிழச்சி தங்கபாண்டியன், தேர்ந்த விமர்சகராகவும் விளங்குகிறார். அவரின் விமர்சனங்கள் அடங்கிய தொகுப்பு சொல் தொடும் தூரம் என்பதாகும். இதனுள் இருபத்து மூன்று கட்டுரைகள் அடங்கியுள்ளன. இவை அனைத்தும் இவரின் விமர்சனப் பார்வையைக் காட்டுவனவாகும்.

**மரணத்தின் நிழலில் - வெ.இறையன்பு, வாழ்க்கையின் மகத்துவமும் மரணத்தின் வாசனையும்**

வெ. இறையன்பு எழுதிய மரணத்தின் நிழலில் என்ற நாவலின் விமர்சனமாக இக்கட்டுரை அமைகிறது. இந்தியா டுடே என்ற இதழுக்காக எழுதப்பெற்ற விமர்சனமாக இது விளங்குகிறது. நசிகேதனின் மரணம் பற்றி தேடுதலாக இந்நாவல் விளங்குகிறது. “இறையன்புவின் ஆற்றொழுக்கான நடை நாவலுக்கு மிகுந்த சுவாரசியத்தையும் விறுவிறுப்பையும் ஏற்படுத்துகிறது. சம்பவங்களையும், உரையாடல்களையும் வெகு வேகமாக நகர்த்திச் செல்கிறார். ஆழமான தத்துவார்த்த விஷயங்களை விவாதிக்கும்போதுகூட அவற்றைச் சிக்கல் இல்லாமல் சுவை குன்றாமல் சொல்கிறார். ஒரு வாழ்வியல் சிந்தனையாளராகத் தனது முத்திரையை நீண்ட காலமாகப் பதித்துவரும் இறையன்புவின் ஆளுமையில் இன்னொரு ஆழமான முத்திரை இந்நாவல்”[46] என்பது இவரின் இந்நாவல் பற்றிய விமர்சனமாகும்.

**உனக்கும் எனக்குமான சொல் - அழகிய பெரியவன், கவிஞனின் அடையாளம்**

அழகிய பெரியவன் என்பவரின் உனக்கும் எனக்குமான சொல் என்ற தொகுப்பின் விமர்சனமாக இக்கட்டுரை அமைகிறது. “அழகியலும், அரசியல் நுண்ணுணர்வும், அகவியலும், சமூகக் கூர் கணிப்பும், எதிர்ப்பின் துணிவும், கனவும் காதலும் கொண்டு பிசைந்த அந்தக் கவி மனதின் ஒரு பிடிக்கனவைப்

பார்க்கக் கிடைத்த இன்பத்தை இத்தொகுப்பு தருகின்றது."[47] என்பது இவரின் இத்தொகுப்பு பற்றிய விமர்சனமாகும்.

"நடை, உத்தி, உருவம், உள்ளடக்கம் எல்லாவற்றையும் தாண்டி மனுசக் கழுதைகளை அழவைக்கின்ற, காதலிக்கச் செய்கின்ற, கோபமுறச் செய்கின்ற ஒரு தனிக்குரலே இக்கவிதைகளின் அடிச்சரடு. பெண் பாட்டியாக, தாயாக, மகளாக, காதலியாக வந்தாலும் மறுக்கப்பட்ட வாழ்வின் பிரதிநிதியாகவும், பாட்டாளியாகவும், விளிம்புநிலை மாந்தராகவும் இருக்கின்ற அந்த நொய்மைச் சித்திரமே இக்கவிதைகளில் தொக்கி நிற்கிறது. ஒரு ஆண் மனம் அச்சொட்டாக அவற்றைக் கவிதைகளில் ˙ வடித்திருப்பதும் ஈரங்கசியும் ஒரு கவிமனம் அதற்குக் கை கொடுத்திருப்பதுவுமே இக்கவிதைகளின் வெற்றிக்கான காரணம்"[48] என்ற தன் விமர்சனத்தில் ஆண்மனம், பெண்மனம் என்ற இரண்டையும் சரியாகப் பிரித்தறிகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**<u>க.பஞ்சாங்கத்தின் கவிதைகள்- தொன்மத்தின் மீட்டுருவாக்கம்</u>**

க. பஞ்சாங்கம் எழுதிய "வார்த்தைகளின் பிறக்குமிடம்" என்ற கவிதைத் தொகுப்பிற்கு ஒரு முன்னுரையைத் தன் விமர்சனப் பார்வை கொண்டு எழுதியுள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"சம்பவ முரண் இன்றிப் படைப்புகள் இல்லை- பஞ்சாங்கத்தின் படைப்பில், வாழ்வின் முரண், பல நிலைகளில் நம்முன் நிறுத்தப்படுகிறது. முரண்களே படைப்பின் சுவையெனவும், கற்கவும், கொண்டாடவும் கற்றுத் தந்திருக்கும் இந்நவீன வாழ்வின் வெறுமையையும், நம்பிக்கையின்மையையும் மீறி நிற்கின்றன கவிஞர் பஞ்சாங்கத்தின் கவிதைகள்"[49] என்று பஞ்சாங்கத்தின் கவிதைத் தொகுப்பினை மதிப்பீடு செய்துள்ளார் தமிழச்சி தங்க பாண்டியன்.

**<u>கம்பரும் ஷேக்ஸ்பியரும்- கவிதையும் கவிதைக்கான ஊற்றுக்கண்ணும்</u>**

கம்பரின் காப்பியத்தையும், ஷேக்ஸ்பியரின் நாடகங்களை ஒப்பிட்டு நோக்கும் கட்டுரையாக கவிதையும் கவிதைக்கான ஊற்றுக்கண்ணும் என்ற கட்டுரை அமைகின்றது. சென்னை கம்பன் விழாவில் பேசப்பட்ட உரை கட்டுரை வடிவம் கண்டுள்ளது. இக்கட்டுரை இவரின் தமிழ், மற்றும் ஆங்கில மொழி, இலக்கிய ஆளுமைக்குச் சான்றாக விளங்குகின்றது.

“கவிதையிலே ஒரு மகா காவிய நாடகத்தைக் காட்சிப்படுத்தினான் கம்பன். நாடகங்களைக் கூடக் கவிதைகளாக்கினார் ஷேக்ஸ்பியர். கவிச்சக்கரவர்த்தி என்று கம்பன் புகழப்படுகிறான். தி கிரேட்டஸ்ட் ரைட்டர் இன் இங்கிலிஷ் என்று ஷேக்ஸ்பியர் புகழப்படுகிறார்”[50] என்று இரு பெரும் இலக்கிய ஆளுமைகளை அறிமுகப்படுத்தித் தொடங்கும் இக்கட்டுரை கற்பனை, கவிதைத்திறன், புகழ் போன்ற நிலைகளில் இரு கவிஞர்களின் திறங்களையும் எடுத்துரைக்கிறது.

கம்பரின் கற்பனைக்கு தசரதனின் தேர் மனித சிந்தனையைப் போல பெரிதாம் என்ற பகுதியும், ராமனைப் பார்த்த சீதைக்குள் காதல் தீ எழுகிற நிலையில் அந்நெருப்பின் தாக்கம் தாங்கமல் சூரியன் கடலில் குளித்தான் என்ற பகுதியும், கும்பகர்ணனின் வீரம் என்பது தீயையும் காற்றையும் பிழிந்து சாறு எடுக்கும் வன்மை வாய்ந்தது என்ற பகுதியும் இதுபோன்ற பல பகுதிகளும் காட்டப்பெற்றுள்ளன.

ஷேக்ஸ்பியரின் கற்பனைக்கு அவர் சொன்ன ஐந்தாம் ஹென்றி என்ற நாடகத்தின் ஒரு பகுதி எடுத்துரைக்கப்பெறுகிறது. “அவனிடம் கொல்லும் நாக்கும், அமைதியான வாளும் உள்ளது”[51] என்ற பகுதி ஷேக்ஸ்பியரின் கற்பனைக்கான சான்றாகிறது. காட்டில் மரங்களின் மொழிகள், ஓடைகளின் புத்தகங்கள், கற்களின் காவியங்கள், எல்லாவற்றிலும் நல்லது என்ற பகுதியும் ஷேக்ஸ்பியரின் கற்பனைத் திறன் காட்டி எடுத்துரைக்கப்பெறுகிறது.

இவ்வகையில் இரு கவிஞர்களின் ஆளுமைகளைத் தொட்டுக்காட்டும் இக்கட்டுரை பின்வருமாறு முடிகின்றது. “ஷேக்ஸ்பியரையும் கம்பனையும் பற்றிய ஒரு சிறு குறிப்பு மட்டுமே இது. அவர்களுடைய வாழ்க்கை மர்மம் நிறைந்ததாக இருந்தாலும் அவர்களுடைய படைப்புகள், ஒளிவு மறைவின்றி வாசகர்களுக்காக எப்போதும் திறந்தே உள்ளன. அவர்களுடைய கற்பனை நம்முடைய கற்பனைகளையும், மொழியையும் கலாச்சரத்தையும் வலுப்படுத்த வல்லது”[52] இவ்வாறு இரு பெரும் படைப்பாளர்களை ஒப்புநோக்கி இக்கட்டுரை வரையப்பெற்றுள்ளது.

**யவனிகா ஸ்ரீராமின் கவிதைகள், கடவுள் மெய்நிலை மனிதர், பின்நவீனத்துவப் பார்வை**

யவனிகா ஸ்ரீராம் நான்கு கவிதைத்தொகுதிகளை வெளியிட்டுள்ளார். அவை பற்றிய முழுதான ஒரு விமர்சனப்பார்வையாக இந்தக் கட்டுரை அமைகிறது. “கடவுள், மெய்நிலை, மனிதர் என்ற கருத்து- போன்ற சொல்லாடல்களைத் தொடர்ந்து தனது (நான்கு கவிதைத் தொகுதிகளிலும்) கவிதைத் தளத்தில் முன்வைத்து இயங்குகின்ற யவனிகா, அதனைக் கையாளும் விதத்தில் தனித்தும், ஆளுமையுடனும், கேள்விக் குட்படுத்திக் கொண்டும், விழுந்தும், எழுந்தும், பிறந்து கொண்டும், இறந்தும் போகித்தும், துய்த்தும், துறந்தும், சலித்தும், அயர்வுற்றும் சிதைத்தும், சொற்களினூடாக பயணம் போகின்றார்”[53] என்பது யவனிகா ஸ்ரீராம் கவிதைத் தொகுப்புகள் பற்றிய பொது மதிப்பீடாக அமைகின்றது. இதுவே இக்கட்டுரையின் தலைப்புமாக அமைந்து விடுகிறது.

மேலும் இவரது கவிதை மொழி ஆளுமையைப் பற்றி “உடல், நிலம், மனம் என்ற அடைவுக்குள் முரண்பட்டிருக்கிறது எனது எழுத்து என்கிற இவர் கவிதையின் நீண்ட கால மனத்தைச் சமன் குலைத்து, நிலம் மற்றும் உடல் பற்றியதான சொல்லாடல்களைப் பேச்சாகவும், புலன் மீட்பாகவும் முன்வைக்க

முயல்வதாகவும் மொழி அதற்கு உதவும் என்கிற நம்பிக்கையும் தனக்கு இருப்பதாகவும் தெரிவிக்கிறார். இவற்றை எல்லாம் தனது மொழிக் கட்டுமானத்தின் மூலம் அடையவும் செய்கிறார்"[54] என்ற மதிப்பீடு யவனிகா ஸ்ரீராமின் படைப்பு மொழி பற்றிய மதிப்பீடாக அமைகிறது.

இவ்வாறு நவீனத்துவ கவிஞர்களின் கவிதைகளையும் விமர்சிக்கும் நவீனச்சிந்தனைகள் வாய்க்கப்பெற்றவராக தமிழச்சி தங்கபாண்டியன் விளங்குகிறார்.

**<u>ஞானக் கூத்தனின் கவிதைகள் - கவியின் கவி</u>**

"ஞானக் கூத்தன் தமிழ்ப் புதுக்கவிதை மரபில் உருவானவர். அதேநேரத்தில் தமிழில் கவிதை மரபை ஓரளவு பின்பற்றியே இயங்கக் கூடியவர், மரபையும், புதுமையையும், மிகவும் சரியான விகிதத்தில் பொருத்திப் பார்க்கிற ஆற்றல் ஞானக் கூத்தனுக்கு மட்டுமே இருக்கிறது. அதனால்தான் கடந்த கால் நூற்றாண்டு காலாமாக அவருடைய கவிதை என்னை வசீகரிப்பதாக இருந்து கொண்டே இருக்கிறது"[55] என்று ஞானக் கூத்தனை இக்கட்டுரை அறிமுகம் செய்கிறது.

அவர் கவிதையின் மையப்புள்ளியையும் தமிழச்சி தங்கபாண்டியன் கண்டறிந்து உரைத்துள்ளார். "ஞானக் கூத்தனின் கவிதைகள் காட்டுகிற உலகம், மரபும், புதுமையும் கலந்த ஒன்று. இந்தத் தன்மைதான், அவரைப் பிற கவிஞர்களிடமிருந்து வேறுபடுத்திவிடுவது மட்டுமல்லாமல் தமிழின் முக்கியமான கவிஞர் என்று அவரை அடையாளப்படுத்துவதுமாகும்"[56] என்ற கூற்று ஞானக் கூத்தன் படைப்பின் அடிப்படையைக் காட்டுவதாக உள்ளது.

**உலகின் அழகிய முதல் பெண் - லீனா மணிமேகலை, பெண் உடலின் கொண்டாட்டங்கள்**

லீனா மணிமேகலை எழுதிய உலகின் அழகிய முதல் பெண் என்ற கவிதைத் தொகுப்பு பற்றிய கட்டுரையாக இக்கட்டுரை அமைகிறது. லீனா மணிமேகலையின் நூல் வெளியீட்டு விழாவில் ஆற்றிய உரையின் எழுத்து வடிவம் இதுவாகும். “லீனா எழுதுகிறார். ஆம்! நான் உலகின் அழகிய முதல் பெண். கவிஞரிடம் நான் வியப்பது இந்த ஒரு கூறைத்தான். – முழு நிர்வாணமெனக் குழந்தையின் எதிர்பார்ப்போடும், தனது உடல் மன எழுச்சியினை முற்றிலும் அறிந்து, உய்த்து, துய்த்து, உணர விரும்புகின்ற கன்னிமையின் கொண்டாட்டத்தோடும் பூரணமாய்ப் பெண் இருப்பைச் சொல்லுவது. உண்மைதான். கவிஞரே வாழ்க்கையைப் பூரணமாய்க் காதலித்தவளும், அதன் புதிர், இரத்தம், நிலம், சேறு, அழுக்கு, ஒளி, இருள், வியர்வை, சுகந்தம் -முதலிய எல்லாவற்றையும் உள்வாங்கிப் பருகும் ஒருத்தியாலேயே இப்படி வேட்கை மிகுந்த கவிதைகளை எழுதமுடியும்”[57] என்ற விமர்சனம் பெண்ணிய நோக்குடையதாகும்.

இக்கவிதைத் தொகுதிக்குள் இருக்கும் பெண்ணிய நிலைப்பாட்டைப் பின்வரும் பகுதி உரைக்கின்றது. “இக்கவிதைகள் எதுவுமே, பெண் தன்னைச் சலித்துக்கொள்வதாகவோ, ஆக்கிரமித்தலுக்கு இடம் கொடுப்பவளாகவோ தன் உடலை ஒரு விளையாட்டு மைதானமென வழங்கிவிடுபவளாகவோ இல்லை. அனைத்தும் ஒரு ஆதிப் பெண்ணை ஒழுங்குகளை மீறும் களிப்பை ஆற்றலாக்கும் ஒரு கட்டற்ற தேவதையை தீராத பசி, ருசியுடன் தானும் காமுற்றுத் தன் இணையும் காமுறக் கலத்தலிலும், பிறத்தலிலும், தன் இருப்பைக் கொண்டாடும் பெண்ணைச் சித்திரிக்கின்றன”[58] என்ற கருத்து, பெண்ணியச் சிந்தனைப் படைப்பாளராக லீனா மணிமேகலைப் படைப்புகளைக் காட்டுவதாக உள்ளது.

**காலம் அழிக்காத கவிதை- நவீனத்துவவாதி கம்பன்**

சென்னை கம்பன் கழகத்தில் இரண்டாயிரத்துப் பத்தாம் ஆண்டு ஆற்றிய உரையின் எழுத்து வடிவம் இக்கட்டுரையாகும். இக்கட்டுரையில் கம்பரைத் தன் கவிதைப் பரம்பரையின் மூத்தவராகக் காண்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“‘‘உலகின் ஆகச் சிறந்த இலக்கியக்காரன் கம்பன்’’ என்றும், அவனது செந்நாத் தமிழைத் துய்க்கும், பேசும், அணுவின் கடைசித் துகள் நான் என்றும் பெருமைப்படும் நான், கம்பனை ஒரு பொதுவுடைமைவாதியாக, ஆதிக்க சக்திகளுக்கு எதிரான சமத்துவச் சிந்தனையாளனாக, வேதங்களுக்கு எதிரானதொரு பக்தி இயக்கத்திற்கு வித்திட்டவனாக, டாங்கேயின் மொழியில் ‘ஒரு கலகக்காரனாக, மீமாம்சத்தையும், சாங்கியத்தையும் மீட்டுருவாக்கம் செய்தவனாக, வேதங்கள் மேலிருந்த பற்றினால் இராமானுஜர் செய்யத் தவறியதை முன்னெடுத்துச் சென்றவனாக , இரணியவதை படலத்தில் பிரகலாதனைப் பக்தி மார்க்கத்தின் குறியீடாக, வேதங்களுக்கு எதிராக நரசிங்கத்தை நிறுத்துபவனாக, மாறாத சமூக அமைப்பைத்தான் இந்திய சிந்தனை மரபு ஆதரித்து வர, சமத்துவ சமூக அமைப்பை அதற்கு எதிராக நிறுத்துபவனாக, மாவலியை வதை செய்கின்ற காட்சி மூலம் (பால காண்டத்தில்), நிலவுடைமையாளர்களாகிவிட்ட பிராமணர்களுக்கு எதிராக அடித்தளத்து மக்களை முன்வைப்பவனாக, இப்படி பலகோணங்களில் பார்த்துப், படித்து வியந்திருக்கின்றேன்”[59] என்று கம்பனின் காப்பிய நலத்தை, தொன்மத்தை நவீனத்திற்குள் கொண்டுவந்து சேர்க்கிறார் தமிழச்சி தங்க பாண்டியன்.

மேலும் ‘‘அவர் கம்பன் ஈடு இணையற்ற சொல்லாட்சிக்கும், கவித்துவத்திற்குமான பயணத்தில், புதிய மொழிக்கான தேடலில் திளைத்திருந்த நவீனத்துவவாதி கம்பன்”[60] என்ற காரணங்களுக்காகத் தமிழச்சி தங்கபாண்டியன் கம்பனை நவீனத்துவவாதியாகக் காண்கிறார்.

**கழுவேற்றப்பட்ட மீன்கள்- திலகபாமா, பெண்களின் சிதைந்த கனவுகள்**

கவிஞர் திலகபாமாவின் நாவல் கழுவேற்றப்பட்ட மீன்கள் என்பதாகும். இப்படைப்பு பற்றிய விமர்சனத்தை இக்கட்டுரையில் எடுத்துரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“திலகபாமாவின் ‘கழுவேற்றபட்ட மீன்கள்’ ஒரு விவரணை காட்சிப்பாட்டுப் பிரதி என்கிற வகைக்குள் வருகின்ற அது, எதனைப் பற்றிப் பேசுகிறது?, மீன்களைக் கழுவேற்ற முடியுமா என்ன? நழுவுதலை உடற்கூறு இயல்பாகக் கொண்ட ஒரு உயிரினத்தைக் கழுவேற்றுதல் இயலாதென்றால், இந்த முரண் தலைப்பு எதனைச் சுட்டுகிறது- பிரெஞ்சு புரட்சியைப் புரிந்து கொள்வது என்பது….. ஒரு சம்பவம் எவ்வாறு இன்னொன்றுக்கு இட்டுச் சென்றுள்ளது என்ற ஒரு கதையாடலைப் புரிந்து கொள்வதாகும்.” [61] என்ற நிலையில் இந்நாவலின் கட்டுமானம் பற்றிய விமர்சனத்தை வைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“ஆண் பெண் என இரண்டு தனிப்பட்ட உயிரிகளின் ஆளுமைச் சிதைவல்ல இப்புதினம். உலகமயமாக்குதலின், நுகர்வுக் கலாச்சாரத்தின், தாராளமயமாக்குதலின் விளைவினை அனுபவித்து மொண்ணையாகிக் கொண்டிருக்கின்ற பின்காலனிய நாடுகளின், நொதித்த, உருவமற்ற , சதைக்கூளத்தின் ஹீனமான முனகல் குரலும் அதுதான், சம்பவங்கள், கதை அமைப்பு, சொல்லாடல் என்ற அந்தத் தளமாகட்டும், நோக்கம், பிரதி, வாசகன், சூழ்மை போன்ற காரணிகள் கட்டமைக்கின்ற தளமாகட்டும், இரண்டிலுமே திலகபாமாவின் இந்த கழுவேற்றப்பட்ட மீன்கள், அனுபவத்திற்கு உருவமும் அர்த்தமும் கொடுப்பதிலும், இவற்றைக் குறியீடுகளாய்ச் சுட்டிக் காட்டுவதிலும், அர்த்தம் தருவதைப் பற்றி நேரடியாக இல்லாமல் மறைமுகப் புனைவாகச் சொல்வதிலும் ஒரு புதினமாக முயற்சித்து, நமது ஆழ்ந்த கவனத்தைக் கோருகின்றது.”[62] என்று இந்நாவலின் நடை பற்றியும், போக்கு பற்றியும் கருத்துரைத்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**<u>ஏர்னஸ்ட் தளையசிங்கம் மெர்க்கண்டயரை முன்வைத்து பின் காலனீய நாடகங்கள்</u>**

இலங்கையில் இனவெறி தலைதூக்கிய காலத்தில் மூன்று பாத்திரங்களை மையமாக வைத்து எழுதப்பெற்ற நாடகம் "ராஜநாயகம்ஸ் லாஸ்ட் ரியாட்" என்பதாகும். இந்நாடகத்தின் பிரதியை வைத்துக் கொண்டு பின்காலனீயப் பார்வையில் விமர்சிக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இந்நாடகத்தில் இடம்பெறும் சீதா தமிழ்ப்பெண் என்றாலும் தமிழை மறந்து ஆங்கில மொழி பேசுபவள். இவளின் கணவன் பிலிப் பெர்ணான்டோ ஒரு சிங்களவர். இவர்களுடன் அவ்வப்பொழுது வந்துப் புகலிடம் பெறும் ராஜநாயகம் ஒரு தமிழர். இவர்களுக்கு இடையேயான உரையாடலாக நாவல் நடத்தப்படுகிறது.

"சீதாவும், ராசநாயகமும் இனப்பிரச்சனையை விவாதித்துத் தாங்கள் இருவரும் தமிழராக உணர்வதைப் பகிரத் தொடங்கும் நேரத்தில், கலவரம் பற்றிய செய்தியைப் பி.பி.சி. வெளியிடுகிறது. பிலிப் கொதித்துப் போகிறார். சீதா- ராசநாயகம் சிறிய இடைவெளித் திருப்புமுனையில் , பி.பி.சி பற்றிய இந்தக் கேலியை மெர்க்கண்டயர் சேர்க்காமலேயே இருந்திருக்கலாம். ஆனால், சேர்ந்திருப்பதற்கான நுட்பம், தமிழர்களைப் பிரதிநிதித்துவம் செய்யும் சீதா-ராசநாயகம், சிங்களவர்களைப் பிரதிநிதித்துவம் செய்யும் பிலிப் இருவரும் அப்போது, அங்கே செய்தி சண்டையிட்டுக்கொள்வது பி.பி.சி என்ற பிரிட்டிஷ் நிறுவனத்தின் செய்தியினால் என்பதை மீண்டும் வலியுறுத்துவதற்காகத் தான் என்று சொல்லமுடியும். வலியுறுத்துவதோடு நின்றுவிடாமல் மிக நுட்பமாக அதை 'வதந்தி கார்ப்பரேஷன்' என்று கவிழ்த்துவிட்டுச் செல்வது. மெர்க்கண்டயருக்குரிய பின்காலனிய உத்தி"[63] என்று இந்நாடகத்தின் உத்தி முறை பற்றிக் கருத்துரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இங்கு பிபிசி என்ற செய்தி நிறுவனம் இங்கிலாந்து அரசின் பழைய வெள்ளைக்காரத் தன்மை

மிக்க ஆக்கிரமிப்பு சார்ந்த அரசியலைக் குறியீட்டால் உணர்த்துவதாக உள்ளது.

**<u>நாகூர் ரூமியின் சீனப் பெருஞ்சுவர் - உயிரோட்டமுள்ள சொற்கள்</u>**

நாகூர் ரூமி எழுதியுள்ள கட்டுரைத் தொகுப்புகள் 'சொற்களின் பெருஞ்சுவர்". "முற்றாத புள்ளி" என்பனவாகும். இவற்றைப் பற்றிய மதிப்பீடுகளை உயிரோட்டமுள்ள சொற்கள் என்ற நிலையில் தமிழச்சி தங்கபாண்டியன் செய்துள்ளார்.

"சொற்களின் சீனப் பெருஞ்சுவர்''- எனும் தொகுப்பு. எண்ணற்ற கலாச்சார மையங்களின் சிந்தனைகளிலிருந்து எடுக்கப்பட்டதுதான், "சொல்லப்படும் சொல், எழுதப்படும் சொல், இவற்றைப் பயன்படுத்துவதும், சரியாகப் புரிந்துகொள்வதும் ஒரு கலை'' - என்கிறார் ரூமி, இதன் முன்னுரையில். மனித உயிர்களுக்கு மதிப்பு கொடுக்கப்பட வேண்டும்-அதுவே நபிகள் நாயகம் காட்டிய இஸ்லாம், என்பதில் தொடங்கி, இசையின் அசீகரம் மற்றும் அராபிய இசையின் தொன்மை பற்றிப் பேசுகின்ற கட்டுரை- "ஒரு ஜேசுதாஸ் அல்லது லதாவின் குரல், ஒரு சந்தூர் அல்லது வீணையிலிருந்து வரும் நாதம், ஒருவனை இறைவனிடமிருந்து தூரப்படுத்து முடியுமானால், அவனை வேறு எதுதான் தூரப்படுத்தாது? " என்று கேட்பது, மிக முக்கியமான கேள்வி"[64] என்ற நிலையில் இக்கட்டுரையின் போக்கினை எடுத்துரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"மகாத்மா, ஓரினச் சேர்க்கை, ஜே. கிருஷ்ணமூர்த்தி, கம்பன், மலரினும் மெல்லிய காமம், மார்க் டுவைன், ஹிட்லரின் வாழ்க்கை எனப் பலதரப்பட்ட கட்டுரைகளை உள்ளடக்கிய 'முற்றாத புள்ளி' எனும் தொகுப்பில் கோலாகலம் எனும் ஓரினச் சேர்க்கையாளர்கள் குறித்த கட்டுரையின் கருத்து, எனக்குச் சற்றும் உடன்பாடில்லாதது. அவர்களது உரிமை குறித்தும், அங்கீகாரம் குறித்தும் இன்றைக்கு மாறியிருக்கின்ற கண்ணோட்டமுடன் 'ரூமி' அதனை

மறுபரிசீலனை செய்வார் என்று நம்புகிறேன். அவர்கள் அங்கீகரிக்கப்பட வேண்டியவர்கள்.

அதுபோலவே ‘தத்துவம் சார்ந்த இந்தியச் சுய சிந்தனையினர் வரலாற்றின் தொடர்ச்சியில், எதிர்ப்புறத்தில் இருந்து இயங்கிக் கொண்டிருந்த பெரியார் அவர்களுக்கும் இடம் இல்லை. என்பதிலும் எனக்கு மாற்றுக் கருத்து உண்டு. ஆனாலும் ‘ஒரு பிரதியை அதிலிருக்கும் பழைய கருத்தியல்களைக் கொட்டிக் கவிழ்க்கும் விசையே நிலைநிறுத்துகிறது’ என்பதற்கு இணங்க, பல விவாதங்களைக் கிளறிவிடுகின்ற தொகுப்புகளாக இவை இரண்டும் இருக்கின்றன”[65] என்ற கருத்து முற்றாத புள்ளி என்ற கட்டுரைத் தொகுப்பினை மதிப்பிடுவதாக உள்ளது.

**<u>திருமதியாகிய நான் - கீதாஞ்சலி பிரியதர்சினி வதங்கும் சம்பங்கிப் பூக்கள்</u>**

கவிஞர் கீதாஞ்சலி பிரியதர்சினி எழுதிய கவிதைத் தொகுப்பு திருமதியாகிய நான் என்பதாகும். இதனுள் இக்கவிஞர் திருமணமானபின் அதாவது திருமதி ஆகிவிட்ட நிலையில் வாழ்க்கையில் சந்திக்கும் தருணங்களைக் கவிதையாக்கியுள்ளார். இவரின் கவிதை பற்றிய மதிப்பீடுகள் இக்கவிஞருக்கு உரமூட்டுவனவாக அமைகின்றன.

“கவிதை என்கின்ற மாயப் பிசாசைக் கட்டிக் கொண்டு அழுகின்ற சந்தோஷிக்கின்ற கீதாஞ்சலியின் இரண்டாவது தொகுப்பு இது. ‘காலி சிலேட்டின் எழுதாத கவிதைகள் என்கிற முன்னுரையுடன், தமிழ்க்கவிதைகள், ஏன் தமிழே கூட தேவைப்படாத உலகத்தில் தனது அறையையும், சமையல் அறையையும் மட்டுமே முழுக்கக் கவிதைகளால் நிரப்பிக்கொண்டு ‘திருமதி’யாக இருக்கின்ற, முனைகின்ற, வாழ்ந்து கொண்டிருக்கின்ற தருணங்களைக் கவிதைகளாக்கி இருக்கிறார் கீதாஞ்சலி.

வாழ்வின் அபத்தம், அரத்தம், புதிர்த்தன்மை, நிச்சயமற்ற குரூரம், காதல், நட்பு, உறவு எல்லாவற்றையும் ஒரு உரையாடல் தொனியுடன் பதிவு செய்கின்றன இவரது கவிதைகள். அதிகம் அலங்காரமில்லாத சொற்கள், எளிமையான,புனைவு அதிகமில்லாத மொழி இவையே இவர் வாசகனுக்கும் இவருக்கும் இடையே தூரத்தைக் கடப்பதற்கான பாலமாகின்றன"[66] என்று கவிஞரின் வாழ்வனுபவத்தை, படைப்புமுறையை எடுத்துரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

'தொகுப்பின் சிறந்த கவிதைகளாக – அம்மாவின் கவலைகள், மதிப்பீடுகளின் நாயகி, பின் இருக்கையில் கடவுள், பறிபோகும் நீல ஆகாயம், யானைகளறியாப் பாதைகள், அரசியல் கவிதை ஒன்று என்று பட்டியலிட்டாலும் ஆகச் சிறந்த கவிதையாகத் தலைப்புக் கவிதையான திருமதியாகிய நான் எனும் கவிதையே என் தேர்வு"[67] என்ற நிலையில் இவரின் கவிதைகளுக்குள் சிறந்த கவிதையைத் தேர்ந்து உரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இவரின் மதிப்பீடுகள் பெண்களின் படைப்புகளைக் குறித்து அமையும் நிலையில் பெண்கள் படைப்புகள் பற்றிய மதிப்பீடுகள் ஒரு சகோதரித்துவ மனப்பாங்கில் அமைந்திருப்பதை உரணமுடிகின்றது.

**<u>தமிழ் மணவாளன் கவிதைகள் - இருத்தலின் சிதைவுகள்</u>**

தமிழ் மணவாளன் எழுதிய கவிதைத்தொகுப்பு 'அதற்குத் தக' என்பதாகும். இக்கவிதைத் தொகுப்பு பற்றித் தமிழச்சி தங்கபாண்டியன் கூறிய விமர்சனங்களை எடுத்துரைக்கிறார்.

"இத்தொகுப்பில் இருக்கின்ற நூற்றிப் பனிரெண்டு கவிதைகளிலும் உள்ளதொரு பொதுவான தன்மையாய்த் தன்னுள் அரற்றலும், சுய நிர்ணயக் கேள்விகளும், யாதாரத்தத்தின் குரூர முகமும், வாழ்வின் பிரமாண்டத்தினடியில் இயலாமையில் நசுங்கும் 'மாயமான' மனதின் பெருமூச்சும் பரவிக்கிடக்கிறது"[68]

என்ற நிலையில் இத்தொகுப்பின் மையப் புள்ளியைக் கண்டறிகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

மேலும் "இக்கவிதைகளை மிக நுட்பமானதொரு அனுபவத்தினைத் தருகின்ற கவிதைகளாய் நான் உணர்ந்ததன் காரணம் அவை கட்டமைக்கபட்ட விதத்திலும், கிளர்த்திவிடும் உணர்விலும் இத்தொகுப்பிலுள்ள மற்ற கவிதைகளில் இருந்து முற்றிலும் மாறுபட்டதொரு தளத்தில் இயங்குவதால்தான்,மாறுபட்டடிருத்தலே அவற்றின் தனித்தன்மையினையும் தீர்மானிக்கின்றது"[69] என்ற நிலையில் இத்தொகுப்பின் தனித்தன்மையினை எடுத்துரைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**<u>கல்மரம் விஜயலட்சுமி- கல்மரமாக இருக்கும் சமூகம்</u>**

"ஆதித் தாயின் உதிரம் கவிதைக் குரலாய்க் கெட்டிப் பட்டிருக்கின்ற, 80 ற்குப் பிறகான பெண் எழுத்தில், புதிய நம்பிக்கை அளிக்கக்கூடிய வரவாய் விஜயலட்சுமி, தன் முதல் தொகுப்பான "பெருவெளிப் பெண்" மூலம் அறிய வருகிறார்" என்று படைப்பாளரையும், படைப்பினையும் ஒருசேர தன் கட்டுரையின் முன்பகுதியில் அறிமுகம் செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

மேலும் இத்தொகுப்பு பற்றி "விஜயலட்சுமியின் தொகுப்பு முழுவதுமே ஒரு நீண்ட உரையாடல் கவிதைதான். அதில் வெளிப்படுகின்ற தளங்கள் மூன்று. உடலரசியல், வர்க்கப் பாகுபாடு, பால் பேதம். ஒரு பெண்ணாகத் தன் உடல் தனக்குச் சொந்தமற்றுப் போவதை,

வலியுறுத்தல்களால் மட்டுமே

வளையப்பட்டதோ என் தோற்றம்

என வினவுகையிலும், பெண் உடல் மீதான ஆணின் சமூகத்தின் கட்டமைப்பு வன்முறை அரசியலை முன்வைக்கிறார்”[70] என்ற நிலையில் பெண்படைப்பினைப் பெண்ணியக் கண்ணோட்டத்துடன் விமர்சிக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**ஈஸ்வர சந்தான மூர்த்தி- ஐந்தாறு வகுப்பறைகளும், பத்துப் பதினைந்து காக்கைகளும்**

நடைச்சித்திரப் போக்கில் ஈஸ்வர சந்தான மூர்த்தி எழுதிய கட்டுரைத்தொகுப்பு ஐந்தாறு வகுப்பறைகளும், பத்துப் பதினைந்து காக்கைகளும் என்பதாகும். இத்தொகுப்பில் கல்விச் சிந்தனைகள் பல முன்வைக்கப்படுகின்றன.

“இந்நூலில் உள்ள கட்டுரைகளைப் படிக்கும்போது இயற்கை, குழந்தைமை, சமூக நீதி குறித்த பல்வேறு எண்ணங்கள் மனதில் அலைமோதுகின்றன. நம்முடைய வாழ்வின் இழப்புகளையும், பிறழ்வுகளையும் அவை ஆழமாகத் தொட்டுச் செல்கின்றன”[71] என்று பொதுவான பறவைப் பார்வையைக் கொண்டுத் தமிழச்சி தங்கபாண்டியன் விமர்சனம் செய்கிறார்.

மேலும், “இன்றைய வகுப்பறைகளும் பாடத்திட்டங்களும் குழந்தைகளுக்கு எவ்வாறு அச்சுறுத்தும் கனவாக மாறிவிட்டன என்பதை ஆழமாக விவரிக்கும் அவர், அதற்கு மாற்றாகச் செயல்வழிக் கல்வி என்ற தமிழக அரசின் மாற்றுக் கல்வித்திட்டம் குழந்தைகளின் உலகத்தை எவ்வாறு மீட்டுத்தருகிறது என்பதைச் சொல்கிறார். செயல்வழிக் கல்வியில் குழந்தைகளின் சிந்திக்கும் திறனும் பயிற்சியும் ஆசிரியர்களின் எண்ணங்களோடு இணைந்த வகுப்பறை என்பதை ஒரு கலைக்கூடமாக, ஆளுமைத்திறனை உருவாக்கும் மையமாக மாறுவதை இந்தக் கட்டுரை பேசுகிறது”[72] என்ற நிலையில் கல்வி நடைமுறையில் ஏற்பட்டுள்ள மாற்றத்தினை இக்கட்டுரையாளர் பதிவு செய்திருப்பதைத் தமிழச்சி தங்கபாண்டியன் எடுத்துரைக்கிறார்.

இவ்வாறு கல்விச்சிந்தனைகள் பற்றிய மதிப்பீட்டுக் கட்டுரையாக இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது.

**அ. மங்கையின் நாடக உலகம், யாதும் என் ஊரே**

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் நிதியுதவியுடன் அ. மங்கை என்ற நாடக இயக்குநர் பல்சான்றீரே, யாதும் என் ஊரே என்ற இருநாடகங்களை அரங்கேற்றினார். இந்நாடகங்களை எழுதியவர் கவிஞர் இன்குலாப் ஆவார். மரப்பாச்சி குழுமம் என்ற நாடக அமைப்பினை நடத்தும் அ. மங்கையின் நாடக ஆற்றலை வெளிப்படுத்தும் கட்டுரையாக அ. மங்கையின் நாடக உலகம் என்ற கட்டுரை அமைந்துள்ளது.

நம்மால் அடையாளப்படுத்தக் கூடிய மனிதர்களை, அடையாளபப்படுத்தக் கூடிய நிகழ்ச்சிகளை வைத்துக் கதை சொல்ல மறுப்பது எதிர்நாடகம்.அது இரண்டாம்பட்சப் பாத்திரங்களுக்கு அதிக முக்கியத்துவம் தரும். பாத்திரங்களுக்கு அதிக முக்கியத்துவம் தரும் மங்கை தன்னுடைய அந்த முக்கியமான கேள்விகளை ஒரு இரண்டாம் பட்ச பாத்திரமாகக் கருதப்படுகிற காமக்கிழத்தி மூலமாக வைத்திருப்பதிலே அந்தக் கூறையும் நான் பார்த்தேன். பெண்ணியம் குறித்த சரியான புரிதலோடு, இயங்கி வருகின்ற மங்கையினுடைய பல்சான்றீரே என்கின்ற இந்த நாடகம் இன்றைய தேதிக்குப் பெண், சமூகத்திலே எதிர்கொள்கின்ற சிக்கல்களை எப்படி நம்முடைய முதுதொன்மமான சங்க இலக்கியத்தில் இருந்து காட்டப்பட்டு வருகின்ற கருத்துகளைக், கருத்தாக்கங்களைக் கேள்வி கேட்பதன்மூலம் அவளுக்கு எங்கு கைவரப்பெறலாம் என்கின்ற அந்த செய்தியைச் சொல்லுகின்றது”[73] என்ற மதிப்பீடு பல்சான்றீரே நாடகத்தின் எதிர் நாடகப் போக்கினைக் காட்டுவதாக உள்ளது.

இக்கட்டுரையில் சிமண்டி போவாயர் என்ற பெண்ணியவாதியின் செயல்பாடுகளும் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. 1971 ஆம் ஆண்டு பெண்கள்

கருக்கலைப்பு விடுதலை வேண்டி, பிரெஞ்சு நாட்டில் போராடியபோது ஏற்பட்ட எதிர்ப்புகள் அதற்கு அவரின் எதிர்வினைகள் பற்றிய செய்திகள் இக்கட்டுரைக்குள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. இதன்வழி பெண்ணியச் செயல்பாட்டு வரலாற்றினை அறிந்தவர் தமிழச்சி தங்கபாண்டியன் என்பதை உணர்ந்து கொள்ளமுடிகின்றது.

மற்றொரு நாடகமான யாதும் என் ஊரே என்ற தலைப்பிலான நாடகம் பற்றிய மதிப்பீடு பின்வருமாறு. “யாதும் என் ஊரே என்கின்ற நாடகமும் முற்றிலும் வேறான தளத்திற்கு நம்மை எடுத்துச் சென்று இன்றைக்கு உலகமெங்கும் ஒடுக்கப்பட்டுக் கொண்டிருக்கின்ற இனக்குழுக்களுடைய நிலையை நமக்குச் சொல்லும். கீரையும் மணல் படுக்கையும் பிழியப்பட்ட பருக்கைகளும் எங்களுக்கு வேண்டாம். கள்குடித்துப் புலால் உண்டு, கொடுத்துத் திரிவோம் பெண்களாகிய நாங்கள்”[74]

இவ்வாறு நாடகச் செயல்பாடுகளிலும் தமிழச்சி தங்கபாண்டியன் ஈடுபட்டிருந்த காரணத்தினால், நாடகங்கள் பற்றிய விமர்சனங்களையும் மிகக் கூர்ந்த நிலையில் வைத்துள்ளார்.

**<u>சிறீசுவின் சில கவிதைகள் - காலந்தோறும் மனித துயரம்</u>**

‘விளிம்பு நிலை’ என்ற கவிதைத் தொகுப்பினை இலங்கையைச் சார்ந்த சிறீசு என்பவர் எழுதியுள்ளர். இத்தொகுப்பு பற்றிய விமர்சனமாக இக்கட்டுரை அமைகிறது.

“புலம் பெயர்ந்த தமிழ்ப் படைப்பாளிகளில் குறிப்பிடத் தக்கதொரு சிறுகதை எழுத்தாளராய் ஏற்கனவே அறியப்பட்டிருக்கின்ற சிறீசுவின் கவிஞர் என்னும் பக்கத்தினையும் உணர வைத்த இக்கவிதைகள், என்னை ஒரு வாசகியாய் இட்டுச் சென்ற தளங்கள் விவரிப்பிற்கு அப்பாற்பட்டவை. கவிஞனுக்கு எழுதுதல் என்பது எவ்வாறு தனிப்பட்டதொரு தன்னுடன்

இருத்தலோ, வாசகனுக்கு அது அவ்வாறானதொரு அனுபவம்தான். எழுதிய கவிஞரையும் தாண்டி, எழுதப்பட்ட கவிதை அவனிடம் பேசலாம். வியப்புற வைக்கலாம். விம்மியழச் செய்யலாம். – சிறீசுவின் கவிதைகள் அப்படித்தான் என்னுடன் உரையாடி, வியக்கச் செய்தன. நானும் சிறீசுவின் 'மானுடம் பறையும் மாயத்திமிர்க்''கவிதைகளைப் படிக்கின்ற பொழுது வருகின்ற கண்ணீரைப் பார்க்கவில்லை…கேட்டேன். கண்ணீரை எங்காவது கேட்கமுடியுமா எனில் முடியும். சிறீசுவின் இத் தொகுப்பில் மனிதம் குறித்த ஆழ்ந்த, அடிப்படைக் கேள்வியுடன் எழும்பித் ததும்புகின்ற சுடுகண்ணீரைப் பார்க்க முடிகின்றது"[75] என்ற சிறீசுவின் கவிதைகள் பற்றித் தமிழச்சி தங்க பாண்டியன் மதிப்பிடுகிறார்.

<u>**கள்ளக்காதல் - வசுமித்ரா ஆதிரன்- மொழிக்கும் உண்மைக்குமான இடைவெளியை நிரப்புதல்**</u>

வசுமித்ரா- ஆதிரன் ஆகிய இருவர் இணைந்து எழுதிய 'கள்ளக்காதல்' 'ஆகவே நீங்கள் என்னை கொலை செய்தற்குக் காரணங்கள் உள்ளன' ஆகிய இரண்டு நூல்கள் பற்றிய விமர்சனமாக இக்கட்டுரை அமைகிறது.

"வசுமித்ரா- ஆதிரன் சமயங்களின் படைப்புத் தொழிலுக்கான பித்து நிலைகளிலும், பெரும்பாலும் உள்முகமான பயணத்திற்கான தியான நிலையிலும் இத்தொகுப்பில் இயங்கி இருக்கிறார்கள் என்பது என் கணிப்பு."[76] என்ற நிலையில் இவ்விரு தொகுப்புகளையும் மதிப்பிடுகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"பெண்கள் சபிக்கப்பட்ட தேவதைகள்

ஆண்கள் ஆசிர்வதிக்கப்பட்ட சாத்தான்கள் - அவ்வளவே"

என்று படைப்பாளி கூறினாலும், இத்தொகுப்பை முடித்தவுடன் ஆண்கள் சபிக்கப்பட்ட தேவகுமாரர்களாகவும், பெண்கள் ஆசீர்வதிக்கப்பட்ட சாத்தான்களாகவும் எனக்குத் தோன்றினார்கள். தொகுப்பு முழுவதிலும் முத்தம்,

பல்லி, பொம்மை, நேயா (சிறுமி), கொலை, குதிரை முதலியன நச்சென நம்மை ஏறி மதிக்கின்றன"[77] என்ற மதிப்பீடு பெண்கள் பக்கம் நின்று எப்போதும் தமிழச்சி தங்கபாண்டியன் செய்திகளைப் பார்ப்பவர் என்பது புலனாகின்றது.

**சிறகுகளால் நடப்பவன் -இலக்கியா நடராசன் - இட்டு நிரப்ப முடியாத மாயக் கோப்பை**

"சிறகுகளால் நடப்பவன்'' என்னும் இலக்கியா நடராஜனின் தொகுப்பினைப் பற்றிய விமர்சனமாக இட்டு நிரப்ப முடியாத மாயக் கோப்பை என்ற கட்டுரை அமைகிறது. "நகர்ப்புற மென்னிகளையும், விமர்சனக் குரல்களையும் பார்க்கும்பொழுதும், கேட்கும் பொழுதும், தன்னை ஒரு பீனிக்ஸ் பறவையாக நம்பிக்கையுடன் உருவகிக்கின்ற கருவம் "நானென்று நம்பியதே நானில்லாமல் போயிற்று என்கிற தெளிவு, நிஜமான நிகழ்வுகளில் இருந்து அன்னியப்பட்டவனாகத் தான் உருமாறியிருக்கின்ற புரிதல் எனத் தன் ஆளுமையின் சிதறல்களாய்க் கவிதைகளை எழுதியிருக்கிறார் இலக்கியா நடராஜன்''[78] என்ற விமர்சனத்தின் வழியாக இத்தொகுப்பு பற்றிய மதிப்பீட்டினைப் பெறமுடிகின்றது.

**புறவழிச்சாலை- தமிழ் மணவாளன், கவிதையில் இயங்குவதும் காலத்தில் இயங்குவதும்**

தமிழ்மணவாளனின் கவிதைத்தொகுப்புகள் அனைத்தும் கலந்ததொரு, இணைந்ததொரு தொகுப்பாக புறவழிச் சாலை என்பது அமைகின்றது. இத்தொகுப்பு பற்றி " கவிதை என்பது நேர்த்தியாய்ச் செய்யப்படுவது அல்ல. அனுபவ நேர்மையோடும், உண்மையோடும் இருந்தால் நகாசு, நுட்பங்கள் இல்லாத குருபி என்றாலும்கூட உலகின் தலைசிறந்த அங்கீகாரம் அதற்குத் தரப்பட வேண்டும். அப்படிப்பட்ட பல கவிதைகள், இந்தத்தொகுப்பில் இருப்பதை என்னால் சுட்டிக்காட்டமுடியும். ஓர் அனுபவத்தை விண்டு பார்க்கும்போது அதற்கு இரண்டு முகங்கள் உணடு, ஒன்று தனக்குத்தானே

அரற்றிக் கொள்வது. மற்றொன்று பிறருக்கு விளக்குவது. தனக்குத்தானே அரற்றிக் கொள்வது கவிதையெனில் பிறருக்கு விளக்குவது தத்துவம் என்று நாம் கொள்ளலாம்"[79] என்று இக்கவிதைத் தொகுப்பினை மதிப்பீடு செய்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இதன்வழி தமிழ் மணவாளன் கவிதைகளில் இருவகை முகங்கள் உள்ளதை உணரமுடிகின்றது.

**<u>நேர்படப் பேசு</u>**

'நேர்படப் பேசு' என்ற இந்தக் கட்டுரை ஆனந்தவிகடன் இதழில் வெளியான ஞாநி எழுதிய விருப்பப்படி இருக்க விடுங்கள் என்ற கட்டுரைக்கு அளிக்கப்பெற்ற மறுப்பாக விளங்குகிறது.

முதுமை காரணமாக அரசியலில் இருந்து, கலைஞர் கருணாநிதி ஓய்வெடுக்க வேண்டும் என்று கரிசனம் கலந்த நைச்சியத்துடன் ஞாநி கட்டுரை வரைந்திருப்பதாகத் தமிழச்சி தங்கபாண்டியன் கருதுகிறார். "இந்துத்துவா கருத்தியலுக்கு எதிரான குரலாகத் தொடர்ந்து இயங்கும் கலைஞரை நைச்சியமாகவும், நையாண்டியாகவும் ஓய்வெடுக்கச் சொல்லுகின்ற ஞாநி, இதே ஆனந்தவிகடன் கட்டுரையில் கலைஞரைப் போலிப்பகுத்தறிவுவாதி என்று கூறியபின், ஏன் அவரை அந்தப் போலிப் பகுத்தறிவை வளர்க்கப் பதவி விலகச் சொல்கிறார். பிடித்ததைச் செய்யட்டும் என்கிற பரிந்துரையுடன் கலைஞருக்குப் பிடித்தது- பிடிக்காதது பற்றித் தான் தீர்மானிப்பதென்பது ஒரு உச்சக்கட்ட வன்முறை என்பது, முற்போக்குவாதியான ஞாநிக்கு ஏன் தோன்றவில்லை"[80] என்று காட்டமாக எதிர்வினை செய்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இது சென்னை வாணிமகாலில் நடைபெற்ற கூட்டத்தில் ஆற்றிய உரையாகும்.

**<u>கொந்தளிப்பான கடலில் ஒரு பயணி</u>**

திராவிட முன்னேற்ற கழகத்தின் முன்னணித் தலைவர்களுள் ஒருவராக இருந்துவரும் திரு. ஸ்டாலின் பற்றிய கருத்துரையாக கொந்தளிப்பான கடலில்

ஒரு பயணி என்ற கட்டுரை இந்தியா டுடே இதழில் தமிழச்சி தங்கபாண்டியனால் எழுதப்பெற்றுள்ளது.

“தளபதியின் நிர்வாகத்திறன் என்பது, இன்று சமகாலச் சரித்திரம், ஊரக வளர்ச்சித் துறை அமைச்சராக, துணை முதல்வராக அவர் பொறுப்பேற்றதிலிருந்து கிராமப்புற வளர்ச்சிக்கும் மக்களின் வேலை வாய்ப்பு மற்றும் நலத்திட்டம் சார்ந்த பணிகளுக்காகவும், தீவிரமான முயற்சிகளை எடுத்து வந்திருக்கிறார்”[81] என்ற நிலையில் தான் சார்ந்துள்ள கட்சிசார் தலைவரை மதிப்பிட்டுள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**<u>நீதியின் அளவுகோல்கள்- நியாயங்களைத் தீர்மானிப்பவை அதிகார மையங்களே</u>**

மரண தண்டனை ஒழிப்பினை முன்வைத்து இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. “ஒவ்வொரு மனிதனுமே திருத்தப்படக் கூடியவன்தான். உலகிலேயே படுமோசமான கயவனைக்கூடத் திருத்திவிட முடியும். பொருத்தமான பயிற்சியின் வாயிலாக சீர்படுதலின் வரியலாக மனப்பாங்கை பயிற்சியின் வாயிலாக சீர்படுதலின் வாயிலாக மனப்பாங்கை மாற்றும் படியான வழிமுறைகளின் வாயிலாகவும் சகவாசத்தின் வாயிலாகவும் பொருத்தமான விழுமியங்களைப் புகட்டுவது மூலமாக ஓங்கிக் குரல் கொடுப்போம். உரிமைகளைப் பெறுவோம். மரண தண்டனையை ஒழிப்போம்”[82] என்ற மரண தண்டனைக்கான எதிர்ப்புக் குரலைப் பதிவு செய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இவ்வாறு இத்தொகுப்பின்வழி படைப்பாளர்கள், சமுதாய மேம்பாட்டாளர்கள், சமுதாய நற்கருத்துகள் ஆகியவை பற்றிய தன் மதிப்பீடுகளை வைத்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

<u>தொகுப்புரை</u>

தமிழச்சி தங்கபாண்டியன் பல உரைநடைப் படைப்புகளையும் படைத்துள்ளார். இவற்றின் நடையும், தலைப்புகளும் கவிதைத் தன்மையுடன் அமைந்து விளங்குகின்றன.

இவரின் வாழ்வில் நிகழ்ந்த அனுபவங்களைக் கொண்டு இவர் எழுதிய கட்டுரைகள் "பாம்படம்" என்ற பெயரில் தொகுக்கப்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் கணவன், குழந்தைகள் என்ற உறவுப்பிணைப்பில் ஏற்படும் நெருக்கடிகள், முதுமை, தனிமை, கணவன் இறப்பு போன்ற சூழல்களில் பெண்கள் படும் துயரங்கள், பெயர் மாற்றமுடியாமை போன்ற நிகழ்வுகளால் பெண்கள் படும் இன்னல்கள் போன்றன எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. இதன்வழி பெண்ணிலக்கியமாகவே பாம்படம் விளங்குகிறது.

"மயிலிறகு மனசு" என்ற கட்டுரைத் தொகுப்பு அவள் விகடன் என்ற மகளிர் இதழுக்காக தான் சந்தித்த மகளிர் பற்றி, தமிழச்சி தங்கபாண்டியனால் எழுதப்பெற்ற கட்டுரைகள் அடங்கிய தொகுப்பாகும். இத்தொகுப்பில் தூய்மைப் பணியைச் செய்யும் பெண்ணின் கலை உள்ளம் முதல் லலிதா நகைக்கடையின் மகள் வரை என்ற நிலையில் அடித்தட்டுப் பெண்கள் முதல் மேல்த்தட்டுப் பெண்கள் வரை ஒரே தட்டில் வைத்து அறிமுகம் செய்யப்பெற்றுள்ளது. இக்கட்டுரைகளின் வழியாக பெண்களின் மதிப்பும், மரியாதையும் உலகிற்கு வெளிப்படுத்தப்பெற்றுள்ளது. பெண்களின் சமுதாய இருப்பு என்பது மிக முக்கியமானது என்பதையும் இக்கட்டுரை காட்டுகின்றது.

இவரின் கட்டுரைத்தொகுப்புகளில் ஒன்று மண்வாசம் என்பதாகும். இத்தொகுப்பில் இரு பகுதிகள் விளங்குகின்றன. ஒரு பகுதி மண்ணும் மருத்துவமும் என்பதாகும். மற்றொரு பகுதி மண்ணும் மனசும் என்பதாகும். இவ்விரு பகுதிகளிலும் பெண்கள் பற்றிய பல பதிவுகள் அமைந்துள்ளன. குறிப்பாகப் பெண்களின் மருத்துவ அறிவுத்திறன், நாட்டுவைத்திய முறைகள்

எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. மேலும் மண்ணும் மனசும் என்ற பகுதியில் தான் அனுபுவித்த கிராமத்து மனித வாழ்வும் பற்றியும் இவர் எடுத்துரைக்கிறார். பெரும்பாலும் இவர் பெண்களுடன் நிகழ்த்திய அனுபவங்களே இங்குக் கட்டுரைகளாக ஆக்கப்பெற்றுள்ளன. இதன் காரணமாக இத்தொகுப்பும் பெரும்பான்மை பெண் சார்ந்த பதிவுகள் கொண்ட தொகுப்பாக அமைந்து சிறக்கின்றது. இத்தொகுப்பு நிறைவடையும்நிலையில் நிலவு என்ற முடிப்புடன் முடிகின்ற நிலை இவரின் உரைநடை திட்டமிடப்பட்டு எழுதப்பெற்ற உரைநடை என்பதைக் காட்டுவதாக உள்ளது.

விமர்சனப் பாங்குடைய உரைநடைப் படைப்பு என்ற நிலையில் அமைவது இவரின் ‘சொல் தொடும் தூரம்’ என்ற தொகுப்பாகும். இத்தொகுப்பில் இவர் மதிப்புரை, முன்னுரை, அணிந்துரை, வாழ்த்துரை போன்ற நிலையில் தந்த பேச்சுரைகள், மற்றும் எழுத்துரைகள் தொகுக்கப்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் ஆண்களின் படைப்புகளை விமரச்சிக்கையில் ஓர் அன்னியத்தன்மையும், பெண்கள் படைப்புகளை விமரச்சிக்கையில் சகோதரித்துவ மனப்பாங்கும் இவரிடம் காணப்படுவதை உணரமுடிகின்றது.

**சான்றாதரங்கள்**

---

[1] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப. 21

[2] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப. 22

[3] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 22

[4] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 26

[5] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 25

[6] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 26

[7] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 29

[8] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 29

[9] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 32

[10] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 33

[11] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 37

[12] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 38

[13] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 38

[14] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 39

[15] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 41

[16] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 47

[17] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 51

[18] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 55

[19] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், பக் 60 - 61

[20] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 60

[21] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 67

[22] தமிழச்சி தங்க பாண்டியன், பாம்படம், ப 71

[23] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப. 14

[24] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.19

[25] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.23

[26] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.25

[27] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.28

[28] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.37

[29] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.42

[30] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.42

[31] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.49

[32] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.54

[33] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.59

[34] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.62

[35] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.67

[36] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.70

[37] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.72

[38] தமிழச்சி தங்க பாண்டியன், மயிலிறகு மனசு, ப.72

[39] தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம், ப. 31

[40] தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம், பக் 34-35 (இப்பக்கக் குறிப்புகள் கொண்டு பட்டியல் உருவாக்கப்பெற்றுள்ளது.)

41 தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம், ப. 39

42 தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம், ப. 45

43 தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம்,ப.140

44 தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம்,ப 104

45 தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம்,ப 108

46 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப. 20

47 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 21

48 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 25

49 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 30

50 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 31

51 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 41

52 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 41

53 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 48

54 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 49

55 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 51

56 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 56

57 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 58

58 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 59

59 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 62

60 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 71

61 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 72

62 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 76

63 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 83

64 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 88

65 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 90

66 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 91

67 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 94

68 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 97

69 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 96

70 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 100

71 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 102

72 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம்.ப 103

73 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப. 108

74 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப.108

75 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப.113

76 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப.117

77 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப.118

78 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், பக்.120-121

79 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப.126

80 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப.130

81 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப. 135

82 தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், ப.142

## இயல் 4

## பெண்களின் நிலை

சமுதாயம் என்பது ஆண்கள், பெண்கள், திருநங்கைகள், குழந்தைகள் போன்ற பலரும் உள்ளடங்கிய ஒரு கூட்டமைப்பு ஆகும். இக்கூட்டமைப்பிற்கென தனித்த நெறிமுறைகள், கட்டுப்பாடுகள், ஒழுக்கங்கள் உள்ளன. இதனை ஏற்று சமுதாயத்தில் உள்ள அனைவரும் ஒருவரை ஒருவர் மதித்து வாழ்கின்றபோது சமுதாயம் அமைதியும், அன்பும் உடையதாக விளங்கும். சமுதாயத்தில் உள்ள அனைவரும் ஒருவருக்கு ஒருவர் அன்புடனும், சகோதர வாஞ்சையுடனும் பழகும் நிலையில் ஒப்பற்ற சமுதாயம் தோன்றுகிறது. எல்லாரும் எல்லாமும் பெற்றிருப்பதான சமத்துவமான சமுதாயத்தை எதிர் நோக்கியே அனைத்து சமுதாயக் கட்டமைப்புகளும் இயங்குகின்றன.

இந்நிலையில் சமுதாயத்தின் ஏறக்குறைய பாதி அங்கமாக விளங்குகின்ற பெண்கள் சமுதாயப் பங்களிப்பில் மிக முக்கியப் பங்காற்றுகிறார்கள். அனைத்துத் துறைகளிலும் அவர்களின் பங்களிப்பு இடம்பெற்று வருகிறது. இருப்பினும் பெண்கள் நிலை என்பது சார்புத்தன்மையை உடையதாக, தனித்தன்மை அற்றதாக, இரண்டாம் இடத்திற்கு உரியதாக நடத்தப்படுகிறதாக ஒரு குறைபாடு அவ்வப்போது எழுந்துவருகிறது.

“பொதுவாகக் கவனித்தால் நமது நாடு மாத்திரமல்லாமல் உ்லகத்திலேயே அநேகமாய்க் கல்யாண விஷயத்தில் பெண்கள் மிகக் கொடுமையாகவும், இயற்கைக்கு விரோதமான நிர்ப்பந்தமாகவும் நடத்தப்படுகிறார்கள் என்பதையும் நடுநிலைமையுள்ள எவரும் மறுக்க முடியாது”[1] என்று பெரியார் திருமணநிலையில், திருமணத்திற்குப் பின்னான நிலையில் பெண் இனம் மிக மோசமாக நடத்தப்படுவதாகத் தெரிவிக்கின்றார்.

“குடும்பம், அரசியல், பொருளாதாரம், பாலுறவு ஆகியவற்றில் ஆண்கள் தங்களது வலிமையையும், மேலாதிக்கத்தையும் வன்முறைகள் வாயிலாக நிலை

நிறுத்தி வருவது உலகறிந்த உண்மை நிலை. சமூக மறு உற்பத்தி, தாய்மை, மென்மை,பெண்மை போன்றவை பெண்ணை அடிமை இருட்டறையில் இட்டு வைத்திருப்பன. குடும்பம் என்னும் நிறுவனத்தில் ஆண் முதலாளி போலவும், பெண் அவனது அடிமைத் தொழிலாளி போல ஊதிய மதிப்பற்ற உழைப்பாளியாகவும் உழன்று வருகிறாள்"[2] என்று வாசுகி ஜெயரத்னம் பெண்களின் திருமண உறவு தொடர்பான காலத்தைய நிலை பற்றி அறிவிக்கிறார்.

பெண்சமுதாயத்திற்கு ஏற்படும் சிக்கல்களை "பெண் கருவாய் இருக்கும்போதே அதனைக் கண்டறிந்து கலைப்பது, பெண் சிசுவைக் கொன்றுவிடுவது, பாலியல் கொடுமைகளுக்கு உள்ளாவது, கற்பழிப்பது, கணவன் மற்றும் குடும்பத்தாரின் கொடுமைகட்கு இலக்காவது, விபச்சாரத்துக்கு உட்படுத்துவது, வரதட்சணைக் கொடுமைகளுக்கு ஆளாகி அல்லற்படுவது, உயிரிழப்பது எனப் பல்வகையான கொடுமைகட்கும் பெண் இலக்காகித் துன்பம் அடைகிறாள்"[3] எனப் பட்டியலிடுகிறன்றனர் பெண்ணிய ஆய்வாளர்கள்.

இவ்வாறு சமுதாயத்தில் பல்வேறு இன்னல்களுக்குப் பெண்கள் இலக்காகிறார்கள். இவற்றைச் சுமையெனக் கருதிச் சிலர் வெகுண்டெழுவதும், குற்றம் புரிவோரைத் தண்டிப்பதும், உணரவைப்பதும், இன்னும் சிலர் இந்த வாழ்வினை ஏற்று நடப்பதும், பொறுமையோடு நடத்தலும் என வாழ்ந்து வருகின்றனர்.

இந்நிலையில் பெண் எழுத்தாளர்கள்தம் படைப்பில் அவர்கள் நாள்தோறும் காணும் பெண் சமுதாயம் சித்திரிக்கப்படுகிறது. இவற்றின் வழியாக சமுதாய ஏற்ற இறக்கங்களை அறிந்துகொள்ளமுடிகின்றது.

தமிழச்சி தங்க பாண்டியன் கிராமப்பின்னணியில் வாழ்ந்து பின் நகரப் பின்னணியில் தன்னை வாழ வடிவமைத்துக்கொண்டவர். அவரின் பார்வையில் கிராம மக்கள், நகர மக்கள், ஆண்கள், குழந்தைகள் என அனைவரும்

கவிதைக்குள் பாத்திரங்களாக இடம்பெற்றுச் சமுதாய நிலையை உரைக்கின்றனர். இவரின் கவிதைகளில் சமுதாய நிலை என்பது ஆராயத்தக்கது என்றாலும் இவர்தம் படைப்பில் பெண்சமுதாயக் கூறுகளை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**சமுதாயம்**

சமுதாயம் என்பதற்கு “மக்களின் திரள்”[4] என்று பொருள் தருகிறது தமிழ்ப்பேரகராதி. இந்த மக்கள் திரள் என்பது குடும்பம் என்பதில் தொடங்கி உலக சமுதாயமாக மலர்கின்றது. “வெறும் குடும்பங்களை மட்டுமே உறுப்புகளாகக் கொண்டிருக்கும் நிலையில் சமூகம், எளிய சமூகமாக இருக்கிறது. குடும்பங்கள் ஒருங்கிணைந்து, குலங்கள் உருவாகும்பொழுது, கூட்டிணைப்புச் சமூகமாக ஆகிறது. குலங்கள் மரபு இனக்குழுக்களாக ஒன்றுபடும்பொழுது கூட்டிணைப்புச் சமூகம் இருமடங்கு கூட்டிணைப்புச் சமூகமாக மாறுகிறது. மரபு இனக் குழுக்கள் கூட்டிணைந்து நாடுகளாக அல்லது தனியரசுகளாக அமைகிற பொழுது இருமடங்குக் கூட்டிணைப்புச் சமூகம் மும்மடங்குக் கூட்டிணைப்பு சமூகமாக மலர்கின்றது”[5] என்ற நிலையில் சமுதாயத்தின் வளர்ச்சிநிலை எடுத்துக்காட்டப்பெறுகிறது. எனவே குடும்பம், குலங்கள், மரபு இனக்குழுக்கள், நாடுகள், உலகம் என்ற வளர்ச்சி நிலை சமுதாய வளர்ச்சி நிலையாக அறியப்படுகிறது.

எனவே சமுதாயத்தின் அடிப்படை அலகு குடும்பம் என்பதையும், அதன் உயர் அலகு உலகம் என்பதையும் மேற்சுட்டியதன் வழி அறியமுடிகின்றது.

தமிழச்சி தங்க பாண்டியன் குடும்பம் என்ற அலகு முதலான அனைத்து அலகுகள் குறித்தும் பொதுவாக எழுதியுள்ளார்.

அவரின் பொதுவான சமுதாயப் பார்வையாக குழந்தை பற்றிய கவிதை ஒன்று பின்வருமாறு.

"குழந்தைகளுக்கான பலூனில் தங்கள்

மூச்சுக்காற்றை நிரப்பியும்,

குழந்தைகளுக்கான நிர்வாணத்தில் தங்கள்

உடைகளை அணிவித்தும்

குழந்தைகளுக்கான சிரிப்பில் தங்கள்

அர்த்தங்களைத் திணித்தும்

குழந்தைகளுக்கான கனவில் தங்கள்

கட்டளைகளைப் புகுத்தியும்

பூச்சாண்டி எனத் தனியாக

ஒன்று இருப்பதாகவும்

பயப்படுத்துகிறார்கள் பெரியவர்கள்"[6]

இக்கவிதைக்குள் சமுதாய உறுப்பினர்களான சிறுவர்கள், பெரியவர்கள் ஆகிய இரு குழுவினருக்கு இடையேயான உறவு முறை சித்திரிக்கப் பெற்றுள்ளது. இவ்விருவரைத் தாண்டி பூச்சாண்டி என்ற நிலையில் சமுதாயம் பயப்படும், அல்லது பயப்படுத்தப்பயன்படும் கற்பனைக் கருத்துருவாக்கமும் அமைந்துள்ளது. பெரியவர்களே பூச்சாண்டிகளாகக் குழந்தைகளுக்கு அமைந்து குழந்தைகளை குழந்தைகளாக வளரவிடவில்லை என்பதை இக்கவிதை தெளிவு படுத்துகிறது. எனவே குழந்தைச் சமுதாயம் பெரியவர்களின் கட்டுப்பாட்டில் இயங்கும் சுயசிந்தனை அற்ற நிலையில் வளர்க்கப்பெறும் நிலைப்பாடு உடையதாக உள்ளது என்பதை இக்கவிதை தெளிவாகக் காட்டி விடுகின்றது.

உலகம் ஒரு 'சர்க்கஸ்' கூடாரம் போன்றது என்று உலக சமுதாயத்தினை மதிப்பீடு செய்கிறது இவரின் மற்றொரு கவிதை.

“அவரவர் பால்யத்தைக் குச்சி ஐசாக

ருசித்தபடி பெரிசுகளும்

குடும்பத்திற்கான சிறு பசி தீர்க்கும்

வயர்கூடைகளுடன் அம்மாக்களும்

வலைகளின் பாதுகாப்பாற்று மேலே

நிகழ்த்தப்படும் விளையாட்டில்

வளைவு தேடும் விடலைக் கண்களும்

ப.்.பூன்களுக்கான எதிர்பார்ப்புடன்

பஞ்சுமிட்டாய்களைச் சப்பிய ரோஸ் நிற வாயுடன்

சிறுவயதினரும் நுழைகிறார்கள்

கணந்தோறும்

தொடங்குவதாகவும்

நடந்து கொண்டிருப்பதாகவும்

முடிந்து விடாததுமான

‘சர்க்கஸ்’ என்பது

கூடாரத்திற்குள் நடப்பதா என்ன?”[7]

என்று பல குடும்பங்கள் குழுமியிருக்கும் உலக சமுதாயமாக சாகசக் கூடத்தைக் காண்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இதிலும் பெண்களுக்கு உரிய பணி தன் குழந்தைகளுக்கு உணவளிப்பது என்பதாக இருப்பதைக் காணமுடிகின்றது. ஆண்களுக்கு அல்லது பெரியவர்களுக்கு உரிய பணி தன்

பால்யத்தை நினைவு கூர்வது என்பதாகக் காட்டப்பெற்றுள்ளது. இளைஞர்களின் தேடல் சாகசப் பெண்களின் உடல் வளைவுகளை நோட்டமிடுவதாக இருப்பதையும் அவர் கண்டுள்ளார். அங்கும் பெண் போகப் பொருளாக ஆண் பார்வையில் நிற்கிறாள். குழந்தைகள் ப.ஃபூன்கள் எனப்படும் விளையாட்டு காட்டும் நகைச்சுவையாளர்களை எதிர் பார்த்து நிற்பதாகவும் குறிப்பிடுகிறார். இந்நிலையில் இக்கவிதை கணந்தோறும் தொடங்குவது, நடந்து கொண்டிருப்பது, முடிந்து விடாதது சமூகச் செயல்பாடுகள் என்பதையும் காட்டி உலக சமுதாயத்தை அதன் இயல்பை அறிவிக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இவ்வாறு இவரின் கவிதைகளில் பல்வேறு சமுதாயக் கூறுகள் அமைந்திருந்தாலும் இவ்வாய்வு முழுக்க முழுக்க பெண் மையம் சார்ந்து அமைவதால் பெண் சமுதாய நிலையைப் பற்றி ஆராயும் நோக்கில் இவ்வியல் பகுதிகள் அமைக்கப்பெற்றுள்ளன.

**<u>பெண் சமுதாயம்</u>**

சமுதாயத்திற்குள் ஓர் அங்கமாக பெண் சமுதாயம் விளங்கினாலும் அச்சமுதாயம் பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகம், அலுவலகம், பேருந்து, தங்குமிடம் போன்றவற்றில் தனித்து ஒன்று கூடும் சமுதாயமாகவும் திகழ்கிறது. இவ்வொன்று கூடல்களில் பெண்களுக்கான முன்னேற்றச் செய்திகள் பரிமாறிக்கொள்ளப்பெறுகின்றன. எனவே தனித்த அடையாளம் பெற்ற சமுதாயமாக பெண் சமுதாயம் வளர்ந்து வருகிறது, தற்காலத்தில் தகவல் தொடர்பு இழைகளிலும் பெண்களுக்கான முன்னேற்றம் பரவலாக்கப்பெற்று வருகிறது.

தமிழச்சி தங்கபாண்டியன் கவிதைகளில், உரைநடைப் படைப்புகளில் சிறுமி முதல் மூதாட்டி வரையான பெண்கள் பற்றிய பதிவுகள், குடும்பம் முதல் உலக சமுதாயம் வரையான பெண்கள், உழைப்பாளிப் பெண்கள் எனப் பலதரப்பட்டவர்களும் காட்டப்பெற்றுள்ளனர். அவர்களின் வாழ்வுநிலையைப்

பற்றியும் அப்படைப்புகளில் கருத்துகள் தெரிவிக்கப்பெற்றுள்ளன. இந்நிலையில் தமிழச்சி தங்கபாண்டியனின் பெண் சமுதாயச் சிந்தனைகளை இப்பகுதி ஆராய்கின்றது.

**குடும்பப் பெண்கள்**

தமிழச்சி தங்கபாண்டியன் தன் பிறந்த வீட்டின்மீதும், புகுந்தவீட்டின் மீதும் பற்றுடையவராகத் திகழ்கிறார். இவர் தன் அப்பத்தா முதல் தன் மகள் வரையான அத்தனை குடும்பப் பெண் பாத்திரங்கள் குறித்தும் தன் கவிதைகளில் பதிவு செய்துள்ளார்.

**அப்பத்தா**

அப்பாவைப் பெற்றெடுத்த ஆத்தாள்(தாய்) அப்பத்தா ஆவாள். இவருடான பாசப்பிணைப்பினை அவரின் இறப்பின்போது கவிதையாக ஆக்கியுள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

இவரின் அப்பத்தா பல்வேறு கதைகளைச் சொல்லும் கதைசொல்லியாக இருந்துள்ளார். அவர் சீமைக்குச் சென்று செல்வனூர்காரி சிரித்த கதை முதலாக ஏழூர் மக்கள் கதைகளையும் சொல்லும் வல்லமை பெற்றவர் ஆவார். அவரின் காதுகளில் பாம்படங்கள் காலத்தின் சாட்சியாய் நின்றுகொண்டிருக்கின்றன என்று இவர் கவிதை செய்துள்ளார். இவ்வப்பத்தாவின் பிறந்த ஊர் இளஞ்சமூர் ஆகும். இவர் தன் மகனாக தங்க பாண்டியனைப் பெற்று மகிழ்ந்த நிலையையும் இவர் தன் கவிதையில் பதிவுசெய்துள்ளார். இருப்பினும் இந்த அப்பத்தா இம் என்றால் கோபப்படும் அப்பத்தாவாக விளங்கி உள்ளாள்.

“இம்மென்றால் கோபித்துத்

தாய்வீடு

தொட்டகதை”[8]

என்ற நிலைப்பாட்டையும் அப்பத்தாவிற்கு இவர் காட்டியுள்ளார். பெண்கள் கோபித்துக்கொண்டால் அவர்கள் அடைக்கலமாகச் செல்லும் இடம் அவர்களின் அம்மாவீடு என்பது இங்குப் பதிவு செய்யப்பெற்றுள்ளது. இதன்வழி தாய்மரபு பெண்களிடம் தொடர்கிறது என்பதை உணர்ந்து கொள்ளமுடிகின்றது. மேலும் பெண்களுக்குப் புகுந்த வீட்டில் கோபம் கொள்ளச் செய்யும் அளவிற்கு பெண்கள் விரும்பாத செயல்கள் நடைபெற்றுவருகிறது என்பதையும் இவ்வப்பத்தா பாத்திரம் காலத்தின் சாட்சியாக நின்று காட்டுகின்றது.

மற்றொரு கவிதையில் அப்பத்தா பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது.

"வெயில் ஏறுமுன்

வெளிமுற்றத்தில்

வெந்நீர் அடுப்பு மூட்டி

வெங்காயம் உரிக்கின்ற

. அப்பத்தா"[9]

அப்பத்தா வயதானபோதும் தன்னால் முடிந்த பணிகளை ஆற்றிவந்தமையை இந்தக்கவிதை எடுத்துரைக்கிறது. இவ்வப்பத்தாவின்பெயர் வேலு நாச்சியார் என்பதை தன் மண்வாசம் என்ற நூலில் தமிழச்சி தங்கபாண்டியன் தந்துள்ளார். அப்பத்தாவின் சுருக்குப்பை என்ற கட்டுரையில் அப்பத்தாவைப் பற்றி முழுமையாகத் தமிழச்சி தங்கபாண்டியன் விவரித்துள்ளார்.

**அம்மா**

அப்பத்தாவை அடுத்து குடும்ப அளவில் முக்கியத்துவம் பெறும் பாத்திரம் அம்மாவாகும். அம்மா பற்றிய பதிவுகள் உரைநடையிலும், கவிதையிலும் பதிவு செய்யப்பட்டுள்ளன. அம்மா முழுவதும் தன்னை அப்பாவின் நலனுக்காக அர்ப்பணித்தவளாக விளங்குகிறாள்.

“அப்பாவின் தேவைகளுக்காய்

மாடிக்கும் கீழுக்குமாய்

அலுக்காமல் அல்லாடிய

அம்மாவின் பெருவிரல்”[10]

என்ற நிலையில் அம்மாவின் இலக்கணம் மிகவும் பொருந்துகிறது.

அம்மாவின் அம்மா பற்றி அறிய மகள் ஒருத்தி ஆசைப்படுவதை ஒரு கவிதை சுட்டுகிறது.

“முக்கியமாக

அவளது தாயின் நினைவாக

அவள் எதனைப் பத்திரப்படுத்தியிருக்கிறாள்

எனவும் அம்மாவிடம் கேட்க வேண்டும்”[11]

என்ற கவிதையில் அம்மாவின் அம்மாவை (ஆயா) - மகளின் மகள் (பேத்தி) அறிய விரும்புகிறாள். இதன்வழி பெண்ணியத்தொடர்ச்சி குடும்ப உறவுகளுக்குள் நீள்கிறது என்பதை உணரமுடிகின்றது. இருப்பினும் அம்மா, அம்மாவின் அம்மா, அம்மாவின் அம்மாவின் அம்மா என எவரும் தனக்கான சேகரிப்புகள் எதுவும் இல்லாதவர்களாக, அல்லது பதிவு செய்ய மறந்தவர்களாக இருக்கிறார்கள் என்பதையே இக்கவிதை வெறுமையுடன் எதிர்நோக்குகிறது.

தன் அம்மாவைப் பற்றி உரைநடையிலும் எழுதியுள்ளார் தமிழச்சி தங்க பாண்டியன். “அன்பு, தியாகம், என்பவை மட்டுமே எல்லாப் பக்கங்களிலும் நிரப்பப்பட்டு, இருக்கும் அம்மாவின் அகராதியை அப்பாவே முழுமையாக ஆக்கிரமித்து இருந்தார். அப்பாவையும் சேர்த்து மூன்று குழந்தைகளை அவள்

போஷித்துத் தன்னையும் ஆரோக்கியமாக வைத்திருந்தாள். தனது சலிப்பற்ற உழைப்பாலும் அப்பாவின் மீதிருந்த தீராக் காதலினாலும் அவளும் அப்பாவும் குருவிக் கூடென துவங்கிய எங்கள் இல்லத்தை ஒளிரச் செய்தாள்"[12] என்று தாயின் அருமையைத் தமிழச்சி தங்கபாண்டியன் தன் மயிலிறகு மனசு நூலில் பதிவு செய்துள்ளார்.

ஒரு தாயின் இயல்பை, அனற் பொழுது என்ற கவிதையில் தந்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். இந்தக் கவிதையில், கும்பகோணம் தீவிபத்து பின்புலமாக நிற்கிறது.

'சூடாகப் பால் கொடுத்தால்

பிஞ்சு வாய் பொறுக்காது என்று

அவசரமாயினும் ஆற்றிக் கொடுத்துத் தான்

பள்ளிக்கு அனுப்புவாள்

அவளின் அந்த அம்மா

வெயில் காய விளையாட்டு வகுப்பில்

ஓடாதே என்று எப்பொழுதும் தொப்பி தந்து

வீதி வரை வந்து நினைவு படுத்துவாள்

அவனின் அந்த அம்மா"[13]

என்ற இந்தக் கவிதைப் பகுதியில், அவள், அவன் ஆகிய பாத்திரங்களும், அவளின் அம்மா, அவனின் அம்மா என்ற விளிப்பு முறைகளும் கவனிக்கத்தக்கன. ஏனெனில் இக்கவிதைப் பகுதி தன் அம்மா பற்றியது அல்ல என்பதைத் தெளிவு படுத்தவே அவளின், அவனின் என்ற சொல்லாடலைத் தமிழச்சி பயன்படுத்துகிறார். இக்கவிதை வழி அம்மா என்ற பாத்திரம் குடும்ப

நிலையில் இருந்து, பொதுநிலைக்கு மேல் எழும்பும் நிலையில் வளர்ச்சி பெற்ற பாத்திரமாகி, குடும்பப் பாத்திரமாக இருந்த அம்மா சமுதாயப் பாத்திரமாகி விடுகிறது.

இக்கவிதை அவளையும் அவனையும் நெருப்பும் காற்றும் அதுவாய் மாற்ற அதனைக் கண்டு சூரியன் இன்றைக்கு அமாவாசை என்ற அதிசயம் எனக்கும் இருந்திருந்தால் இந்தக் காலையை வரவிடாமல் செய்திருப்பேனே என்று கருதுவதாக முடிகின்றது. இவ்வவலக் கவிதையில் அவள், அவன் ஆகிய இருவரும் அதுவாக மாறிய அதாவது அ∴றிணையாக மாறிய குறிப்பு வெளிப்படுத்தப்பட்ட திறம் குறிக்கத்தக்கதாகும்.

**<u>சின்னம்மா</u>**

கருங்குளம் என்ற ஊரில் உள்ள சின்னம்மா பற்றிய குறிப்பு ஒன்றும் இவரின் கவிதைக்குள் அமைந்துள்ளது.

“கடையைப் பூட்டிவிட்டுக்

கருவாடு பதப்படுத்தி எடுத்து வரும்

கருங்குளத்துச் சின்னம்மா”[14]

என்ற கவிதையில் தன் குடும்ப நலனைக் கருத்தில் கொண்டு உணவுப் பொருளைக் கொண்டுவரும், கருங்குளம் என்ற ஊரைச் சார்ந்த சின்னம்மா குறிப்பிடப்படுகிறார்.

**<u>மகள்</u>**

கால ஓட்டத்தில் மகளும் தாயாகிறாள். அவளுக்கும் மகள் பிறக்கிறாள். இவர்களிடத்தில் இருக்கும் தொடர்பிழை, நவீனத்துவ வாழ்வு பற்றி ஒரு கவிதை விவாதிக்கிறது.

“ஒவ்வொரு கோடை விடுமுறைக்கும்

வெயில் கொளுத்தும்

என் கிராமத்திற்குப் போகிறேன் நான்

வியர்வை, வெட்கை, புழுக்கம் என

வெயிலுக்கான அர்த்தத்தினை

இணையதள அகராதியில்

அறிந்து கொள்கிறாள் என்மகள்”[15]

என்ற கவிதைக்குள் ஒரு முரண் தொனிக்கிறது. நகரவாசியாகிவிட்ட தாய் தன் தாய்வீட்டுக்குக் கோடைக்காலத்தில் வருகிறார். அதே நேரம் கோடைகாலத்தில் தன் பாட்டி வீட்டுக்கு வராமல் தன் தாய் வீட்டில் இருந்து கொண்டே வெயில் பற்றி இணையத்தில் அறிந்துகொள்கிறாள் மகள். இருப்பினும் தாயன்பு, மகளன்பு மாறவில்லை என்பதை இக்கவிதை உணர்த்துகிறது.

மற்றொரு இடத்திலும் மகளின் வெயில் பற்றிய அறியாமை வெளிப்படுகிறது.

“சுடு சோறு, கொதி கஞ்சி

வேப்பம் பழம்,

பொசுக்கியதே இல்லை ஊர்வெயில்

டயட், கோக்

குளிரூட்டப்பட்ட வீடு

‘பொசுக்குவது’ ன்னா என்ன?

எனக் கேட்கும் மகள்

அக்னியாச்சு அசலூர் வாழ்க்கை"[16]

என்ற நிலையில் தாய் அனுபவித்த சுடுசோறு, கொதி கஞ்சி, வேப்பம்பழம் போன்றவற்றை அவளின் மகள் அனுபவிக்கா நிலை வெளிப்படுத்தப்பெற்றுள்ளது. இதற்குப் பதிலாக கோக், டயட் போன்ற சொற்களுக்கு இடையில் தன் மகள் இருப்பதையும் இத்தாய் உணர்கிறாள். எனவே தன் மகளுக்குத் தெரியாத வார்த்தையாக பொசுக்குவது என்பது அமைகிறது. இதன் காரணமாக தன் கிராமத்து அக்னி அறியா அறிவிக்காத நிலையில் அசலூர் வாழ்க்கை தாய்க்கு அக்னி போல் சுடுகிறது. எனவே இந்தியப் பெண்கள் நாகரீக வாழ்க்கையை நோக்கி நகரத் தொடங்கிவிட்டார்கள் என்பதை இதன்வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

மயிலிறகு மனசு நூலில் தன் மகள் பற்றிய செய்திகளைத் தந்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"இரண்டு வருடங்களுக்கு முன்பு விபத்தில் சிக்கி நான் படுக்கையில் முடங்கியபோது, அவள் என்னை அருகிருந்து கவனிக்கையில் முதல் முறையாக அவளுக்குத் தாய்ப்பால் ஊட்டிய தருணங்களை மீட்டெடுத்தேன். இளைய சகோதரியைக் கவனித்துக்கொள்ளும் மூத்த தமக்கையாய் ஆச்சர்யமாய் அவள் வெளிப்பட்டதும் அப்போதுதான்"[17] என்ற இந்த விவரிப்பில் மகள் சகோதரியாக விளங்கிய நிலையை அறிந்து கொள்ளமுடிகின்றது. இவற்றின்வழி குடும்பம் என்பது பெண்களின் அன்பால் கட்டமைக்கப்படும் கூட்டமைப்பு என்பதை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

குடும்பப் பெண்கள் ஆணுக்குத் துணையாய் அதே நேரத்தில் தனக்கு உரிய தன்மதிப்புடன் வாழும் முறைமை சிறப்பானது என்பதைத் தமிழச்சி தங்கபாண்டினின் படைப்புகள் வழி அறிந்து கொள்ளமுடிகின்றது.

**சமுதாயப் பெண்கள்**

குடும்பம் என்ற அலகின் அடுத்த அலகு சமுதாயம் ஆகும். பெண்கள் குடும்பத்தில் பொறுமை காத்து குடும்பக் கட்டமைப்பு சிதறா வண்ணம் வாழ்ந்துவருகின்றனர். அவர்கள் சமுதாயத்திலும் அன்பு, பாசம், நேசம் கொண்டு வாழ்ந்து வரும் தன்மையினர் ஆவர். தமிழச்சி தங்கபாண்டியன் காட்டும் சமுதாப் பெண்களை இருவகைகளில் பகுக்க முடிகின்றது. அவை பின்வருமாறு.

1. கிராம சமுதாயப் பெண்கள்
2. நகர சமுதாயப் பெண்கள்

என்ற இரு நிலைப்பாட்டில் பெண் சமுதாயத்தைத் தமிழச்சி தங்கபாண்டியன் கண்டுள்ளார். அவை பற்றிய செய்திகள் பின்வருமாறு தொகுக்கப்படுகின்றன.

**கிராமத்துப் பெண்கள்**

குடும்பம் என்ற சமுதாயத்தின் அடிப்படை அலகின் அடுத்த அலகு கிராமம் என்பதாகும். கிராமத்தில் மக்கள் அன்புடனும், பாசத்துடனும் பழகும் பண்புடையவர்களாக இருக்கிறார்கள். அதனை அனுபவித்துப் பல கவிதைகளைப் புனைந்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன். கிராமத்துப் பெண் மக்கள் குறித்தும் அவர் அதிக அளவில் தன் படைப்புகளில் பகிர்ந்துள்ளார்.

**அம்மிணி**

மல்லாங்கிணறு கிராமத்தில் வாழும் பல பெண்களுள் ஒருவர் அம்மிணி அம்மா ஆவார். இவர் திரைப்பட ரசிகராகவும் விளங்கியுள்ளார். இவரின் வாழ்வினைப் பின்வரும் கவிதையில் காட்டுகிறார் தமிழச்சி தங்க பாண்டியன்.

“நடுச்சாமம் வரை

சொக்குப் போக்கிக்

கரைச்ச ஆரத்திக்

காசில் எம்.சி.ஆருக்கு படம்

அம்மிணிக்கு”[18]

என்ற நிலையில் எம்.ஜி.ஆர் எனப்படும் முன்னாள் தமிழக முதல்வர் எம்.ஜி.ராமச்சந்திரன் நடித்த படம் பார்த்து மகிழும் பெண்கள் கிராமத்தில் இருந்தது அம்மிணி என்ற பெண் பதிவின் வழி தெரியவருகிறது.

**கோமதி அக்காள்**

மல்லாங்கிணறு கிராமத்தில் வாழும் மற்றொரு பெண் கோமதி அக்கா ஆவாள். இவளுக்கு அக்கா என்ற மரியாதை அவளின் கணவன் ஒலிபெருக்கி அமைப்பாளராக விளங்குவதால் கிடைத்தது என்பது இவளுக்குப் பெருமையாக அமைகின்றது.

“மைக் செட்டுக்கார

மாமனுக்கு வாக்கப்பட்டதால்

கூடுதல் மருவாதி

கோமதியக்காவுக்கு”[19]

என்ற நிலையில் கோமதி அக்கா ஒலிபெருக்கி அமைப்பாளரின் மனைவி என்பதால் பெருமை கொள்கிறாள். இதன்வழி கிராமத்தில் கணவனை முன்வைத்து அவர்களின் தொழில் அடிப்படை சார்ந்து மரியாதை மனைவிக்குக் கிடைக்கிறது என்பது தெரியவருகிறது

**ஒச்சம்மா**.

கரிசல் மண் பகுதியில் ஆந்திராவில் இருந்து இங்கு வந்துக் குடியேறிய மக்களும் வாழ்ந்து வருகின்றனர். அவர்களுள் ஒருத்தியாக மல்லாங்கிணற்றில் வாழ்ந்தவள் ஒச்சம்மா. அவள் இட்லி சுட்டு விற்கும் தொழில் பார்ப்பவள்.

அவளிடம் சற்று பணம் சேர்ந்து வருகிறது. இதனைப் பின்வரும் கவிதை பதிவு செய்கிறது.

"எத்தினிக்கா இட்லி சுடுறதுன்னு
பொய்யாச் சடச்சுக்
சுருக்குப் பை கனக்கும் ஒச்சம்மாவுக்கு"[20]

என்ற நிலையில் தன் பொருளாதாரச் சேமிப்பினைச் சுருக்குப் பையில் சேமிக்கும் ஒச்சம்மா வழியாகக் கிராமத்துப் பெண்கள் சேமிக்கும் பழக்கமுடையவர்கள் என்பது தெரியவருகிறது.

**காமாட்சிப் பாட்டி**

மல்லாங்கிணற்றில் வாழும் வயது முதிர்ந்த பாட்டி காமாட்சி பாட்டியாவாள். இவள் கிராம மக்களின் இன்ப துன்பங்களில் பங்கெடுத்துக் கொள்பவள். அவளைப் பற்றி

"மோருக்கு வந்திருந்தா
பரவாயில்லை
பாலுக்கே வந்திருச்சே எனக்
கேதம் கேட்க வந்த
காமாட்சிப் பாட்டி"[21]

என்று கவிதை வரையப் பெற்றுள்ளது. இக்கவிக் குறிப்பின்படி, காமாட்சிப் பாட்டி பிறர் வீட்டுத் துயரங்களைத் தன் துயரங்களாகக் கொள்ளும் பெண் தன்மையை உணரமுடிகின்றது. மேலும் மோர் என்பது வாழ்நாள் அதிகமாகி நிறைவை எட்டிவிட்ட பொருள். ஆனால் பால் என்பது இன்னும் மோராகி, வெண்ணெய் நிலைப்பட்டு, நெய்யாக வேண்டும். இதன்வழி இளைய பருவத்தில்

இறந்துபோய் முதலுக்கே மோசமாகிவிட்ட தன்மையை காமாட்சிப் பாட்டியின் அழுகை உணர்த்துகிறது. கிராமப் பெண்களின் சொலவடையும் பெண் சார்புடைய பொருள்களை மையமிட்டே அமைகிறது என்பதையும் இதன்வழி உணரமுடிகின்றது.

**கச்சம்மா**

கச்ச்சம்மா என்ற பாத்திரம் தமிழச்சி குடும்பத்துடன் அதிக நெருக்கமுடைய பாத்திரமாக விளங்குகிறது. இப்பாத்திரம் பற்றிப் பல குறிப்புகள் பல இடங்களில் சுட்டப்பெற்றுள்ளன.

"காடு மேடலைந்து

கரிசலாங்கண்ணி

கொண்டுவரும்

கச்சம்மா"[22]

என்ற நிலையில் தமிழச்சி தங்கபாண்டியனின் குடும்பத்திற்குத் தேவையானதைத் தேடிப் பிடித்துத் தந்திடும் பணியாளராகக் கச்சம்மா விளங்குகிறாள். அவளின் பொங்கல் விழா பற்றிய கவிதை ஒன்றும் எஞ்சோட்டுப் பெண் தொகுப்பில் தொடருகின்றது.

"பெருக்கிக் கோலமிட்ட முற்றம்

செம்மண் வரியிட்ட அடுப்பு

மஞ்சள் தடவிய மண்பானையுடன்

பீய்ச்சிய ஆட்டுப்பாலும் சுமந்திருக்கும்…

கொதி வந்ததும் உதிர்த்துப் போட

ஒன்றிரண்டு வெல்லக்கட்டியும்

விட்டு இறக்க ஒரு சொட்டு நெய்யும் பக்கத்தில்

விளைச்சல் பொய்த்ததில்

கடன் சொல்லிக் கடை அரிசி வாங்கக்

காலையில் வரிசைக்குப் போன

கழிசடைப் பயலைத்தான்

இன்னும் காணோம்”[23]

என்ற கவிதைக்குத் தலைப்பு கச்சம்மாவின் பொங்கல் என்பதாகும். இதில் கழிசடைப் பயல் என்பது பெரும்பாலும் கணவனைத்தான் குறித்தாக வேண்டும். இல்லை என்றால் மகனையும் குறிக்கலாம். வறுமை நிலையிலும் செம்மையாய்ப் பொங்கல் வைத்துக் கொண்டாடும் கிராம மக்களின் மரபுசார் வாழ்வினை இக்கவிதை படம் பிடித்துக்காட்டுகிறது,

<u>பாக்கியம்</u>

பாக்கியம் என்பவள் ஒப்பந்த அடிப்படையில் சிற்றாள் வேலைக்கு ஆள்களை அனுப்பும் ஒருங்கிணைப்பாளராக இருந்தவள். அவளைப் பற்றிய நெடுங்கவிதை ஒன்றும் எஞ்சோட்டுப் பெண் தொகுப்பில் உள்ளது. பாக்கியம் என்பவள் ரவிக்கை அணியமாட்டாள். இரு தோள்களிலும் அடர்த்தியான பச்சை குத்தப்பெற்றிருக்கும். மூச்சுப்பிடிப்பிற்கு வெறும் சொம்பை முதுகில் கவிழ்த்து வைத்தியம் செய்வாள். அந்த மருத்துவம் வலி நிவாரணத்தைத் தந்து விடும். இதற்குப் பலனாக அவள் காப்பியும், வெற்றிலையும் போதுமென்பாள். இவள் பலரின் மனதிற்கும் வைத்தியம் பார்க்கும் திறமைசாலி ஆவாள். காலையில் வயல் வேலைக்கு ஆள் இறக்கி அவர்களை வேலை வாங்கி முடிப்பதில் கெட்டிக்காரி. அதே நேரத்தில் வயல் புறத்தில் உள்ள இலந்தை, தட்டப்

பயிற்றங்காய், குப்பைமேனி, பொன்னாங்கண்ணி போன்றவற்றைப் பிடுங்கித் தன் சேலையில் முடிந்து வைத்துக்கொள்வாள். அதனைத் தனக்குத் தெரிந்த வீடுகளில் தந்து மகிழ்வாள்.

கூலிகளை கணக்கிட்டுத் தருவதில் வல்லவள். அதனை நினைவில் வைத்துக்கொள்வதிலும் வல்லவள். இந்நினைவு சக்திக்குக் காரணம் தான் உண்ணும் வல்லாரை என்பாள். நெல் விளைந்தபின் அதனை அவித்து அரிசியாக்கித் தருவதும் அவளின் மேற்பார்வையில் நடக்கும்.

பாக்கியம், பிரண்டை பிடுங்கித் தனக்குத் தருவதற்காக தான் சண்டையிட்ட குடும்பத்து வயலிலும் அதனைப் பிடுங்கி நிற்கும் பாசமுடையவள். இப்படி ஊருக்கு உழைத்தவளுக்கும் சோதனை வந்தது.

அவளின் பேரன் மீது பஞ்சாயத்தார் நடவடிக்கை மேற்கொள்ள அவள் சொல்லாமல் கொள்ளாமல் பக்கத்தில் உள்ள நகரத்திற்கு இடம்பெயர்கிறாள். இந்த நினைவைப் பகிரும் கவிதை பின்வருமாறு.

‘பேரன் மேல் பஞ்சாயத்தைக்

கூட்டிய பிணக்கில்

பக்கத்து டவுனுக்குச்

சொல்லாமல் குடி போக

என் நடு முதுகில்

நலுங்காமல் அழுத்தி அவள்

மூச்சுப் பிடிப்பெடுத்த

வெண்கலச் சொம்பு மட்டும்

என்னோடு காத்திருக்கும்

விசனம் குறைந்து வரும்

பாக்கியத்தின் குரலுக்காய்

காய்ந்த வெற்றிலைச் செல்லத்தோடு"[24]

என்ற கவிதையில் நகரம் நகர்ந்த, பாக்கியத்தின் நினைவாக வெண்கலச் செம்பும், வெற்றிலை செல்லமும் இருப்பதாக இக்கவிதை சொல்கிறது

இவர்கள் இருவரைப் பற்றி மண்வாசம் நூலில் பின்வருமாறு குறிப்பிடுகிறார் தமிழச்சி தங்கபாண்டிய்ன்.

"கச்சம்மாவும் பாக்கியமும் என் சிறுவயது முதல் நான் அறிந்த எனது ஊர்ப் பெண்கள். கடும் உழைப்பாளிகள். வாய்ப் பேச்சிலும், என் மீதான வாஞ்சையிலும் விஞ்சுவதற்கு முடியாதவர்கள். அடுக்கு மல்லியைப்போல எப்போதும் சேர்ந்தே இருந்தவர்கள். என் விடுமுறை நாட்கள் அனைத்தையும் ஊர்க் கதைகளால் உயிரூட்டியவர்கள் அதனூடாக மனிதர்களின் சில புதிரான பக்கங்களையும், மகிழ்ச்சியான எளிய சூத்திரங்களையும் எனக்குக் கற்றுத்தந்தவர்கள். தங்களது உடல் உழைப்பால் என் வீட்டுத் தோட்டத்தையும், குறையாத அன்பால் எங்கள் குடுபத்தையும் ஒளிரச் செய்தவர்கள்"[25] என்ற குறிப்பு கிராமத்து: மக்கள் உடல், உள்ளம் ஆகியவற்றால் உண்மையுடன் பழகுபவர்கள் என்பதை உணர்ந்து: கொள்ளமுடிகின்றது,

**எல்லம்மா**

எல்லம்மா என்ற பெண் தமிழச்சி தங்கபாண்டியனின் இளம் பருவத் தோழியாக இருந்தவள். அவள் பற்றிய குறிப்பொன்றையும் ஒரு கவிதை கொண்டுள்ளது.

"கிராமத்திலிருந்து வந்த

கொடிக்கா பிஞ்சுகளைப்

பிய்த்து உண்கையில்

கால் மாற்றி ஓடிய

சூடுதணிய

கருவேல மரம் ஒதுங்கிய

எல்லம்மாவின்

காந்தல் ருசி அதில்”[26]

என்ற நிலையில் இக்கவிதையில் இளம்பருவத்தில் கால் சுட, கொடிக்காய் பிஞ்சுகளைப் பறித்துத் தந்த எல்லம்மாவின் அன்பு தெரிகிறது. கிராமத்து மக்கள் அன்புடன் பகிர்ந்து உண்பதை வழக்கமாக உடையவர்கள் என்பதை இக்கவிதை காட்டுகிறது.

எல்லம்மா கருவாச்சி என்றும் அழைக்கப்பெற்றிருக்க வேண்டும். அவளைக் கருவாச்சியாக்கிப் பின்வருமாறு கவிதைக்குள் பதிவுசெய்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

‘இளம் பிராயத்தில் எனக்காய்

எப்பொழுது கேட்டாலும்

கொடுக்காப்புளி பறித்து வரும்

கருவாச்சியின் தலையிலிருந்த

வேப்ப எண்ணெய் எனக்கு

என்றுமே குமட்டியதில்லை”[27]

என்ற கவிதையில் மீண்டும் கொடிக்காய் புளியும், கருவாச்சி நினைவு படுத்தப்படுகிறார்கள். தமிழச்சி தங்கபாண்டியன் நினைவுகளில் அவர்தம்

கிராமத்துப் பெண்கள் என்றும் நினைவில் நீங்காமல் இருக்கிறார்கள் என்பதற்கு இந்தக் கவிதை சிறந்த சான்றாகும்.

**பொம்மக்கா**

பொம்மக்கா என்பவள் வீட்டைச் சுத்தமாக்கும் பணி செய்யும் பெண் ஆவாள். அவள் பற்றியும் ஒரு கவிதை செய்யப்பெற்றுள்ளது.

" கடுமையா வசவுடன்

கால் பொசுக்க

வாசல் கூட்டும் பொம்மக்காவைப் போய்

கால் சுற்றும் பூனையாய்க்

கொஞ்சுகிறது இந்த வெயில்"[28]

என்ற கவிதையில் பொம்மக்கா வெயில் எனப் பாராமல் சுத்தம் செய்வதைத் தன் செவ்விய பணியாகச் செய்து வருவது பாராட்டப்பெற்றுள்ளது. இருப்பினும் அவளுக்கு அளிக்கப்பெறுவது கடுமை வசவுகள் என்பதும் இங்கு எண்ணத்தக்கது.

**கருவாச்சி**

கருவாச்சி என்ற பெண் பேருந்தில் சென்ற அனுபவம் சிறு கவிதையாக்கப்பெற்றுள்ளது. பேருந்தில் அவள் பட்ட இன்னல்கள் இக்கவிதைக்குள் படிமமாக உறைந்துள்ளன.

"இடிபட்டு மரத்திருந்த இடுப்பையும்

நெரிசலில் சவமான உடம்பையும்

வெயில் உலர்த்தி

மீட்டெடுக்கிறாள்

கரிசலின் பேருந்து நிலைய இறக்கம்

ஒன்றில் கருவாச்சி”[29]

இக்கவிதையில் பேருந்து நிறுத்தம் ஒன்றில் இறங்கிய கருவாச்சிப் பெண், உடன் நிழல் தேடி ஓடவில்லை. மாறாக தன் உடலை உணர்வறச் செய்த, நின்று மரமாகிப் போன இடுப்பை வெயிலில் உலர்த்தி தன்னைச் சரிசெய்து கொள்கிறாள் என்று கவிதை படைத்துள்ளார்.

<u>முடியனூர்க் கிழவி</u>

முடியனூர் என்ற ஊரைச் சார்ந்த முதியவள் ஒருத்தியும் தமிழச்சி தங்க பாண்டியன் குடும்பத்தாருக்கு அவ்வப்போது உதவியுள்ளாள். அவளின் இறப்பு செய்தி வந்ததும் அவள் பற்றிய நினைவுகளைத் தொகுத்து ஒரு நெடுங்கவிதையை எழுதியுள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

வெயிலில் நடந்து தடிப்பேறிய கால்கள், கருப்பு வளையம் அணிந்த முடியுடைய தலை, தோல் சுருங்கிய உடல் என்ற வடிவுடன் முடியனூர் கிழவி கவிதைக்குள் உலா வருகிறாள். அவளும் ஒரு கதைசொல்லியாவாள். இவள் தமிழச்சி தங்கபாண்டியனுக்கு அம்மை கண்டபோது அதன் உக்கிரம் தீர முத்தாலம்மனுக்குத் தீச்சட்டி எடுத்தாள். பாண்டி முனிக்குத் தலைமுடியைக் காணிக்கையாக்கினாள்.

“ஒரு குந்துமணித்

தங்கம் போட்டுக்

கட்டையிலே போக

வேண்டுமெனக்

கடைசி ஆசை வைத்திருந்த

எனக்காய் மெதுவடை

முடிந்து வரும்

முடியனூர்க் கிழவி

சாகும் பொழுது போட்டிருந்தாளாம்

சுற்றுலா போன நினைவாய்

விளையாட்டாய் நான்

வாங்கிக் கொடுத்திருந்த

பிள்ளையார் படம் போட்ட

பித்தளை மோதிரத்தை”[30]

என்ற கவிதையில், முடியனூர் கிழவியின் நிராசை பதிவாகியுள்ளது. தங்க அணிகலன் அணிய வேண்டும் என்று முடியனூர் கிழவியின் ஆசை கடைசிவரை நிறைவேறவேயில்லை. அதற்குப் பதிலாக பித்தளை மோதிரம் அவளின் ஆசையை நிறைவேற்றி வைத்திருப்பதை இக்கவிதை காட்டுகின்றது. இதன் வழி பெண்கள் அணிகலன்கள் மேல் கொண்டுள்ள ஆசை தெரியவருகிறது. ஆனால் அவ்வாசை நிராசையாகவே ஆகிவிடுகிறது என்பதும் இதன் வழி தெரியவருகிறது.

. மண்வாசம் என்ற நூலில் கிராமத்து மருத்துவம் பற்றி எழுதியுள்ளார். இந்நூலில் தனக்குக் கிராமத்து மருத்துவம் சொன்ன, பல கிராமத்துப் பெண்களை அறிமுகம் செய்துள்ளார். வல்லார நெல்லி, பெரியக்கா பாட்டி, கெம்பம்மா, ராசக்கா, எல்லம்மா, கைப்பூர்ணம், சுப்பு, பூண்டுக்காரம்மா, ரெங்கம்மா போன்றோரின் கைவைத்திய முறைகளை அவர்களின்

சொல்வழக்குகளுடன் பதிவு செய்துள்ளார். மேலும் இந்நூலில் தமிழச்சி தங்கபாண்டியனின் உறவினர்கள் பற்றிய கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. இவை முந்தைய இயலில் சுட்டப்பெற்றுள்ளதால் இங்கு விவரிக்கப்படவில்லை.

இவ்வாறு கிராமத்துப் பெண்கள் ஆறாத அன்பும், அரவணைப்பும் கொண்ட பெண் நலம் விரும்பிகளாக இருந்துள்ளனர் என்பது தெரியவருகின்றது. இவர்கள் அனைவரும் கிராமக் கட்டுப்பாடு, குடும்ப கட்டமைப்பு போன்றவற்றில் கொஞ்சமும் தவறாமல் வாழ்க்கை நடத்தும் வெகு இயல்பான பெண்களாக அறியப்படுகின்றனர். நன்மை செய்துவிட்டு, தீமை தனக்கு வரும்போது தான்மட்டும் அனுபவிக்கும் பெரிய மனதுக்காரர்களாக கிராமத்துப் பெண்களை உணர்ந்துகொள்ள முடிகின்றது.

## நகர சமுதாயப் பெண்கள்

கிராமத்திலிருந்து நகரத்திற்குக் குடிபெயர்ந்தவர் தமிழச்சி தங்கபாண்டியன். அவரின் நினைவுகள் எப்போதும் கிராமத்தைச் சுற்றிய வண்ணமே இருக்கும். இந்நிலையில், திருமணம், பணி, குடும்பம் ஆகியன கருதி அவர் சென்னையில் வசிக்க வேண்டியவராகிறார். இந்நேரத்தில் அவரின் மனம் கிராமத்தையும் நகரத்தையும் ஒப்பு வைத்துப் பார்க்கிறது. அது தீப்பெட்டிப் பொன்வண்டு என்ற கவிதையாக வெளிப்படுகிறது. அக்கவிதையில் இருக்கும் கிராமவாழ்க்கை நகர வாழ்க்கை வேறுபாடுகளைப் பட்டியலாகக் காண்பது வேறுபாட்டை எளிதில் புரிந்துகொள்ள உதவும் என்ற நிலையில் பின்வரும் பட்டியல் தரப்பெறுகிறது.

| கிராம வாழ்க்கை | நகர வாழ்க்கை |
| --- | --- |
| வயல் ஓரம் மயில் அடையக் கதிர் கரையும் அந்திப்பொழுது | கொசு வராமல் இருப்பதற்காக சன்னல் சாத்தப்படும் மாலை |
| சமையிலில் இருந்து சகலமும் பரிமாறும் உறவுகள் | பெயர் கூட அறிந்திராத அயலார்கள் |
| தீப்பெட்டியில் பொன் வண்டு அடைத்து வாழும் வாழ்க்கை | பேருந்து இரைச்சல், தொலைக்காட்சி, கணினி ஆகியவற்றால் அன்பு தொலைக்கும் நிலை, கூட்டுப் புழு வாழ்க்கை |

என்று கிராம வாழ்விற்கும் நகர வாழ்விற்கும் வேற்றுமை காண்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன். இந்நிலையில் அவர் கூட்டுப்புழு வாழ்க்கையாய் நகர மனிதர்களுடன் வாழ்ந்து நிற்கிறார். வாழ்ந்தாக வேண்டிய நெருக்கடியில் நகர நெரிசலில் அவள் உள்ளம் சிக்கித் தவிக்கிறது.

இருப்பினும் அவரின் கவிதைகளில் நகரப்பெண் சமுதாயத்தின் கூறுகள் பதிவு செய்யப்பெற்றுள்ளன. உழைக்கும் பெண்கள், ஆதரவற்ற சிறுமியர், வேசியர் போன்ற நகர சமுதாயம் சார்ந்த பெண்களின் வாழ்க்கையையும் அவரின் கவிதை எடுத்துரைத்துள்ளது.

மயிலிறகு மனசு என்ற இவரின் உரைநடை நூலில் இவரின் நகர வாழ்வில் கிடைத்த பெண் நட்புகளைப் பற்றி அறிந்துகொள்ளமுடிகின்றது. ராதிகா, ரோகினி, இளம்பிறை, பாண்டியம்மா, ஜெயராணி, லலிதா, அருள்மொழி, சரசுவதி, நிர்மலா, கோவிந்தம்மா, மலர்மாலா போன்ற பெண்கள் இவருக்குக் கிடைத்த நகர் சார்ந்த நட்புகள் ஆ:கும். இவர்கள் குறித்து முன் இயலான பெண்ணிய நோக்கில் உரைநடைப் படைப்புகள் பகுதியில் காட்டப்பெற்றிருப்பதால் இங்கு அவை விவரிக்கப்படவில்லை.

**நகரவாசியான பெண்**

கிராமத்தில் இருந்து நகரத்திற்கு மணமுடித்துப் போய்விடலாம் என்று எண்ணும் பெண்ணின் மனப்பாங்கினைப் பின்வரும் சிறுகவிதை எடுத்துரைக்கிறது.

“வாக்கப்பட்டுப் போகும் இடத்தில்

கியாஸ் அடுப்பு

பற்றிய கனவுகளுடன்

வந்து போகின்றது.

வறட்டி தட்டுவதற்கு வாகான

ஒவ்வொரு வெயிற்காலமும்”[31]

என்ற நிலையில் பகட்டான வாழ்க்கை வாழ ஆசைப்படும் கிராமப்பெண்ணின் சிந்தனையாக இந்தக் கவிதை அமைகிறது. ஆனால் அவள் அவ்வாறு நகர வாழ்விற்குச் சென்று சேரும்வரை வறட்டி தட்டுவதே அவளின் இயல்பான வாழ்க்கை என்பதும் தெரியவருகிறது.

**வேலை நிறுத்தமும் பெண்ணும்**

பலரும் களமிறங்கி வேலை நிறுத்தப் போராட்டத்தில் கலந்துகொள்கின்றனர். ஆனால் ஒரு பெண் மட்டும் கலந்துகொள்ள இயலாத சூழல் ஏற்பட்டுவிடுகிறது. இதனை அடிப்படையாக வைத்துப் பின்வரும் கவிதை புனையப்பெற்றுள்ளது.

“வீடுவாசல் சூழல் என

வியாக்கியானம் பேசி

நான் வேலை

நிறுத்தத்திலிருந்து

விலகிக் கொண்ட அன்றுமட்டும்"[32]

என்பன முன்சுட்டப்பெற்ற சூழலில் எழுதப்பெற்ற கவிதையின் நிறைவு வரிகளாகும். இக்கவிதையின் முன்பகுதியில் அப்பெண் போராட்டத்தில் கலந்துகொள்ளாமல் பணி செய்யக் கிளம்பும் நிலையில் அவள் செய்து கொள்ளும் அலங்காரங்கள் அவளைக் கேலி செய்வதாக இக்கவிதை படைக்கப்பெற்றுள்ளது.

**வேசி**

நகரத்தில் மிகவும் கீழ்நிலைக்குப் பெண்கள் தள்ளப்படுகிறார்கள் என்பதன் வெளிப்பாடாக வேசி என்ற நிலை அமைவதாகத் தமிழச்சி தங்கபாண்டியன் கருதுகிறார். வேசி என்னும் விலைமகளின் பின்னணியில் உள்ள பெண் மனத்தையும் உணர்ந்து அவர் கவிதை படைக்கிறார்.

"உள்ளிருக்கும் கயமையின் ஒரு துளியாய்க்

கண்மையாய்த் தீட்டிக்கொண்டன

இருவிழிகளும்

கழற்றி எறிந்துவிட்ட

மனசாட்சியை

எடுத்து மாட்டிக்கொண்டது கைக்கடிகாரம்

.... ஆன்மாவை அடகு வைத்து

அவலட்சணத்தை

அணிந்து கொள்வதாக

ஆட்சேபம் தெரிவித்தன

வளையல்கள்”[33]

என்ற கேலி நிலைக்குப் போராட்டத்திற்குச் செல்லாத பெண் ஆட்படுகிறாள். இவ்வகையில் பெண்கள் போராடத் தயங்குவதன் பின்புலம் யாதென்றால் குடும்பம் என்பது தெரியவரும்.

வேசியே உரைப்பதாக ஒரு கவிதை அமைகிறது. நான் வேசியாக்கப்பட வேண்டும் என்று கடவுளிடம் எதுவும் மனு கொடுக்கவில்லை. சமுதாயம் என்னை அந்நிலைக்குத் தள்ளிவிட்டது. எனக்கு ஏதேனும் வியாதி வந்து என்னைத் துன்புறுத்துமோ என்று கூட பயப்பட முடியாத அளவிற்கு நான் எப்போதும் போதையில் இருக்கவைக்கப்படுகிறேன். தற்கொலைக்குக் கூட என்னால் தயாராக இயலாது. அதற்கும் ஒரு தைரியம், தெம்பு வேண்டும். அதனையும் முற்றிலுமாக இந்தச் சமுதாயம் துடைத்து எடுத்துச் சென்றுவிட்டது. இச்சூழலில் பின்வரும் கவிதை அடிகள் கூர்ந்து கவனிக்கத்தக்கவையாக விளங்குகின்றன.

“ தற்கொலை முடிவினை யோசிப்பதற்குக் கூட

வயிறு நிறைந்த உணவின் தெம்பு

தேவை என்பதை அறிவேன்

எப்படி நேர்ந்தது எனக்கு எனும்

சுய இரக்கத்தின் ஒரு நொடி

வாய்க்காமல் விடைபெற்றால் போதும்

“விண்ணப்பிக்காமலே அளிக்கப்பட்ட அருட்கொடை”

என்றொரு கல்லறை வாசம்தான்

வேடிக்கை பார்க்கின்ற உங்களில் யாராவது

அதனைப் பூர்த்தி செய்தால்

கடவுள் உங்களை இரட்சிக்கட்டும்"[34]

துன்புற்று வாழ்வதை விட யாராவது என்னைக் கொன்றால் தேவலாம் என்று கருணை மனுவை அளிக்கும் நிலைக்கு இப்பெண் தள்ளப்பட்டுள்ளாள். சமுதாயத்தின் கேவல நிலைக்கு இது சான்று. ஆணாதிக்க நிலைப்பாட்டுக்கு இது பெருஞ்சான்று.

மற்றொரு கவிதையில்

"பசி தீர்த்த அடிவயிற்றில்

என் நிலத்தில்

எனக்குள் காமம் கிளர்த்தும் இந்நிலவு

பூகம்பம் தீய்ந்த நிலமொன்றில்

அவமானப்படுத்தப்பட்ட வேசியின்

அறியப்படாத துயரமாக இருக்கலாம்"[35]

என்ற கவிதையில் வேசி அறியப்படா துயரங்கள் பல உடையவளாக இருக்கிறாள் என்பதை அறியமுடிகின்றது.

**மாடத்தி**

மாடத்தி என்றொரு பெண் குழுந்தை, தன் தந்தையை இழந்தநிலையில் மாற்றுத் திறனாளியாக விளங்கும் தாய், தம்முடன் பிறந்தோர் போன்றோரைக் காப்பாற்ற இயலாமல் தவிக்கும் நிலையில் அவளுக்கு ஆறுதல்

சொல்லும்படியாக ஒரு கவிதை படைக்கப்பெற்றுள்ளது. இக்கவிதைக்குத் தலைப்பு மாடத்தி என வைக்கப்பெற்றுள்ளது. இத்தலைப்பிற்கு ஒரு குறிப்பும் தரப்பெற்றுள்ளது. அது பின்வருமாறு. திடீரென தந்தையை இழந்துவிட்ட நிலையில் ஊனமுற்ற தாயுடனும் ஒரு சகோதரியுடனும் இருக்கின்ற ஒரு சலவைத் தொழிலாளியின் மகள்”[36] என்ற குறிப்பினை முன்வைத்து இக்கவிதையைப் படிக்கவேண்டும்.

‘உன் புன்னகையைக் கவ்வித் தூக்கிய
கழுகென விரையும் காலத்தின்
முன் விக்கித்தபடி நிற்கிறாய்
மிடறு நீரையும் உறிஞ்சிய
மண்தரையாய் நீளும் அது
மிஞ்சிய உன் எச்சிலையும்
விழுங்கும் கோரப் பசியுடன் காத்திருக்கிறது.
உன் யௌவனத்தின் வியப்பையும், உல்லாசத்தையும்
சிதைக்கின்ற கிழநகங்களுடன் அது மிக
அருகில் மறைந்திருக்கிறது.
தன் பூஞ்சைக் கண்களுடன்
உன் அருகிருக்கும் தாயின்
வயோதிகத்தின் மீது
பெருநம்பிக்கை வைத்து
இரையின் வடிவை நினைவில்

சுகித்துக் கிளர்ந்து கொண்டிருக்கும் அது,

உன் துளிக் கண்ணீர

பெருமடையாய் விடும்

இரகசிய வழிக்காக உறங்காதிருக்கிறது" [37]

என்ற நிலையில் மாடத்தியின் தோல்வியை எதிர்பார்த்துக் காலம் காத்துக் கிடக்கிறது என்று இக்கவிதை நிதர்சனத்தைச் சொல்லி அவளை கலங்கிடாமல் காக்கிறது.

நகர சமுதாயத்தில் பெண்கள் பாலியல் அடிப்படையில் துன்புறுத்தலுக்கு ஆளாகும் நிலைப்பாடு இருக்கிறது என்பதை இக்கவிதைகள் விளக்கிநிற்கின்றன.

இவ்வாறு நகரத்தில் வாழும் பெண்கள் பெருத்த எதிர்பார்ப்பு, குடும்பத்திற்காக தன் உரிமையைக் கோர முடியாத நிலை, பாலியல் துயரம் போன்றவற்றிற்கு ஆளாகி நிற்கின்றனர் என்பதைத் தமிழச்சியின் கவிதைகள் காட்டுகின்றன.

**<u>உலக சமுதாயப் பெண்கள்</u>**

உலக சமுதாயப் பெண்கள் பற்றியும் தமிழச்சி தங்கபாண்டியன் படைப்புகளில் காணமுடிகின்றது. பாதிக்கப்பெற்ற பல நாடுகள் சார்ந்த பெண்களுக்காக இவர் தம் கவிதை வழியாகக் குரல் தருகிறார். அமெரிக்கா, இலங்கை, அரேபிய நாடு போன்றவற்றில் நடத்தப்பெற்ற பெண்களுக்கு எதிரான நிகழ்வுகளுக்கு இவர் கண்டனத்தைத் தன் கவிதை வழி தெரிவிக்கின்றார்.

**<u>பங்களாதேஷ்</u>**

பங்களாதேஷ் நாட்டின் கவிஞராக விளங்கும் தஸ்லீமா நஸ்ரீன் பற்றியும் கவிதை புனைந்துள்ளார். தமிழச்சி தங்கபாண்டியன். தஸ்லீமா நஸ்ரின் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்து இரண்டாம் ஆண்டு ஆகஸ்டு மாதம்

இருபத்தைந்தாம் நாள் பிறந்தவர். ஆசியப் பெண்கள் எதிர் கொள்ளும் பிரச்சனைகளை எழுதித் தன் எழுத்துப் பயணத்தை இவர் தொடர்ந்தார். இவர் நபசித்ரா என்ற கட்டுரைத்தொகுதியையும், லஜ்ஜா என்ற நாவலையும், வங்கமொழியில் தன் சுயசரிதையை (நான்கு பாகங்கள்) யும், கவிதைகளையும் எழுதி உள்ளார். இவரின் எழுத்துகள் மரபு சாரந்த இசுலாமியர்களுக்கு எதிரானவை என்ற நிலையில் அவரின் எழுத்துக்கு எதிர்ப்பு கிளம்பியது. இவரின் தலைக்கு விலை வைக்கப்பட்டது. இந்நிலையில் இவர் பிறநாடுகளில் தங்கி வாழ்ந்து வருகிறார். இவரின் பெண்எழுத்துக்கு ஆதரவு தரும் நிலையில் தமிழச்சி˙கவிதை புனைந்துள்ளார்.

" மலிவான அரசியல் வலி நிவாரணிகளின் ஓத்தடத்தில்

மறந்தும் கூட ஒரு துளி கண்ணீரை உதிர்த்து விடாதே

உலர விட்டு விடாதே

உன் நெற்றிக் காயம் காட்டி

நாளை சோறூட்ட நேரிடலாம் ஒரு சிறுமிக்கு"[38]

என்ற கவிதையின் தலைப்பு தஸ்லீமாவிற்கு என்று வைக்கப்பட்டுள்ளது. தஸ்லீமா துன்பம் கண்டு கண்ணீர் சிந்திவிடாதே என்று உலகப் பெண்ணிற்கு தைரியம் சொல்கிறது இக்கவிதை.

**<u>ஆப்கானிஸ்தான் பெண்ணான ஆயிஷா</u>**

ஆப்கானிஸ்தானில் ஆயிஷா என்ற பெண் தாலிபான் தீவிரவாதிகளால் மூக்கறுபட்ட பெண் என்ற குறிப்புடன் எள்ளுப் பூ நாசியும், அரேபிய தேசத்தின் வாசனைத் திரவியமும் என்ற தலைப்பில் தமிழச்சி தங்கபாண்டியனால் கவிதை படைக்கப்பெற்றுள்ளது. பதினெட்டு வயதான ஆயிஷா என்ற பெண் தாலிபான் தீவிரவாதிக்குப் பத்து வயதில் மணமுடித்துவைக்கப்பட்டார். அவருக்குப் பல

இன்னல்களை அவளின் கணவனும், கணவனுடைய சகோதரர்களும், கணவனின் தந்தையும் செய்து வந்தனர். இதனைத் தாங்க முடியாத ஆயிஷா வீட்டை விட்டு வெளியேறுகிறார். அவ்வாறு வெளியேறிய அவரைக் கண்டுபிடித்துக் கணவர் தாலிபான் நீதிமன்றத்தில் நிறுத்துகிறார். அங்குக் கணவனை விட்டு ஓடிய ஆயிஷாவிற்கு காது, மூக்கு அறுக்கப்பட தண்டனை வழங்கப்படுகிறது. அத்தண்டனையையும் அவளின் கணவனே செய்துமுடிக்கிறான்.உயிர் பிழைத்த ஆயிஷா காபூலில் அகதிகள் முகாமில் தங்கி வருகிறார். அவருக்கு உலக அளவில் மருத்துவ உதவி செய்ய ஆதரவு பெருகி வருகிறது. [39]

இந்நிலையில் இப்பெண்ணிற்கு ஆதரவாகக் கவிதை ஒன்றைப் படைத்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"உலகின் மிக அழகிய பெண்

இன்றைய தேதிக்கு நீதான் ஆயிஷா

எங்கெல்லாம் ஒருபெண்

அநீதியாக வதைக்கப்படுகிறாளோ

அங்கெல்லாம்

அறுபட்ட உனது மூக்கின் எச்சங்கள்

நீதிக்கு முன்பாகச் சென்று முறையிடட்டும்

முதன் முதலாக வாய்க்குப் பதில்

மூக்கு புன்னகைப்பதை

அவமானத்தின் ரணம் மிச்சமிருக்கும்

உன் சீர்திருத்தப்பட்ட

முகத்தில்தான் பார்த்தேன்"[40]

என்ற கவிதையில் சீர்திருத்தப்பட்ட முகம் என்ற குறிப்பு மிக முக்கியமானது. பெண்ணின் மூக்கை அறுப்பது ஆணின் தண்டனை என்றால் அதனை மீளவும் சரிசெய்து சீர்திருத்திக் கொள்வது தங்களின் எழுச்சிப் பணி என்ற நிலையில் இக்கவிதை ஆயிஷாவின் வெற்றியைப் பறைசாற்றுகிறது.

**ஈராக் - அபீர் காசிம் என்ற சிறுமி**

ஈராக்கில் அமைதி ஏற்படுத்துவதற்காக அங்கு அமெரிக்க இராணுவம் பணியில் அமர்த்தப்பட்டது. அந்நிலையில் அங்கிருந்த அபீர் காசிம் என்ற பதினான்கு வயது சிறுமியைப் பாலியல் வன்கொடுமைக்கு ஆளாக்கி, அவளைக் கொன்று விடுகின்றனர். இதனை எதிர்த்து உலக அளவில் எதிர்ப்புகள் கிளம்பின. தமிழச்சி தங்கபாண்டியனும் இக்கொடுமையை எதிர்த்துக் குரல் தருகிறார்.

"கடந்த

மார்ச் மாதத்தின் ஒரு நாளில்

பாக்தாத்தில்.

பால்யத்தின் சுவடு மாறாத உன்னில்

அதிகாரத்தின் பிடியொன்றும்

ஆணின் திமிர்ப் பொன்றும்

ஆழப் பதிந்தன

உனக்கு அந்நியமாகிப் போன

ஆறாவது விரலாய்

சதைக் கோளமென உன் உடல் சரிவதை

உன் ஆறு வயது சகோதரி பார்க்கையில்

மிச்சமிருந்தது அவள் கடைவாயில்

பூமியும், பெண்ணும் பிடுங்கி

வன்புணரப் படுதலைப் பேச்சற்றுப் பார்த்திருந்தனர்

தன் முக்காடு பற்றிய உன் அம்மாவும்

துப்பாக்கி முனையில் உன் அப்பாவும்

உதிர ஒழுக்கின் துர்மணத்தை நுகர்ந்தபடி

கிழக்குதிரைகள் மூச்சிரைக்க

கிளம்பியது காலம்."[41]

என்ற கவிதையில் பெற்றோர், சகோதரி சிறைபட நடைபெற்ற இத்துன்பம் காலம் ˙வரைந்த துயரக்கோலம் என்பதாகக் கொள்ளப்படுகிறது.

**<u>இலங்கை - அவதியுறும் பெண்கள்</u>**

இலங்கைத் தமிழர்க்கு நிகழும் கொடுமைகளைக் கண்டு கலங்கும் நெஞ்சு கணக்கும் கவிதைகளைத் தமிழச்சி தங்கபாண்டியன் எழுதியுள்ளார். இரண்டாயிரத்து ஒன்பதாம் ஆண்டில் நிகழ்ந்த போரில் அழிந்த துர்கா முதல் இன்றைய நிலையில் விடுதலை வேண்டி நிற்கும் பேரறிவாளனின் தாய் அற்புதம் அம்மா வரைக்கும் பல ஈழப் பெண்களைப் பற்றிய பதிவுகளைத் தம் கவிதைகளில் பதிவு செய்துள்ளார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**<u>துர்கா</u>**

துர்கா என்ற பெண்மணி இலங்கைப் போராட்டத்தில் முன்னணி வகித்தவர். அவர் கானகத்தைத் தன் வாழிடமாகக் கொண்டவர். தொடர்ந்து போராட்ட களத்தில் முன்னணியில் நின்றவர். போர் ஒன்றில் அவர் மாண்ட

போது பின்வரும் கவிதையை அவரின் பணிகளுக்குச் சமர்ப்பணமாய்த் தருகிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

“பதுங்கு குழியிலும்

பலி பீடமான முகாம்களிலும்

முலை துடிக்க உதிரம் சிந்தியது முற்கதை.

நொறுக்கபட்ட வளையல்களையும்

செந்நிறத் திட்டென வலி

புகுந்து கிழித்த உடைகளையும்

உரமாக்கிக் கானகம் ஏறியது தற்கதை….

இலையும் கனியும்

இனி எமக்கு வேண்டாம்

சுதந்திரத்தின் நிர்வாணம் போதும்”[42]

என்ற கவிதையில் துர்காவின் நினைவாய் வீர சுதந்திரம் வேண்டி நிற்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

**நிசாந்தினி**

கருகி மடிந்த நிசாந்தினி என்ற பெண் குறித்தும் கவிதை ஒன்றை அவர் புனைந்துள்ளார். நிசாந்தினி நீண்ட காதணி அணிவதை வழக்கமாகக் கொண்டவர். இவரை இலங்கை ராணுவம் கருக்கிக் கொல்கிறது. இதனைக் கவிதைக்குள் பதியவைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

‘இல்லாத கடவுளிடம்

பிரார்த்தித்துக் கொள்கிறேன்

நாளை நீண்ட காதணி அணிந்த

தோழி யாரும் என்னருகே

நெருங்கி அமரக் கூடாதென

நேற்று முன்தினம் கருகித்

தீய்ந்து போன நிசாந்தினியை

அவை

நினைவுபடுத்தக் கூடும் என்பதால்”[43]

என்ற கவிதையில் நிசாந்தினியின் நினைவு மீள்வதைக் காணமுடிகின்றது.

<u>கோணேஸ்வரி, பென்னம்பேரி</u>

இலங்கை இராணுவத்தினரால் பாலியல் பலாத்காரம் செய்யப்பெற்று வெடிகுண்டுகளால் சிதைக்கப்பெற்ற பெண்கள் கோணேஸ்வரி, பென்னம்பேரி ஆவர். இவர்களை நினைவு கூறும் நிலையில் கவிதை ஒன்றினைத் தந்துள்ளார் தமிழச்சி தங்க பாண்டியன்.

“ கருப்பையும் , முலைகளுமற்ற

ஒரு மொண்ணைப் பிறப்பிருந்தா

ஒருவேளை கோணேஸ்வரியும், பென்னம்பேரியும்

அங்கே அச்சமின்றி மீண்டும் பிறக்கலாம்

காதலைப் போல, போருக்கும் வயதில்லை

கைம்மைக்கும் கூடத்தான்.[44]

என்ற நிலையில் அவர்கள் கவிதை வழியாக நினைவு கூரப்படுகிறார்கள். இனிப் பெண்கள் புற அடையாள உறுப்புகள் அற்றுப் பிறந்தால் மட்டுமே அச்சமின்றிப் பிறக்க இயலும் என்று வேதனையின் உச்சத்தில் நின்று கவிதை செய்கிறார் கவிஞர்.

**இசைப்பிரியா**

குறுகிய தூரத்தில் நடக்கும் தமிழர்களுக்கான அநீதியைத் தடுக்க இயலாமல் நிற்கும் தன் இயலாமைத்தன்மையை எண்ணி ஒரு கவிதையைப் படைக்கிறார் தமிழச்சி தங்கபாண்டியன்.

"ஓர் எரிமலைச் சிதறல், நிலச்சரிவு

அல்லது வெள்ளம் மூழ்கடித்த சிற்றூர்

இவற்றைச் செய்திகளில் பார்த்தப்படியே

தேநீர் சுவைக்கப் பழகியிருக்கிறேன்

இசைப்பிரியாவின் சிதைந்த உடலுக்கான

இருசொட்டுக் கண்ணீர்

இழுகிவிடாத கவனத்துடன்

வாட்டர் புருப் மஸ்காரா உபயோகிக்கின்றேன்"[45]

என்ற நிலையில் உலகத் துயரங்களைச் செய்தியாக மட்டும் பார்க்கும் தன்மை உலக மக்களிடம் வந்துவிட்டதே. இந்த உணர்வற்ற தன்மையை எவ்வாறு மாற்றுவது என்ற கவலையில் இக்கவிதை செய்யப்பெற்றுள்ளது. இதில் குறிப்பிடப்படும் இசைப்பிரியா பற்றி பின்குறிப்பு ஒன்றும் தரப்பெற்றுள்ளது. 'பாடகி, போராளி, நடனக் கலைஞர், ஊடகவியலாளர், இலங்கைப் போரின் போது இராணுவத்தினரால் சித்ரவதை செய்து கொல்லப்பட்டவர்"[46] என்ற

குறிப்பு இசைப்பிரியாவைப் பற்றி அறியாதவர்க்குஅறிவிக்கச் செய்திடும் முயற்சியாக விளங்குகின்றது.

**பேரறிவாளனின் தாய் அற்புதம் அம்மாள்**

கொலை வழக்கு ஒன்றில் ஆயுள் கைதியாக விளங்கும் பேரறிவாளன் அம்மாவிற்காக ஒரு கவிதை எழுதப்பெற்றுள்ளது.

“தனது வயோதிகத்தைக் கொஞ்சம்

தள்ளிப்போடும்படி

காலத்திடம் கருணை கோரியிருக்கிறாள்.

முறையீடுகள் அற்ற

அந்த ஓர் அற்புதமான நாளில்

தன் மகனுக்கு

முழுமையான இரவு உணவை

சமைத்துப் பரிமாறும்

அவளின் கனவு நிறைவேறுகையில்,

நிலவு அதீத அழகுடன் ஒளிரும்.

அந்நாளில் அவனது முற்றத்தில்

அரசியல் யயாதிகள் அனைவரது

இளமையையும் பறித்தெடுத்து

நட்டு வைக்கப்பட்ட அதியமானின்

அபூர்வ நெல்லிக்கனியை அவன் சுவைப்பான்” [47]

இக்கவிதையில் ஔவை, அதியமான், நெல்லிக்கனி ஆகியன காட்டப்பெறுகின்றன. நெல்லிக்கனியை அதியமான் ஔவைக்குத் தந்தது பழைய காலம். நெல்லிக்கனியைத் தன் கைகளில் வைத்துக்கொண்டுக் காத்திருக்கிறாள் அற்புதம் அம்மா. அதனைப் புசித்துத் தன் ஆயுளைக் காத்துக்கொள்ள அதியனாக பேரறிவாளன் வரவேண்டும் என்பதான முரண் தொன்மம் இங்குப் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

இவ்வாறு உலக அளவில் பாதிப்பிற்கு உள்ளாகும், உள்ளாக்கப்படும் பெண்களுக்கு, ஆதரவான குரல் தரும் கவிதையாளராக தமிழச்சி தங்கபாண்டியன் விளங்குகிறார்.

<u>தொகுப்புரை</u>

தமிழச்சி தங்கபாண்டியன் சமுதாய உணர்வுடைய படைப்பாளராகவும் விளங்குகிறார். இவரின் படைப்புகளில் கிராமசமுதாயம், நகர சமுதாயம் சார்ந்த பெண்களின் வாழ்க்கைமுறை எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. சமுதாயம் என்ற பொது அமைப்பின் கட்டுக்கோப்பினை உணர்ந்து அதனுள் ஓர் அங்கமாக விளங்கும், பெண் சமுதாயம் முன்னேற தன் படைப்புகள் வழி தமிழச்சி தங்கபாண்டியன் முயன்றுள்ளார். இவரின் படைப்புகளில் அப்பத்தா, அம்மா, அத்தை, மகள் என்ற நிலைகளில் அமையும் குடும்பப் பெண்களின் சமுதாயநிலைப்பாடு எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. கிராமசமுதாயப் பெண்களாக இவரின் மல்லாங்கிணறு சார்ந்த பெண்களின் வாழ்க்கைமுறை விவரிக்கப்படுகிறது. பெரும்பாலும் கிராமப்பெண்கள் அறியாமையில் இருக்கும் நிலைப்பாட்டை இவர் காட்டியுள்ளார். நகரசமுதாயத்தில் கிராமத்தை மறந்து அகதி வாழ்க்கை வாழும் பெண்களின் நிலைப்பாட்டினை இவர் காட்டியுள்ளார்.

உலக சமுதாயப் பெண்களையும் இவரின் படைப்புகள் காட்டிநிற்கின்றன. இலங்கைப் பெண்களின் பேரழிவு குறித்த கவலை இவரின் படைப்புகளில் காணக்கிடைக்கின்றது. அரசியல் விடுதலை தேடும் இலங்கைப் பெண்களின்

ஆவல் இவரின் படைப்புகளில் வெளிப்பட்டு நிற்கிறது. இவைதவிர உலகின் பல பகுதிகளில் வாழும் பெண்களின் துயரங்களை இவர் எடுத்துரைத்து, தன் படைப்பில் உலக சமுதாயப் பெண்களின் நிலைப்பாடுவரை காட்டியுள்ளார்.

**<u>சான்றாதாரங்கள்</u>**

---

[1] தந்தை பெரியார், பெண் ஏன் அடிமையானாள், ப. 32

[2] வாசுகி ஜெயரத்னம், பெண்ணியச் சுவடுகள்,ப.7

[3] வாசுகி ஜெயரத்னம், பெண்ணியச் சுவடுகள்,ப.11

[4] பதிப்புக்குழு,தமிழ்ப்பேரகராதி, ப. 1302

[5] ஜெ.கிருஷ்ண மூர்த்தி, சமூகவியல் கோட்பாடுகள், ப. 74

[6] தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 47

[7] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப.32

[8] தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண், ப. 37

9 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப.110

10 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப.110

11 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப.118

[12] தமிழச்சி தங்கபாண்டியன், மயிலிறகு மனசு, ப. 56

[13] தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 45

14 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப.110

15 தமிழச்சி தங்கபாண்டியன்,மஞ்சணத்தி ப.142

[16] தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 113

[17] தமிழச்சி தங்கபாண்டியன், மயிலிறகு மனசு, ப. 72

18 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப. 63

19 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண். ப.63

20 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப.63

21 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண்.ப. 65

22 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப.110

23 தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண் ப.123

[24] தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண், ப.109

[25] தமிழச்சி தங்கபாண்டியன்,மண்வாசம், ப. 84

26 தமிழச்சி தங்கபாண்டியன்,மஞ்சணத்தி ப.128

27 தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி,ப.34

28 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி ப.132

29 தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி ப.134.

[30] தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப்பெண், ப.98

[31] தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப. 127

[32] தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப் பெண், ப. 141

[33] தமிழச்சி தங்கபாண்டியன், எஞ்சோட்டுப் பெண், பக் 141-142

[34] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப 62

[35] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப85

[36] தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 83

[37] தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 83

[38] தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 52

[39] https://islamindia.wordpress.com/2010/08/07 ஆயிஷாவின்-மூக்கு-காது-அற

[40] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப. 51

[41] தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, ப. 65

[42] தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப.80

[43] தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, ப.83

[44] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப. 95

[45] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப.56

[46] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப.57

[47] தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், ப.74

# முடிவுகள்

**பெண்ணிய நோக்கில் தமிழச்சி தங்கபாண்டியனின் படைப்புகள்** என்ற தலைப்பில் செய்யப்பெற்றுள்ள இவ்வாய்வின் வழியாகப் பெறப்பட்ட முடிவுகள் பின்வருமாறு.

தமிழச்சி தங்கபாண்டியன் கிராமப் பின்புலம் சார்ந்த படைப்பாளர் ஆவார். இவர் தன் கவிதைகளில், உரைநடைகளில் தன் கிராமம் சார்ந்த பதிவுகளைப் பதிவு செய்யும் வட்டாரவழக்கு சார்ந்த படைப்பாளராக அறியப்பெறுகிறார். இவரின் இயற்பெயர் சுமதி என்பதாகும். இவர் தன் படைப்பினை முதன் முதலில் தமிழச்சி என்ற பெயரில் எழுதியதாலும், சுமதி என்ற பெயரில் வேறு ஒரு படைப்பாளர் இருந்த நிலையிலும் தன் பெயரை இவர் தமிழச்சி என்று மாற்றிக்கொண்டார். இவரின் தந்தையார் பெயரான தங்கபாண்டியன் இவரின் பின்னொட்டாக அமைந்துகொள்ள இவர் தமிழச்சி தங்கபாண்டியன் என்ற படைப்பாளராக ஆனார்.

இவர் ஆங்கில இலக்கியம் படித்து, ஆங்கிலத் துறை உதவிப் பேராசிரியராக இராணிமேரிக் கல்லூரியில் பணியாற்றினார். இவரின் அரசியல் நுழைவு காரணமாகத் தன் பணியை விட்டுவிட்டு இவர் முழுவதும் அரசியல் பணிகளில் ஈடுபட்டார்.

இவர் பல கவிதைத் தொகுப்புகளையும், உரைநடைத் தொகுப்புகளையும் எழுதியுள்ளார். இவற்றில் இவரின் பெண்ணியக் கருத்தாக்கங்களைப் பதிவு செய்துள்ளார். இவர் நடன, நாடகக் கலைஞராகவும் விளங்கி வருகிறார்.

இவரின் கவிதைப் படைப்புகளாக எஞ்சோட்டுப்பெண், வனப்பேச்சி, மஞ்சணத்தி, அருகன், ஆகிய நான்கும் உரைநடைப் படைப்புகளான பாம்படம், சொல்தொடும் தூரம், மயிலிறகு மனசு, மண்வாசம் ஆகிய நான்கும் அமைகின்றன. மேலும் இவரின் பேட்டிகள் தொகுக்கப்பெற்றுத் தனி நூலாக

பேச்சரவம் கேட்டிலையோ என்ற தலைப்பில் வந்துள்ளது. இவரின் படைப்புகள் பற்றிய விமர்சனங்கள் காற்று கொணர்ந்த கடிதங்கள் என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது.

தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைகளில் மரபு சார்ந்த பெண்ணியத் தன்மை காணப்படுகிறது. இருப்பினும் ஆண் ஆளுமை, ஆணின் பார்வை காரணமாகப் பெண்கள் பாதிக்கப்படும் நிலையையும் எடுத்துரைத்து, இந்நிலை மாறவேண்டும் என்ற நிலையிலும் இவர் தன் கவிதைகளைப் படைத்துள்ளார்.

இவரின் கவிதைகளில் பெண்களின் விடுதலைக் குறியீடாக மைனா என்ற பறவை குறிக்கப்படுகிறது. பெண்ணியவாதிகளின் நிலைப்பாட்டை அவள், நான், இவள் என்ற மூன்று பாத்திரங்களில் அமைத்து – பெண்மைநிலை, பெண்ணிய நிலை, பெண் நிலை என்ற வகைப்பாட்டில் இம்மூன்று பாத்திரங்களுக்கும் உரிய நடத்தைகளை இவர் தன் கவிதைகளில் காட்டியுள்ளார்.

பெண்ணின் பெருஞ்சக்தியாக உயிர்களைப் பிறப்பித்தல் என்பது அமையும் நிலையில் அது குறித்து எவ்வித பெருமையும் கொள்ளாமல், அது குறித்து எவ்வித மேம்பாட்டையும் புரிந்து கொள்ளாமல் இச்சக்தி கொண்டே பெண்களை அடக்கி வைக்கும் ஆண்நிலைப்பாட்டை இவர் கடுமையாகத் தன் கவிதைகளில் விமர்சித்துள்ளார்.

பெண் எப்போதும் ஆணின் பின்னிணைப்பாகவே விளங்கவேண்டும் என்ற ஆண்மனப்பாங்கு மாறவேண்டும் என்பது இவரின் நோக்கமாக உள்ளது.

இவர் வனப்பேச்சி என்ற தொன்மத்தைத் தன் தோழியாகக் கருதி அவ்வனப்பேச்சியுடன் தன் வாழ்வு நினைவுகளைப் பகிர்ந்து கொள்ளும் போக்கில் கவிதைகளைப் படைத்துள்ளார். இதுபோன்ற துணை ஒன்று அனைத்துப் பெண்களுக்கும் அமையவேண்டும் என்ற அடிப்படையில் இவரின் வனப்பேச்சியுடனான இணைப்பு விளங்குகின்றது.

இவர் பல தொன்மப்பாத்திரங்களைத் தன் கவிதைகளில் கையாண்டுள்ளார். அத்தொன்ம பாத்திரங்கள் ஆணின் ஆசையில் பெண் வீழ்ந்த நிலைப்பாட்டினைக் காட்டுவனவாக உள்ளன. எனவே பெண்களின் இழிநிலைக்குக் காரணம் ஆண்களின் ஆசைகளே என்பதை இவரின் கவிதைகள் சுட்டிநிற்கின்றன.

இவரின் கவிதைகளில் பெண் மொழிக் கூறுகள் காணப்படுகின்றன. ஆண் பயன்படுத்திய மொழிநிலைப்பாட்டில் இருந்து பெண் படைப்புகள் வேறுபட பெண் மனம் சார்ந்த மொழிக் கூற்றின் அடிப்படையில் தன் கவிதைகளைப் படைத்துக்கொள்ளவேண்டும் என்ற நிலையில் இவர் தன் கவிதைகளில் பெண் மொழி அடையாளங்கள் பலவற்றைக் கொண்டு தன் கவிதைப் படைப்புகளைப் படைத்தளித்துள்ளார்.

இவரின் கவிதைகளில் சகோதரித்துவப் போக்கு காணப்படுகிறது. ஒரு பெண் தன் உடன் பிறந்தாளுக்கு உரிய நிலையில் உதவும் போக்கில் அமையும் கவிதைகளை இவர் பெண்ணினத்திற்காகப் படைத்தளித்துள்ளார். இப்பண்பு இவர் கவிதைகளில் காணக்கிடைக்கும் முக்கியமான அடையாளம் ஆகும்.

இவரின் கவிதைப் படைப்புகள் பெண் உரிமையை, பெண்துயரத்தை, பெண் மீட்சியை நோக்கி எழுதப்பெற்றுள்ளன என்று உணர்ந்து கொள்ள முடிகின்றது.

தமிழச்சி தங்கபாண்டியன் பல உரைநடைப் படைப்புகளையும் படைத்துள்ளார். இவற்றின் நடையும், தலைப்புகளும் கவிதைத் தன்மையுடன் அமைந்து விளங்குகின்றன.

இவரின் வாழ்வில் நிகழ்ந்த அனுபவங்களைக் கொண்டு இவர் எழுதிய கட்டுரைகள் “பாம்படம்” என்ற பெயரில் தொகுக்கப்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் கணவன், குழந்தைகள் என்ற உறவுப்பிணைப்பில் ஏற்படும் நெருக்கடிகள்,

முதுமை, தனிமை, கணவன் இறப்பு போன்ற சூழல்களில் பெண்கள் படும் துயரங்கள், பெயர் மாற்றமுடியாமை போன்ற நிகழ்வுகளால் பெண்கள் படும் இன்னல்கள் போன்றன எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. இதன்வழி பெண்ணிலக்கியமாகவே பாம்படம் விளங்குகிறது.

“மயிலிறகு மனசு” என்ற கட்டுரைத் தொகுப்பு அவள் விகடன் என்ற மகளிர் இதழுக்காக தான் சந்தித்த மகளிர் பற்றி, தமிழச்சி தங்கபாண்டியனால் எழுதப்பெற்ற கட்டுரைகள் அடங்கிய தொகுப்பாகும். இத்தொகுப்பில் தூய்மைப் பணியைச் செய்யும் பெண்ணின் கலை உள்ளம் முதல் லலிதா நகைக்கடையின் மகள் வரை என்ற நிலையில் அடித்தட்டுப் பெண்கள் முதல் மேல்த்தட்டுப் பெண்கள் வரை ஒரே தட்டில் வைத்து அறிமுகம் செய்யப்பெற்றுள்ளது. இக்கட்டுரைகளின் வழியாக பெண்களின் மதிப்பும், மரியாதையும் உலகிற்கு வெளிப்படுத்தப்பெற்றுள்ளது. பெண்களின் சமுதாய இருப்பு என்பது மிக முக்கியமானது என்பதையும் இக்கட்டுரை காட்டுகின்றது.

இவரின் கட்டுரைத்தொகுப்புகளில் ஒன்று மண்வாசம் என்பதாகும். இத்தொகுப்பில் இரு பகுதிகள் விளங்குகின்றன. ஒரு பகுதி மண்ணும் மருத்துவமும் என்பதாகும். மற்றொரு பகுதி மண்ணும் மனசும் என்பதாகும். இவ்விரு பகுதிகளிலும் பெண்கள் பற்றிய பல பதிவுகள் அமைந்துள்ளன. குறிப்பாகப் பெண்களின் மருத்துவ அறிவுத்திறன், நாட்டுவைத்திய முறைகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. மேலும் மண்ணும் மனசும் என்ற பகுதியில் தான் அனுபவித்த கிராமத்து மனித வாழ்வு பற்றியும் இவர் எடுத்துரைக்கிறார். பெரும்பாலும் இவர் பெண்களுடன் நிகழ்த்திய அனுபவங்களே இங்குக் கட்டுரைகளாக ஆக்கப்பெற்றுள்ளன. இதன் காரணமாக இத்தொகுப்பும் பெரும்பான்மை பெண் சார்ந்த பதிவுகள் கொண்ட தொகுப்பாக அமைந்து சிறக்கின்றது. இத்தொகுப்பு நிறைவடையும்நிலையில் நிலவு என்ற முடிப்புடன் முடிகின்ற நிலை இவரின் உரைநடை திட்டமிடப்பட்டு எழுதப்பெற்ற உரைநடை என்பதைக் காட்டுவதாக உள்ளது.

விமர்சனப் பாங்குடைய உரைநடைப் படைப்பு என்ற நிலையில் அமைவது இவரின் ‘சொல் தொடும் தூரம்’ என்ற தொகுப்பாகும். இத்தொகுப்பில் இவர் மதிப்புரை, முன்னுரை, அணிந்துரை, வாழ்த்துரை போன்ற நிலையில் தந்த பேச்சுரைகள், மற்றும் எழுத்துரைகள் தொகுக்கப்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் ஆண்களின் படைப்புகளை விமரச்சிக்கையில் ஓர் அன்னியத்தன்மையும், பெண்கள் படைப்புகளை விமரச்சிக்கையில் சகோதரித்துவ மனப்பாங்கும் இவரிடம் காணப்படுவதை உணரமுடிகின்றது.

தமிழச்சி தங்கபாண்டியன் சமுதாய உணர்வுடைய படைப்பாளராகவும் விளங்குகிறார். இவரின் படைப்புகளில் கிராமசமுதாயம், நகர சமுதாயம் சார்ந்த பெண்களின் வாழ்க்கைமுறை எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. சமுதாயம் என்ற பொது அமைப்பின் கட்டுக்கோப்பினை உணர்ந்து அதனுள் ஓர் அங்கமாக விளங்கும், பெண் சமுதாயம் முன்னேற தன் படைப்புகள் வழி தமிழச்சி தங்கபாண்டியன் முயன்றுள்ளார். இவரின் படைப்புகளில் அப்பத்தா, அம்மா, அத்தை, மகள் என்ற நிலைகளில் அமையும் குடும்பப் பெண்களின் சமுதாயநிலைப்பாடு எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. கிராமசமுதாயப் பெண்களாக இவரின் மல்லாங்கிணறு சார்ந்த பெண்களின் வாழ்க்கைமுறை விவரிக்கப்படுகிறது. பெரும்பாலும் கிராமப்பெண்கள் அறியாமையில் இருக்கும் நிலைப்பாட்டை இவர் காட்டியுள்ளார். நகரசமுதாயத்தில் கிராமத்தை மறந்து அகதி வாழ்க்கை வாழும் பெண்களின் நிலைப்பாட்டினை இவர் காட்டியுள்ளார்.

உலக சமுதாயப் பெண்களையும் இவரின் படைப்புகள் காட்டிநிற்கின்றன. இலங்கைப் பெண்களின் பேரழிவு குறித்த கவலை இவரின் படைப்புகளில் காணக்கிடைக்கின்றது. அரசியல் விடுதலை தேடும் இலங்கைப் பெண்களின் ஆவல் இவரின் படைப்புகளில் வெளிப்பட்டு நிற்கிறது. இவைதவிர உலகின் பல பகுதிகளில் வாழும் பெண்களின் துயரங்களை இவர் எடுத்துரைத்து, தன் படைப்பில் உலக சமுதாயப் பெண்களின் நிலைப்பாடுகளைக் காட்டியுள்ளார்.

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்

தமிழச்சி தங்கபாண்டியன்., எஞ்சோட்டுப் பெண், மித்ரா பதிப்பகம், சென்னை, 2003

தமிழச்சி தங்கபாண்டியன், வனப்பேச்சி, உயிர்மை பதிப்பகம், சென்னை.2007

தமிழச்சி தங்கபாண்டியன், மஞ்சணத்தி, உயிர்மை பதிப்பகம், சென்னை, 2009

தமிழச்சி தங்கபாண்டியன், அருகன், உயிர்மை பதிப்பகம், சென்னை 2011

தமிழச்சி தங்கபாண்டியன், சொல் தொடும் தூரம், உயிர்மை பதிப்பகம், சென்னை, 2010

தமிழச்சி தங்கபாண்டியன், பாம்படம், உயிர்மை பதிப்பகம், சென்னை, 2010

தமிழச்சி தங்கபாண்டியன், மயிலிறகு மனசு, விகடன் பிரசுரம், சென்னை, 2012

தமிழச்சி தங்கபாண்டியன், மண்வாசம், விகடன் பிரசுரம், சென்னை, 2013

## துணைமைச் சான்றுகள்

அரசு. வீ. தமிழியல் ஆய்வு, இளவழகன் பதிப்பகம் சென்னை, 2001

அருணாசலம்.மு, இராசா வரதராசா, தமிழ் இலக்கியவரலாறு, அருண் பதிப்பகம், திருச்சி, 2012

ஆனந்தன்,சு., தமிழ் இலக்கிய வரலாறு, கண்மணி பதிப்பகம், திருச்சி, பதினேழாவது பதிப்பு, 2008

கைலாசபதி.க., இலக்கியமும் திறனாய்வும், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2007

சிங்காரவேலு முதலியார். ஆ. அபிதான சிந்தாமணி, சீதை பதிப்பகம், சென்னை ஆறாம் பதிப்பு 2009

தத்தை பழனி, நாவலும் சமூகமும், தேடல் பதிப்பகம், பாண்டிச்சேரி, 2003

தமிழச்சி தங்கபாண்டியனின் பேட்டிகள், பேச்சரவம் கேட்டிலையோ, உயிர்மை பதிப்பகம், சென்னை, 2008

தமிழச்சி தங்கபாண்டியனுக்கு எழுதிய விமர்சனங்கள், காற்று கொணர்ந்த கடிதங்கள், உயிர்மை பதிப்பகம், 2010

தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, மீனாட்சி புத்தகநிலையம், மதுரை, முப்பதாம் பதிப்பு,2013

நடராசன். தி.சு., திறனாய்வுக்கலை, நியு செஞ்சுரி புக் அவுஸ், சென்னை, ஏழாம் பதிப்பு, 2009

பசுபதி ம.வே.,செம்மொழித் தமிழ் இலக்கண இலக்கியங்கள், தமிழ்ப்பல்கலைக்கழம் தஞ்சாவூர், முதல்பதிப்பு 2010

பஞ்சாங்கம்.க., தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு, அகரம், தஞ்சாவூர், 2004

பாரதியார், பாரதியார் கவிதைகள், தென்றல் நிலையம்,சிதம்பரம், எட்டாம் பதிப்பு, 2007

பாலச்சந்திரன்.சு., இலக்கியத் திறனாய்வு, நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பனிரெண்டாம் பதிப்பு, 2011

பாலசுப்பிரமணியன். சிற்பி., சேதுபதி. சொ., தமிழ் இலக்கிய வரலாறு, கவிதா பப்ளிகேசன்ஸ், சென்னை, 2010

பெரியார் தந்தை, பெண் ஏன் அடிமையானாள், பெரியார் சுயமரியாதை பிரச்சார வெளியீடு, சென்னை, முப்பத்தைந்தாம் பதிப்பு, 2017

முத்து.தி., கண்ணதாசன் நாவல்கள் ஒரு திறனாய்வு, பார்க்கர், சென்னை 2001

முருகேசபாண்டியன்.ந., இலக்கிய ஆளுமைகளின் படைப்புத்திறன், உயிர்எழுத்து பதிப்பகம், திருச்சி, 2009

மெய்யப்பன் (பதிப்பாசிரியர்) பாரதியார் கவிதைகள், தென்றல்நிலையம் சிதம்பரம் பதினோரம் பதிப்பு மார்ச் 2013

மைதிலி சிவராமன், சமூகம் ஒரு மறுபார்வை, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 2000

ரெங்கம்மாள்.இரா., வாசுகி.சி., பெண்ணியம் அணுகுமுறைகளும், இலக்கியப் பயன்பாடும், அறிவு பதிப்பகம், சென்னை.இரண்டாம் பதிப்பு, 2006

வரதராசனார் . மு, (உரையாசிரியர்) திருக்குறள், திருநெல்வேலி சைவ சத்தாந்த நூற்பதிப்புக் கழகம்,சென்னை, 205வது பதிப்பு 2008

வேங்கடசாமி மயிலை,சீனி., தமிழர் வளர்த்த அழகுக்கலைகள், பாவைபப்ளிகேசன்ஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு 2014

ஸ்ரீகுமார். எஸ்., தமிழ் இலக்கிய வரலாறு, ஸ்ரீ செண்பகா பதிப்பகம்,சென்னை, 2014

ஸ்ரீசந்திரன் ஜெ. (உரையாசிரியர்) சிலப்பதிகாரம் தமிழ்நிலையம் சென்னை ஐந்தாம் பதிப்பு 2007

ஸ்ரீசந்திரன், ஜெ ஐம்பெருங்காப்பியங்கள் (ஒன்று முதல் ஐந்து பாகங்கள் ) , தமிழ்நிலையம், சென்னை, ஐந்தாம் பதிப்பு 2007

தமிழச்சி தங்கபாண்டியனின் குடும்பம்



## பின்னிணைப்பு -2

**தமிழச்சி தங்கபாண்டியன் இனிய உதயம் இதழுக்கு வழங்கிய பேட்டி**

**மல்லாங்கிணற்று மண்ணிலும், நீலாங்கரை மண்ணிலும் உங்கள் பதிவுகள் எப்படி இருக்கின்றன?**

என்னுடைய மண் வாசமும், எனக்கான மனிதர்களும் நிறைந்த இடம் மல்லாங்கிணறு. நீலாங்கரையோ ஒருவகையில் இன்னமும் முழுதாய் நகரமயமாகாத ஒரு அழகிய பகுதி. காற்று, வெளி, கடலோர மனிதர்கள் என கொஞ்சம் புறநகரப் பகுதிக்கான அடை யாளங்களை நீலாங்கரை மிச்சம் வைத்திருக்கிறது. அதனால் நீலாங்கரை என் நெஞ்சுக்கு கொஞ்சம் நெருக்கமாயிருக்கிறது. மல்லாங்கிணறு- நீலாங்கரை இரண்டிலுமே நீர் இருக்கிறது. இவ்விரு பகுதிகளிலும், நீர் மாதிரியே என் வாழ்க்கை தெளிவாக இருக்கிறது.

**உங்கள் மல்லாங்கிணற்று மலரும் நினைவுகளைப் பகிருங்களேன்?**

என் அம்மாவுக்கு பூர்வீகம் சிவகாசி. அப்பாவுக்கு பூர்வீகம் ராமநாதபுரம் மாவட்டம் சாயல்குடி. இரண்டு பேரும் மல்லாங்கிணறில் ஆசிரியர்களாக தங்கள் வாழ்க்கையைத் தொடங்கினார்கள். ஒரு வகையில் மல்லாங்கிணறு என் அப்பாவை தத்தெடுத் துக்கொண்டது என்று சொல்லலாம். அப்பா இறந்த சமயம், "மல்லாங்கிணறு தன் மகனை நினைக்கிறது என்று ஒரு கவிதை எழுதினேன். அந்த ஊரே அப்பாவை நேசித்து எழுதுவது மாதிரியான கவிதை அது. நான் பிறந்ததும் அந்த ஊர்தான். அப்பா- அம்மா எனக்கு வைத்த பெயர் சுமதி. செமதின்னுதான் என்னை ஊரே கொண்டாடும். ஒன்னாப்பு, மூனாப்பு அந்த ஊரில்தான் படிச்சேன். அஞ்சாப்புக்கு பிறகு விருதுநகரில் படித்தேன். மல்லாங்கிணற்றோடும் அங்கே என்கூட படித்த அம்பி, கொட்டாப்பு,

லச்சுமி, சிலம்பாயி, ஈஸ்வரி, குருவாச்சி, வேளாங்கன்னி இவர்களோடும் எனக்கு இன்னமும் தொடர்பு இருக்கிறது. குருவாச்சி படிப்பை எல்லாம் நிறுத்தி விட்டு ஆடு, மாடு மேய்க்கிறாள். மல்லாங்கிணறை எல்லாருக்கும் தெரியறமாதிரி செஞ்சிருக்கு சுமதின்னு மகிழ்ச்சியில அவள் இருக்கிறாள். விருதுநகரில் என் பள்ளிப் படிப்பும், மதுரையில் கல்லூரிப் படிப்பும் அமைந்தது.

**<u>உங்கள் குடும்பம் பற்றிச் சொல்லுங்களேன்?</u>**

என் கணவர் சந்திரசேகர் ஒரு ஐ.பி.எஸ். அதிகாரி. நான் எழுதுவதற்கான அத்தனை இடத்தையும் அவர்தான் கொடுக்கிறார். என் சிறகுகள் விரிய அவர் வானமாக இருக்கிறார். என் மூத்த மகள் சரயூ அமெரிக்காவில் எம்.எஸ். படித்திருக்கிறார். இரண்டா வது மகள் நித்திலா, பிளஸ்டூ படிக்கிறார். பெரிய மகளுக்கு கவிதையில் ஆர்வம் இருக்கிறது. அவள் எழுதியதை, கவிதை மாதிரி எழுதுகிறாய் என்று சொல்லியிருக்கிறேன். இது அப்பா எனக்கு சொன்னதை நினைவுபடுத்துகிறது. நான் முதன்முதலில் கவிதை என்று எழுதிக் காட்டியதை, "கவிதை மாதிரி தான் எழுதியிருக்கே என்றார். என் முதல் கவிதையில் தொடங்கிய இலக்கிய தாகம், கல்லூரியில் "அருவி என்ற இலக்கிய இதழைக் கொண்டுவரும் அளவிற்கு வேகமெடுத்தது. அதுதான் இன்றளவும் தொடர்கிறது.

**<u>நீங்கள் முதன்முதலில் "கவிதை மாதிரி எழுதியதற்கும், தற்போது எழுதும் கவிதைகளுக்கும் இடையிலான தூரத்தை எப்படி உணர்கிறீர்கள்?</u>**

இப்போது எனது கவிதைகளில் மொழி கொஞ்சம் இறுக்கம் அடைந்திருக்கிறது. கவிதையைப் பொறுத்த வரைக்கும் அந்த வடிவம் இறுக்கமாகவும், சுருக்கமாக வும் ஒரு செட்டாக இருக்க வேண்டும் என்பதுதான் என்னு டைய விருப்பம். கவிதை அப்படி யாகப்பட்ட ஒரு வடிவம்தான். மொழியிலேயே மிகப்பெரிய சவால்களை உருவாக்குவது

கவிதைகள்தான். கட்டுரையோ, சிறுகதையோ என்றால் விவரித்து எழுதிக்கொண்டே போகலாம். ஒரு சொல்லுக்குள், ஒரு வாக்கியத் துக்குள் ஒரு பெரிய கடலைத் திணிப்பதுபோலதான் கவிதை என்பதால், அது படைப்பாளிக்கு மிகப்பெரிய சவாலாக இருக்கிற விசயம்.

என்னுடைய முதல் கவிதை யான "மாரியை நான் கவிதை என்று சொல்லமாட்டேன். ஒரு நீண்ட மனப்போக்கின் வடிவம் என்றுதான் சொல்வேன். இன்று வரைக்கும் நான் எழுதினவை எல்லாம் கவிதை மாதிரிதான்; கவிதை கிடையாது. இதுதான் கவிதை; இதுதான் சிறந்த கவிதைக் கான இலக்கணம் என்று இது வரைக்கும் எதுவுமில்லை. அப்படி வரையறுக்கவும் முடியாது. அதே சமயம் இப்போது எனக்கு இறுக்கமாக ஒரு தேர்ந்த மொழி யில் சொல்லக்கூடிய லாவகம் கிடைத்திருக்கிறது என நான் நினைக்கிறேன்.

**<u>எந்த கோட்பாடுகளை முன்வைத்து உங்கள் கவிதைத் தளம் இயங்குகிறது?</u>**

ஒன்றுமே கிடையாது. நான் எழுதுகிற போது, எந்தக் கோட்பாடு சார்ந்தும் என் கவிதை இருக்காது. அப்படி அது இருக்கவேண்டிய அவசியமும் இல்லை. அதேபோல் இது பெண்ணியக் கவிதை, இது மண் சார்ந்த கவிதை என்று சொல்கிறார்கள். அப்படியெல்லாம் நான் எண்ணிக்கொண்டு எதையும் எழுதுவதில்லை. இன்றைக்கு உட்கார்ந்து ஒரு மண்சார்ந்த கவிதை எழுதுவோம், இன்றைக்கு ஒரு பெண்ணியக் கவிதை எழுதுவோம் என்று செய்தால் அது கவிதை அல்ல. அது செயற்கையாக செய்யப்படுவது. கவிதை அந்த கணத்தில் மலர்வது. அதுவே தன் பாடுபொருளையும் வடிவத்தையும் சொற்களையும் தேர்ந்தெடுத்துக்கொள்கிறது.

**<u>தமிழ் இலக்கியத்தில் இருந்து ஆங்கிலத்திற்கும், ஆங்கில இலக்கியத்தில் இருந்து தமிழுக்கும் ஒன்றை மொழிபெயர்க்கச் சொன்னால் அது எதுவாக இருக்கும்?</u>**

ஆங்கிலத்தில் நான் தலை சிறந்த ஆன்மா என்று நினைப்பது ஷேக்ஸ்பியரின் நாடகங்கள். எனக்கு அவற்றை மொழி பெயர்க்க விருப்பம். "கீட்ஸ் மற்றும் "சில்வியா கவிதைகளை மொழிபெயர்க்கவும் ஆசையுண்டு. தமிழில் இருந்து நான் ஆங்கிலத்திற்கு கொண்டு போகவேண்டும் என்று இந்த கணம் நினைப்பது, ஈழத்தில் போர்புரிந்த பெண் போராளி களின் கவிதைகள். "பெயரிடாத நட்சத்திரங்கள் என்று அது "விடியல் வெளியீடாக வந்திருக்கிறது. அந்தத் தொகுப்பில் முழுக்க எந்த போராளிகளுக்கும், எந்த கவிஞர்களுக்கும் பிறந்த தேதி கிடையாது. எல்லா கவிஞர்களுக்கும் இறந்த தேதி மட்டும் இருக்கிறது.

எங்கெங்கோ பிறந்து போராளி களாய் போர்க்களத்திற்கு வந்தாலும் அந்த உக்கிரமான சூழ்நிலையிலும் அவர்களுக்குள் ரசனை இருந்திருக்கிறது. அவற்றை கவிதையாக வடித்திருக்கிறார்கள்.

இது மிக சமீபத்தில் வெளிவந்த மிக முக்கியமான புத்தகம். இதை ஆங்கிலத்திற்கு கொண்டுபோகும் போது உலகத்தின் ஒட்டுமொத்த கவனமும், அதன்பால் ஈர்க்கப்படும். அவர்களுடைய உணர்வு பகிர்ந்து கொள்ளப்படும் என்று நான் நினைக்கிறேன்.

**<u>முனைவர் பட்ட ஆய்வுக்கு தாங்கள், புலம்பெயர்ந்த ஈழத் தமிழர்களின் ஆங்கிலப் படைப்புகளில் "அவர்தம் அலைந்துழல்வு உணர்வு என்ற தலைப்பை எடுத்துக்கொண்டது ஏன்?</u>**

ஐம்பது ஆண்டுகால போராட்டம் ஈழப்போராட்டம். எண்பதுகளில்தான் தமிழகத்தில் மிகப்பெரிய கவனத்தை ஏற்படுத்தியது. ஈழத்தின் கறுப்பு ஜூலை தமிழகத்தில் பெரும் அதிர்வலைகளை ஏற்படுத்தியது. நான் கல்லூரியில் அடியெடுத்து வைத்த முதல் வருடம் அது. அப்போதிருந்தே ஈழத் தமிழர்களின் போராட்டங்களை கவனித்து வருகிறேன். அந்த போராட்டம் உச்சகட்டமாக மாறியபோது நான் முடிவெடுத்தேன். என்னுடைய முனைவர் பட்ட ஆராய்ச்சி என்பது இது சம்பந்தமாகத்தான் இருக்க வேண்டும் என்று. அதிலும் குறிப்பாக ஈழத் தமிழர் களின் ஆங்கிலப் படைப்புகள் குறித்து ஆய்வு செய்ய வேண்டும் என்று விரும்பினேன். ஏனென்றால் ஈழத்து தமிழ் படைப்புகள் குறித்து பரவலாக எல்லாருக்கும் தெரியவந்திருக்கிறது. ஆங்கிலத்தில் ஆங்கிலப் படைப்பாளிகள் குறித்து ஆய்வு செய்யும்போது ஒரு சர்வதேச கவனம் கிடைக்கும். அதனால்தான் என்னு டைய ஆய்வு படிப்புக்கு, புலம்பெயர்ந்த ஈழத் தமிழர்களின் ஆங்கிலப் படைப்புகளில் "அவர்தம் அலைந்துழல்வு உணர்வு என்று தலைப்பிட்டேன். ஈழத்துப் படைப்பாளிகள் ஆங்கிலத்தில் மிகத் திறம் பட இருக்கிறார்கள் என்பதைத் தெரிவிக்கும் நோக்கில் தான் அந்தத் தலைப்பைத் தேர்ந் தெடுத்தேன். அந்தத் தலைப்பைத் தேர்ந்தெடுத்த பிறகு எந்த இடத்தில் இருந்து ஆய்வை தொடங்குவது என்று நினைத்தேன். 2003, 2004- ஆம் ஆண்டில் ஈழத்தில் பிரச்சினைகள் அதிகமாக இருந்த காலகட்டம். அதனால் ஈழத்தில் சென்று ஆய்வு செய்வது என்பது அடிப்படை சாத்தியம் இல்லாத

காரியம். என் னுடைய களமும் புலம்பெயர்ந்து வாழுகின்றவர்களின் கவிதைகள் பற்றியதுதான். அதனால் பரவலாக பார்க்கிறபோது புலம்பெயர்ந்த ஈழத்தமிழர்கள் வாழும் கனடா, ஆஸ்திரேலியா, பிரிட்டன் ஆகிய இடங்களுக்குச் சென்று ஆய்வு செய்தேன். புத்தகம் மூலமாக அறி வதைவிட ரத்தமும் சதையுமாக அவர்களைப் பார்க்கிறபோது, அவர்களின் பாடல்களைக் கேட்கிற போது, அவர்கள் ஏன் ஆங்கிலத் தில் இந்தப் பாடல்களை கொண்டு வரவேண்டும் என்று நினைத் தார்கள் என்பது பற்றியெல்லாம் ஆய்வு செய்தேன். எர்னஸ்ட் தளையசிங்கம் மெக்கின்டையர் எனும் நாடக ஆசிரியர் நாடகத்தின் மூலம் தனது ஈழத்துப் போராட் டத்தை வெளிப்படுத்தியவர்.

அவர் இலங்கையில் இருந்து எழுதிய நாடகங்களையும், புலம்பெயர்ந்த பின்னர் எழுதின நாடகங்களையும் பார்க்கும்போது, முழுக்க ஈழப் பிரச்சினையை முன்வைத்துதான் நாடகங்களை எழுதியிருக்கிறார். இந்த குரல் திசையெட்டும் எதிரொலிக்குமா? இது உலகின் கவனத்தை ஈர்க்குமா? என்ற ஏக்கத்தின் அடிப்படைதான் இந்த ஆய்வு.

**<u>உங்கள் எழுத்துகள் சலிப்பை ஏற்படுத்தியது உண்டா?</u>**

"மே-18 என்ற தலைப்பில் முள்ளிவாய்க்கால் சம்பவம் குறித்து ஒரு கவிதை எழுதினேன். அந்தப் பிரச்சினைகளை அறிந்தபோது என்ன எழுதுவது என்ற விரக்தியில் இருந்த சமயத்தில்தான் அந்தக் கவிதை எழுதினேன். முள்ளிவாய்க்கால் துயரத்தைச் சொல்லும் அந்தக் கவிதை, "அடுத்த வேளை சாப்பிடத் தான் வேண்டியிருக்கிறது என்று முடியும். இதுதான் நிதர்சனம். இதனால் சமயங்களில் ஒரு சலிப்பு ஏற்படுகிறது. என்ன எழுதுகிறோம்- நம்ம எழுத்தால் ஒரு சின்ன முன்னகர்வைக்கூட கொண்டுபோக முடியவில்லையே என்ற சலிப்பு ஏற்படுகிறது. இந்த எழுத்தினால் என்ன இருக்கிறது என்ற வெறுமை உணர்வு வந்து, மூன்று

மாதங்கள் எதுவும் எழுதா மல் இருந்தேன். நான் களப் பணியாளி கிடையாது. எவ்வளவோ விஷயத்தைப் பேசலாம். ஆனால், நான், களத்தில் இறங்கும் செயல்பாட்டாளராக இல்லை.

அதற்கான சூழல் எனக்கு இல்லை. இதனால் சிலரின் கேள்விகளுக்கு பதில் சொல்லமுடியாமல் மவுனமாக நிற்கவேண்டியதிருக்கிறது. ஒருவித தார்மீக அறம் என்னை குற்ற உணர்ச்சியில் ஆழ்த்துகிறது. ஈழத் துயரத்திற்கு நீ களத்தில் என்ன செய்தாய்? என்று என் மனசாட்சியே கேட்பதால் குற்ற உணர்ச்சியில்தான் இன்னும் இருக்கிறேன்.

**<u>நீங்கள் சாதிக்கவேண்டும் என்று நினைப்பது?</u>**

வெளிச்சம் படாமல் இருக்கும் பெண் கவிஞர்களுக்காக ஏதாவது செய்யவேண்டும் என்று நினைக் கிறேன். செ. பிருந்தா, மு. சத்யா, சக்தி ஜோதி, கு. உமாதேவி, கல்பனா என்று எத்தனையோ பெண் கவிஞர்கள் சிறப்பாக எழுதிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் வெளிச்சம் அதிகம்படாமல் இருக் கிறார்கள். அவர்களின் படைப்பு கள் குறித்த புத்தகம் கொண்டு வரலாம் என்றிருக்கிறேன். லதா ராமகிருஷ்ணன் எழுதுகிறார், மொழிபெயர்க்கிறார், களப்பணி யாளராக இருக்கிறார். ஆனால் அவர் அவ்வளவாக பரவலாக அறியப்படவில்லை. அப்படியிருந் தும் தனக்கான விஷயங்களை

அவர் எப்போதும்போல் செய்து கொண்டே இருக்கிறார்.

**<u>உங்களின் கவிதைகள் வட்டார வாழ்வியல் சார்ந்தே இருக்கிறது. இம்மாதிரியான கவிதைகளை எழுதத் தூண்டியது எது?</u>**

என் ஊரின் கொத்தனாரம்மா, நூறு நாள் வேலை செய்யுற அம்மா, எலந்தை அடை செய்யும் அம்மா.. என்று எனக்கு தெரிந்த எங்கள் ஊர்ப் பெண்களிடமிருந்து தான் நான் எல்லாவற்றையும் எடுத்துக்

கொள்கிறேன். நான் வாக்கிங் செல்வதை கேலி செய்வார்கள். "நடக்கிறதுக்குன்னு வர்றியாப்பா என்று கேலி செய்வார்கள். உரிமையோடு வர்க்கத்தை அவ்வளவு அழகாக கேலி செய்வார்கள். "அதெல்லாம் பாத்தா நாங்க இங்க உட்கார்ந்து வேல பாத்துக்கிட்டு இருக்க முடியுமா. செமதி வருதுங்குறதுக் காக நான் மாத்திக்க முடியுமான்னு சொல்லும்போது முகத்தில் அறையும் உண்மையாக இருக்கும். அங்கிருந்துதான் என் படைப்பு ஆரம்பமாகும். இளம்பிராயத்தில் எங்க ஊர் பாலத்தைக் கடக்கும் போது அங்கே கொஞ்சம் நேரம் அமர்ந்துவிட்டுதான் செல்வேன். என்னுடைய தந்தையை இழந்த சமயத்தில், நான் அப்படி பாலத் தில் அமர்ந்திருக்கும்போது, என்னைக் கடந்து போகிறவர்கள் எல்லாரும், "மனச விட்றாதப்பா, மனச விட்றாத, மனச விட்றாரதாத்தா என்று சொல்லிவிட்டுச் செல்வார்கள். அதற்கு ஈடான கவிதையை நான் பார்க்கவில்லை. பத்து வரியில் சொல்ல வேண்டியதை அந்த இரு வார்த்தைகளில் உணர்ந்தேன். அப்போதுதான் இந்த மக்களுடைய மொழியில் எழுதவேண்டும் என்று முடிவெடுத்தேன். சிலர் அதை கரிசல் இலக்கியம், பிற்போக்கு இலக்கியம், அது வெறும் தகவல்களின் தொகுப்பு என்றெல்லாம் சொல்லலாம். ஆனால் நான் அதிலிருந்துதானே வந்திருக்கிறேன். நான் அதைத்தானே பேசுகிறேன். மேலைநாட்டில் இருந்து ஆங்கிலத்தில் வேர்ட்ஸ் வொர்த் நாட்டுப்புறத்தைப் பற்றி எழுதினால் அவர் தலைசிறந்த கவிஞர் என்று கொண்டாடுவார்கள். நான் செவலக்காளையைப் பற்றியோ, வைக்கோல் போரையோ, மாட்டுச் சாணத்தைப் பற்றியோ எழுதினால், "இவர் இப்படித்தான் கிராமம் சார்ந்து மட்டும்தான் எழுதுவார். பெண்ணியம் சார்ந்த கவிதை எழுதுவது கிடையாது என்று விமர்சனம் வைப்பார்கள்.

வேரில் இருந்துதான் உண்மை யான படைப்பாக கவிதைகள் வருமென்று நம்புகிறேன்.

அப்படித்தான் என் கவிதைகள் வருகின்றன.

**சமகால பெண்ணியக் கவிதைகள் குறித்த உங்கள் பார்வை என்ன? குறிப்பாக பெண்கள் எழுதிவரும் உடலரசியல் குறித்து என்ன நினைக்கிறீர்கள்?**

இதுவரை ஆண்களுக்கு மட்டுமேயான ஒரு தளம்; ஆண்கள் மட்டுமே பேசிவந்த ஒரு விஷயம்; ஆண்கள் மட்டுமே பகிர்ந்துகொள்ள வேண்டிய விஷயம் என்று இருந்த ஒன்றை முற்றிலுமாக உடைத்தெறிந்திரு கிறார்கள். ஆனால் இது ஒன்றும் புதிது கிடையாது. ஔவையார் சொன்னதையும், ஆண்டாள் சொன்னதையும், வெள்ளிவீதியார் சொன்னதையும்விட இது ஒன்றும் புதிதல்ல. அப்போது முதலே இருந்த ஆதிக்குரல்தான் இது. ஆதியில் பெண், தன்னுடைய காமத்தையும், காதலையும் வெளிப் படையாகச் சொல்லி யிருக்கிறாள். ஒரு படைப்பாளியை இப்படி எழுதுங்கள்- அப்படி எழுதுங்கள் என்று சொல்ல முடியாது. உடலரசியல் குறித்து ஒரு ஆண் எழுதினால் விமர்சனம் எழுவது கிடையாது. அதே பெண் எழுதினால் அவளது நடவடிக்கையோடு அது ஒப்பிடப் படுகிறது. அவர் குடும்பப் பெண்தானா என்று சந்தேகம் எழுப்புகிறார்கள். அப்படித்தான் நிலைமை இருக்கிறது. இது மாறவேண்டும். ஒன்றை மறந்து விடக் கூடாது. ஆண்டாளைவிட காமத்தை அவ்வளவு வெளிப்படையாக, அதேசமயத்தில் கவித்துவமாக இதுவரை யாரும் சொல்லவில்லை.

**<u>கிராமத்து சிறு தெய்வங்கள் உங்களின் படைப்புகளில் அதிகம் வருவது ஏன்?</u>**

என் சிறு பிராயம் தொட்டு தொடர்ந்து என்னுடன் பயணம் செய்யும் தோழி வனப்பேச்சி. அவளை நான் மற்றவர்களைப்போல் குலதெய்வமாகப் பார்க்க வில்லை. என்னுடைய உருவத்தின் மறு உருவமாகவே அவளை நினைக்கிறேன். நான் எப்படியெல்லாம் இருக்க வேண்டுமென்று ஆசைப்படுகின்றேனோ, அப்படியெல்லாம் என்னால் இருக்க முடியவில்லை. ஆனால் பேச்சி இருக்கிறாள். அவளை நான் சுதந்திரத்தின் ஒரு பிரதிபலிப்பாகவே பார்க்கிறேன். மழை, காற்று எல்லாவற்றையும் தாங்கி நிற்கும் அவளது வல்லமை கண்டு அவள்மீது அலாதியான அன்பு வைத்திருக்கிறேன். பெண்மையின் முழு சுதந்திரத்திற்கான குறியீடு வனப்பேச்சி. என் வேர்கள் நிரவியிருக்கின்ற கிராமம் விட்டு, லௌகீக இருத்தலுக் கான இடமான இந்த நகரத்தில் என் அலைந்துணர் வையும், ஒன்றாமையையும், நிர்கதியையும், பகிர்ந்து கொள்ளும் சக பயணி. அவளுடான என் உறவு பகுத்தறிவின் ஆய்தலுக்கு உட்படாத ஒரு நறுமணமாய் என் கவிதைகளில் ஊடாடி இருப்பதாய் நான் உணர்கிறேன்.

**<u>சமீபகாலமாக அரங்கச் செயல்பாடுகளில் அதீத ஆர்வம் காட்டிவருகிறீர்களே?</u>**

அடிப்படையில் நான் பரதக்கலைஞர். பள்ளிப் பருவத்திலேயே எனக்கு நாடகப் பயிற்சி இருக்கிறது. மல்லாங்கிணறிலிருந்து சென்னைக்கு இடம்பெயர்ந்த பின்னர்தான் எனக்கு நவீன நாடகம் அறிமுகம். ஆங்கில நாடகங்களைவிட தமிழ் நாடகங்கள்தான் எனக்குப் பிடித்தன. அப்போது தமிழ்நாடக அரங்கில் இருக்கும் பிரசன்னா ராமசாமி, அ. மங்கை, வெளி.ரங்கராஜன் போன்றோரின் பரிச்சயம் கிடைத்தது. இதுவரை ஆறு

நாடகங்கள் நடித்திருக்கிறேன். அ. மங்கை இயக்கத்தில் கவிஞர் இன்குலாப் எழுதிய குறிஞ்சிப்பாட்டு, பிரசன்னா ராமசாமி இயக்கத்தில் பாரதியார் கவிதைகள்.... இதில் நானும் நடிகை ரோகிணியும் நடித்தோம். வெளி. ரங்கராஜன் இயக்கத்தில் கு.ப.ரா. எழுதிய அகலிகை, கு. அழகிரிசாமி எழுதிய "வஞ்சமகள்&ஹல்ர்ள்; முதலான நாடகங்களில் நடித்தேன். "வஞ்சமகள் நாடகத்தில் நான் சூர்ப்பனகையாக நடித்தேன். அதேபோல் "கூத்துப்பட்டறை ஜெயராமன் இயக்கத்தில், "மகாத்மா காந்தியின் கடைசி ஐந்து நிமிடங்கள் நாடகத்தில் நடித்தேன். ஜெயராமன் தற்போது ஷேக்ஸ்பியரின் "மேக்பத் பற்றி தமிழில் முதல்முறையாக நாடகம் செய்யவிருக்கிறார். தமிழ் நாடகங்களில் இது மிகப்பெரிய முயற்சி. எனக்குத் தெரிந்து ஷேக்ஸ்பியரை தமிழில் மிகபெரிய அளவில் கொண்டு வரும் முயற்சி இதுதான். ஷேக்ஸ்பியரின் "மேக்பத் நாடகத்தில் நான் லேடி மேக்பத்தாக நடிக்கிறேன். அதுதான் அந்த நாடகத்தின் பிரதான கதாபாத்திரம். வழக்கம்போல தமிழ் நாடகங்களுக்கு புரவலர்கள் கிடைப்பதில்லை. ஆங்கில நாடகங்களுக்கு மட்டும் புரவலர்கள் நிறைய இருக்கிறார்கள். புரவலர்கள் கிடைக்காததால் நாடக ஒத்திகை முடிந்தும், அரங்கேறாமல் இருக்கிறது.

என்னைப் பொருத்தவரைக்கும் அரங்கம் என்பது ஒரு பெண்ணுக்கான வெளி. அங்கு உடல் குறித்த ஒரு சிந்தனை கிடையாது. ஆண் உடல், பெண் உடல் என்ற பாகுபாடு அரங்கத்தில் கிடையாது. அது ஒரு மனித உடல்தான். வேறு எல்லா இடத்திலும் பெண்ணாகப்பட்டவள் இப்படி உட்காரவேண்டும், அப்படி உட்காரவேண்டும் என்பது இருக்கும். ஆனால் அரங்கத்தில் அப்படியல்ல. எல்லாமே மனித உடல்கள்தான். அது ஒரு கட்டற்ற சுதந்திரத்தைக் கொடுக்கிறது.

கதாபாத்திரத்தின் வசனத்தை உச்சரிப்பது, உள்ளே நுழைவது, ஒத்திகை என்று ஒவ்வொன்றுமே நாடக நிகழ்வுகளுக்கு சமமானதுதான். அரங்கம் என்பதுதான் என்னுடைய இன்னொரு முகம். என்னுடைய இன்னொரு முகம் அப்படியாகத்தான் இருக்கவும் விரும்புகிறேன். ஷேக்ஸ்பியரின் அந்தக் காலத்து படைப்பில் சமகாலத்தன்மை இருக்கிறது. பொதுவாக நாடகத்திற்கு சமகாலத்தன்மை முக்கியம். லேடி மேக்பத் கதாபாத்திரத்தில் ஒத்திகை செய்தபோது எனக்குள் பல கேள்விகள் எழுந்தன. மாளாத குற்ற உணர்ச்சிக்கு ஆளாகி நிற்பாள் லேடி மேக்பத். எல்லாக் கொலைகளையும் செய்யச்சொல்லி கணவனைத் தூண்டிவிட்டு, கொலை செய்த கைகளைக் கழுவிக் கொண்டே இருப்பாள். "அரேபியாவின் அத்தனை வாசனாதி திரவியங்களாலும் என்னுடைய கைகளில் உள்ள ரத்தக் கறைகளைக் கழுவ முடியாது; என்பதுதான் அந்த நாடகத்தின் புகழ்மிகு வசனம். இந்த வசனத்தை நான் பேசி ஒத்திகை பார்த்தபோது, இலங்கையின் முள்ளிவாய்க்கால் சம்பவம்தான் நினைவுக்கு வந்தது. லேடி மேக்பத்தின் வசனம் ராஜபக்சே வுக்கும் பொருந்தும். எந்த வாசனைத் திரவியங்களாலும் அவரது கைகளைக் கழுவமுடியாது.

சந்திப்பு: அமுதா தமிழ்நாடன், கதிரவன்

## தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைப் படைப்புகள்












## தமிழச்சி தங்கபாண்டியனின் உரைநடைப் படைப்புகள்












<u>தமிழச்சி அளித்த பேட்டிகளின் தொகுப்பு</u>




<u>தமிழச்சி படைப்புகள் குறித்த விமர்சனங்களின் தொகுப்பு</u>



# பெண்ணிய நோக்கில் தமிழச்சி தங்கபாண்டியன் படைப்புகள்

(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் (PH.D) பட்டத்திற்காகப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு)


ஆய்வாளர்

**ஆ. பழனியாயி**

பதிவு எண்: 0914 – 2013/ 2014

நெறியாளர்

**முனைவர் மு.பழனியப்பன்**

தமிழ் உயராய்வு மையம்

மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி, சிவகங்கை





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தரமதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் $A^+$ தகுதி மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம்-பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

**காரைக்குடி – 630 003**

**மே 2019**

## முடிவுகள்

**பெண்ணிய நோக்கில் தமிழச்சி தங்கபாண்டியனின் படைப்புகள்** என்ற தலைப்பில் செய்யப்பெற்றுள்ள இவ்வாய்வின் வழியாகப் பெறப்பட்ட முடிவுகள் பின்வருமாறு.

தமிழச்சி தங்கபாண்டியன் கிராமப் பின்புலம் சார்ந்த படைப்பாளர் ஆவார். இவர் தன் கவிதைகளில், உரைநடைகளில் தன் கிராமம் சார்ந்த பதிவுகளைப் பதிவு செய்யும் வட்டாரவழக்கு சார்ந்த படைப்பாளராக அறியப்பெறுகிறார். இவரின் இயற்பெயர் சுமதி என்பதாகும். இவர் தன் படைப்பினை முதன் முதலில் தமிழச்சி என்ற பெயரில் எழுதியதாலும், சுமதி என்ற பெயரில் வேறு ஒரு படைப்பாளர் இருந்த நிலையிலும் தன் பெயரை இவர் தமிழச்சி என்று மாற்றிக்கொண்டார். இவரின் தந்தையார் பெயரான தங்கபாண்டியன் இவரின் பின்னொட்டாக அமைந்துகொள்ள இவர் தமிழச்சி தங்கபாண்டியன் என்ற படைப்பாளராக ஆனார்.

இவர் ஆங்கில இலக்கியம் படித்து, ஆங்கிலத் துறை உதவிப் பேராசிரியராக இராணிமேரிக் கல்லூரியில் பணியாற்றினார். இவரின் அரசியல் நுழைவு காரணமாகத் தன் பணியை விட்டுவிட்டு இவர் முழுவதும் அரசியல் பணிகளில் ஈடுபட்டார்.

இவர் பல கவிதைத் தொகுப்புகளையும், உரைநடைத் தொகுப்புகளையும் எழுதியுள்ளார். இவற்றில் இவரின் பெண்ணியக் கருத்தாக்கங்களைப் பதிவு செய்துள்ளார். இவர் நடன, நாடகக் கலைஞராகவும் விளங்கி வருகிறார்.

இவரின் கவிதைப் படைப்புகளாக எஞ்சோட்டுப்பெண், வனப்பேச்சி, மஞ்சணத்தி, அருகன், ஆகிய நான்கும் உரைநடைப் படைப்புகளான பாம்படம், சொல்தொடும் தூரம், மயிலிறகு மனசு, மண்வாசம் ஆகிய நான்கும் அமைகின்றன. மேலும் இவரின் பேட்டிகள் தொகுக்கப்பெற்றுத் தனி நூலாக

பேச்சரவம் கேட்டிலையோ என்ற தலைப்பில் வந்துள்ளது. இவரின் படைப்புகள் பற்றிய விமர்சனங்கள் காற்று கொணர்ந்த கடிதங்கள் என்ற தலைப்பில் வெளிவந்துள்ளது.

தமிழச்சி தங்கபாண்டியனின் கவிதைகளில் மரபு சார்ந்த பெண்ணியத் தன்மை காணப்படுகிறது. இருப்பினும் ஆண் ஆளுமை, ஆணின் பார்வை காரணமாகப் பெண்கள் பாதிக்கப்படும் நிலையையும் எடுத்துரைத்து, இந்நிலை மாறவேண்டும் என்ற நிலையிலும் இவர் தன் கவிதைகளைப் படைத்துள்ளார்.

இவரின் கவிதைகளில் பெண்களின் விடுதலைக் குறியீடாக மைனா என்ற பறவை குறிக்கப்படுகிறது. பெண்ணியவாதிகளின் நிலைப்பாட்டை அவள், நான், இவள் என்ற மூன்று பாத்திரங்களில் அமைத்து – பெண்மைநிலை, பெண்ணிய நிலை, பெண் நிலை என்ற வகைப்பாட்டில் இம்மூன்று பாத்திரங்களுக்கும் உரிய நடத்தைகளை இவர் தன் கவிதைகளில் காட்டியுள்ளார்.

பெண்ணின் பெருஞ்சக்தியாக உயிர்களைப் பிறப்பித்தல் என்பது அமையும் நிலையில் அது குறித்து எவ்வித பெருமையும் கொள்ளாமல், அது குறித்து எவ்வித மேம்பாட்டையும் புரிந்து கொள்ளாமல் இச்சக்தி கொண்டே பெண்களை அடக்கி வைக்கும் ஆண்நிலைப்பாட்டை இவர் கடுமையாகத் தன் கவிதைகளில் விமர்சித்துள்ளார்.

பெண் எப்போதும் ஆணின் பின்னிணைப்பாகவே விளங்கவேண்டும் என்ற ஆண்மனப்பாங்கு மாறவேண்டும் என்பது இவரின் நோக்கமாக உள்ளது.

இவர் வனப்பேச்சி என்ற தொன்மத்தைத் தன் தோழியாகக் கருதி அவ்வனப்பேச்சியுடன் தன் வாழ்வு நினைவுகளைப் பகிர்ந்து கொள்ளும் போக்கில் கவிதைகளைப் படைத்துள்ளார். இதுபோன்ற துணை ஒன்று அனைத்துப் பெண்களுக்கும் அமையவேண்டும் என்ற அடிப்படையில் இவரின் வனப்பேச்சியுடனான இணைப்பு விளங்குகின்றது.

இவர் பல தொன்மப்பாத்திரங்களைத் தன் கவிதைகளில் கையாண்டுள்ளார். அத்தொன்ம பாத்திரங்கள் ஆணின் ஆசையில் பெண் வீழ்ந்த நிலைப்பாட்டினைக் காட்டுவனவாக உள்ளன. எனவே பெண்களின் இழிநிலைக்குக் காரணம் ஆண்களின் ஆசைகளே என்பதை இவரின் கவிதைகள் சுட்டிநிற்கின்றன.

இவரின் கவிதைகளில் பெண் மொழிக் கூறுகள் காணப்படுகின்றன. ஆண் பயன்படுத்திய மொழிநிலைப்பாட்டில் இருந்து பெண் படைப்புகள் வேறுபட பெண் மனம் சார்ந்த மொழிக் கூற்றின் அடிப்படையில் தன் கவிதைகளைப் படைத்துக்கொள்ளவேண்டும் என்ற நிலையில் இவர் தன் கவிதைகளில் பெண் மொழி அடையாளங்கள் பலவற்றைக் கொண்டு தன் கவிதைப் படைப்புகளைப் படைத்தளித்துள்ளார்.

இவரின் கவிதைகளில் சகோதரித்துவப் போக்கு காணப்படுகிறது. ஒரு பெண் தன் உடன் பிறந்தாளுக்கு உரிய நிலையில் உதவும் போக்கில் அமையும் கவிதைகளை இவர் பெண்ணினத்திற்காகப் படைத்தளித்துள்ளார். இப்பண்பு இவர் கவிதைகளில் காணக்கிடைக்கும் முக்கியமான அடையாளம் ஆகும்.

இவரின் கவிதைப் படைப்புகள் பெண் உரிமையை, பெண்துயரத்தை, பெண் மீட்சியை நோக்கி எழுதப்பெற்றுள்ளன என்று உணர்ந்து கொள்ள முடிகின்றது.

தமிழச்சி தங்கபாண்டியன் பல உரைநடைப் படைப்புகளையும் படைத்துள்ளார். இவற்றின் நடையும், தலைப்புகளும் கவிதைத் தன்மையுடன் அமைந்து விளங்குகின்றன.

இவரின் வாழ்வில் நிகழ்ந்த அனுபவங்களைக் கொண்டு இவர் எழுதிய கட்டுரைகள் "பாம்படம்" என்ற பெயரில் தொகுக்கப்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் கணவன், குழந்தைகள் என்ற உறவுப்பிணைப்பில் ஏற்படும் நெருக்கடிகள்,

முதுமை, தனிமை, கணவன் இறப்பு போன்ற சூழல்களில் பெண்கள் படும் துயரங்கள், பெயர் மாற்றமுடியாமை போன்ற நிகழ்வுகளால் பெண்கள் படும் இன்னல்கள் போன்றன எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. இதன்வழி பெண்ணிலக்கியமாகவே பாம்படம் விளங்குகிறது.

“மயிலிறகு மனசு” என்ற கட்டுரைத் தொகுப்பு அவள் விகடன் என்ற மகளிர் இதழுக்காக தான் சந்தித்த மகளிர் பற்றி, தமிழச்சி தங்கபாண்டியனால் எழுதப்பெற்ற கட்டுரைகள் அடங்கிய தொகுப்பாகும். இத்தொகுப்பில் தூய்மைப் பணியைச் செய்யும் பெண்ணின் கலை உள்ளம் முதல் லலிதா நகைக்கடையின் மகள் வரை என்ற நிலையில் அடித்தட்டுப் பெண்கள் முதல் மேல்த்தட்டுப் பெண்கள் வரை ஒரே தட்டில் வைத்து அறிமுகம் செய்யப்பெற்றுள்ளது. இக்கட்டுரைகளின் வழியாக பெண்களின் மதிப்பும், மரியாதையும் உலகிற்கு வெளிப்படுத்தப்பெற்றுள்ளது. பெண்களின் சமுதாய இருப்பு என்பது மிக முக்கியமானது என்பதையும் இக்கட்டுரை காட்டுகின்றது.

இவரின் கட்டுரைத்தொகுப்புகளில் ஒன்று மண்வாசம் என்பதாகும். இத்தொகுப்பில் இரு பகுதிகள் விளங்குகின்றன. ஒரு பகுதி மண்ணும் மருத்துவமும் என்பதாகும். மற்றொரு பகுதி மண்ணும் மனசும் என்பதாகும். இவ்விரு பகுதிகளிலும் பெண்கள் பற்றிய பல பதிவுகள் அமைந்துள்ளன. குறிப்பாகப் பெண்களின் மருத்துவ அறிவுத்திறன், நாட்டுவைத்திய முறைகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. மேலும் மண்ணும் மனசும் என்ற பகுதியில் தான் அனுபவித்த கிராமத்து மனித வாழ்வு பற்றியும் இவர் எடுத்துரைக்கிறார். பெரும்பாலும் இவர் பெண்களுடன் நிகழ்த்திய அனுபவங்களே இங்குக் கட்டுரைகளாக ஆக்கப்பெற்றுள்ளன. இதன் காரணமாக இத்தொகுப்பும் பெரும்பான்மை பெண் சார்ந்த பதிவுகள் கொண்ட தொகுப்பாக அமைந்து சிறக்கின்றது. இத்தொகுப்பு நிறைவடையும்நிலையில் நிலவு என்ற முடிப்புடன் முடிகின்ற நிலை இவரின் உரைநடை திட்டமிடப்பட்டு எழுதப்பெற்ற உரைநடை என்பதைக் காட்டுவதாக உள்ளது.

விமர்சனப் பாங்குடைய உரைநடைப் படைப்பு என்ற நிலையில் அமைவது இவரின் ‘சொல் தொடும் தூரம்’ என்ற தொகுப்பாகும். இத்தொகுப்பில் இவர் மதிப்புரை, முன்னுரை, அணிந்துரை, வாழ்த்துரை போன்ற நிலையில் தந்த பேச்சுரைகள், மற்றும் எழுத்துரைகள் தொகுக்கப்பெற்றுள்ளன. இத்தொகுப்பில் ஆண்களின் படைப்புகளை விமரச்சிக்கையில் ஓர் அன்னியத்தன்மையும், பெண்கள் படைப்புகளை விமரச்சிக்கையில் சகோதரித்துவ மனப்பாங்கும் இவரிடம் காணப்படுவதை உணரமுடிகின்றது.

தமிழச்சி தங்கபாண்டியன் சமுதாய உணர்வுடைய படைப்பாளராகவும் விளங்குகிறார். இவரின் படைப்புகளில் கிராமசமுதாயம், நகர சமுதாயம் சார்ந்த பெண்களின் வாழ்க்கைமுறை எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. சமுதாயம் என்ற பொது அமைப்பின் கட்டுக்கோப்பினை உணர்ந்து அதனுள் ஓர் அங்கமாக விளங்கும், பெண் சமுதாயம் முன்னேற தன் படைப்புகள் வழி தமிழச்சி தங்கபாண்டியன் முயன்றுள்ளார். இவரின் படைப்புகளில் அப்பத்தா, அம்மா, அத்தை, மகள் என்ற நிலைகளில் அமையும் குடும்பப் பெண்களின் சமுதாயநிலைப்பாடு எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. கிராமசமுதாயப் பெண்களாக இவரின் மல்லாங்கிணறு சார்ந்த பெண்களின் வாழ்க்கைமுறை விவரிக்கப்படுகிறது. பெரும்பாலும் கிராமப்பெண்கள் அறியாமையில் இருக்கும் நிலைப்பாட்டை இவர் காட்டியுள்ளார். நகரசமுதாயத்தில் கிராமத்தை மறந்து அகதி வாழ்க்கை வாழும் பெண்களின் நிலைப்பாட்டினை இவர் காட்டியுள்ளார்.

உலக சமுதாயப் பெண்களையும் இவரின் படைப்புகள் காட்டிநிற்கின்றன. இலங்கைப் பெண்களின் பேரழிவு குறித்த கவலை இவரின் படைப்புகளில் காணக்கிடைக்கின்றது. அரசியல் விடுதலை தேடும் இலங்கைப் பெண்களின் ஆவல் இவரின் படைப்புகளில் வெளிப்பட்டு நிற்கிறது. இவைதவிர உலகின் பல பகுதிகளில் வாழும் பெண்களின் துயரங்களை இவர் எடுத்துரைத்து, தன் படைப்பில் உலக சமுதாயப் பெண்களின் நிலைப்பாடுகளைக் காட்டியுள்ளார்.